பாகனேரி

தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடாகப்

பாகனேரித் தமிழ்ப்புரவலர்

திருவாளர்

வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்

அவர்கள் பொருளுதவியால்

வெளியிடப்பெற்றது.

---

இவ் வெளியீட்டினால் கிடைக்கப் பெறுகிற

சிறிய ஆதாயமும்

இச் சங்கத்தின் ஆதரவிலுள்ள

திருவள்ளுவர் நூல்நிலயத்திற்கு

உரிமையாக்கப் பெறும்.

---

August 1938



The Jupiter Press, Madras.



பாகனேரித் தமிழ்ப் புரவலர்

வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்

# பதிப்புரை

---

சங்கமருவிய தொகைநூல்கள் எட்டனுள் கற்றறிந்தாரேத்துங் கலி என்று போற்றப்படும் கலித்தொகை ஆறாவதாகும். தமிழ் நூல்களை மேற்கணக்கு, கீழ்க்கணக்கெனப் பிரிக்கும் முறைப்படி இந்நூல் மேற்கணக்கின்பாற் சேர்க்கப்படும் பெற்றித்தாம்.

“இறைவாழ்த்தோன் றேழைந்து பாலைநா லேழொன்
றிறைகுறிஞ்சி யின்மருத மேழைந்(து)-துறைமுல்லை
யீரெட்டொன் றுநெய்த லெண்ணான்கொன் றைங்கலியாச்
சேரெண்ணே மூவைம்ப தே.”

என்றபடி இந்நூல் மதுரையாசிரியர் நல்லந்துவனா ரியற்றப்பெற்ற கடவுள்வாழ்த்துச் செய்யு ளொன்றும்; சேரமான் பாலை பாடிய பெருங் கடுங்கோ என்பாரியற்றிய ௩௫ செய்யுட்களைக் கொண்ட பாலைக்கலியும், தொல்லாசிரியர் கபிலர் ௨௯ செய்யுட்கள் கொண்டதாக வியற்றிய குறிஞ்சிக்கலியும், மதுரை மருதனிளநாகனார் ௩௫ செய்யுட்கள் கொண்டதாயியற்றிய மருதக்கலியும், சோழன் நல்லுருத்திரன் இயற்றிய ௧௭ செய்யுட்கள்கொண்ட முல்லைக்கலியும், கடவுள்வாழ்த்துச் செய்யு ளியற்றிய ஆசிரியர் நல்லந்துவனாரே ௩௩ செய்யுட்கள் கொண்டதாகப் பாடி முடித்த நெய்தற்கலியும் ஆகக் கலிப்பகுதிகள் ஐந்துங் கொண்டிலகுவதாகும். தமிழிலக்கணப் பெருநூல்களிற் கூறப்படும் அகப்பொருட் பகுதிக்கு இலக்கியமாய்த் திகழ்வது சிறந்த இத் தொகைநூலேயாம். பண்டைத் தமிழர் கண்ட ஐந்திணைப் பாகுபாட்டின் தனிச் சிறப்பும், மற்றன்னார்தம் மாண்புறு ஒழுக்கமும் உயர்வும் இந்நூலைக் கற்பார்க்குத் தெள்ளிதிற் புலனாம். கலிப்பா வகையுட் சிறந்த ஒத்தாழிசையா லியன்ற ௧௫௦ பாக்களைக்கொண்ட இச் செந்தமிழ்ப் பெருநூல் தேன் செறிந்த மொழிகளானும் தெள்ளிய உருவகங்களானும் இயன்று கற்போருள்ளத்தைக் கவருந் தகைமைத்தாம். மக்கள்தம் நல்வாழ்விற்கு வேண்டிய நன்னெறிகள் பலவற்றை இடையிடையே தொகுத்தும் விரித்துஞ் சுட்டிச் செல்வதும் இந்

நூலின் சிறப்புக்களில் ஒன்றாம். இவ்வாறெல்லாம் இந்நூல் சிறந்து விளங்குவதனாலேயே,

> “திருத்தகு மாமுனி சிந்தா மணிகம்பன்
> விருத்தக் கவிவளமும் வேண்டேம்—திருக்குறளோ
> கொங்குவேண் மாக்கதையோ கொள்ளேம் நனியாள்வேம்
> பொங்குகலி யின்பப் பொருள்.”

என்று கற்றறிந்த பிற்றைநாட் புலவர்களால் இது போற்றி யேத்திப் புகழப்படுவதாயிற்று.

இந்நூலுக்கு உரையியற்றினார் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரே. இப் பெரியாரது உரைத்திறம் தமிழ் நாட்டார் இதுகாலை நன்கறிந்த தொன்றேயாம். தலைசிறந்த இவருரையுடன் இந்நூலை முதற்கண் அச்சியற்றி வெளியிட்டவர் காலஞ்சென்ற தண்டமிழ்ப் பேராசிரியர் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களேயாம். (அவர் புகழ் என்றும் பொன்றாது நின்று நிலவுவதாக!) அவர் பதிப்பினை யடுத்துச் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புகள் பலவற்றோடும், கடலெனப் பரந்த மேற்கோட் குறிப்புகளோடும் மிகவுஞ் சிறந்த முறையில், காலஞ்சென்ற திரு. இ. வை. அனந்தராமையரவர்களால் ஒரு பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. அண்மையில் திரு. தை. ஆ. கனகசபாபதி என்பார் பாலைக்கலிக்கு மட்டும் புத்துரையொன் றியற்றி வெளியிட்டுள்ளார்.

இனி, குறைந்த விலையில் சிறந்த நூல்கள் சிலவற்றையேனும் அச்சிட்டுத் தமிழ்நாட்டாரிடைப் பரப்புவது டாகனேரித் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தாரின் தலையாய நோக்கமாகும் என்பது இதற்கு முன் வெளிவந்த அச் சங்கவெளியீடாகிய திருவாசகத்தின் பதிப்புரையிற் குறிக்கப்பட்டது. அதற்கேற்ப, இந்நூல் இப் பொழுது இறைவன் றண்ணருளால் இனிது முடிந்து வெளிவருகிறது. நச்சினார்க்கினிய ருரையிற் சிற்சில இடங்கள் விளக்கப்படுதல் இன்றியமையாததாகும் என்று தோற்றியமையால், ஏறக்குறைய க00 பக்கங் கொண்ட அளவில் ஓர் உரைவிளக்கம் எழுதப்பட்டு இந் நூலிறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளது. அஃது ஆராய்ச்சியாளர்க்கும் மாணவர்கட்கும் பெரிதும் பயன்படும் என்று நம்புகின்றேன்.

## கலித்தொகைப் பதிப்பாசிரியர்கள்



சி. வை. தாமோதரம் பிள்ளை



இ. வை. அனந்தராமையர்

இந்நூலை அச்சிடுங்கால் உடனிருந்து பிழை திருத்தியும் மேற்கோள்கள் குறித்துத் தந்தும் உதவிய தருமையாதீன வித்துவான் திரு. காழி. சிவ. கண்ணுசாமி, பி.ஏ. அவர்கட்கும், உரை விளக்கமும், கலித்தொகை மாட்சியும் எழுதி யுதவிய தமிழமலை இளவழகனுர் அவர்கட்கும், இப்பதிப்பினை மிகவும் அழகிய முறையில் அச்சிட்டு வெளிப்படுத்தி விற்பனை செய்துதர ஏற்றுக்கொண்ட திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகும்.

இவ் வெளியீட்டின் விற்பனையிலிருந்து கிடைக்கப் பெறுகிற சிறிய ஆதாயமும் பாகனேரித் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவிலுள்ள திருவள்ளுவர் நூல்நிலயத்திற்கு உரிமையாக்கப்பெறும்.

தமிழ் மெய்யன்பர்கள் இப்பதிப்பினையும் இதனை யடுத்து விரைவில் வரவிருக்கும் ஏனைய நூல்களையும் வாங்கிப் போற்றி எற்கு ஊக்கமளிப்பார்களாக.

பாகனேரி,
வெகுதானிய ஆடி உ௬
10—8—1938.

மு. காசிவிசுவநாதன்.




# பொருளடக்கம்




# கலித்தொகை மாட்சி

## க. இலக்கிய நலம்

கருத்துக்களைச் சுவைதோன்றச் சொல்லும் நூல்களையே பொதுவாக யாரும் விரும்புவர். அல்லல் மிகுந்த இவ் வுலகவாழ்க்கையில் உடம்போம்பும் முயற்சியினால் அவ்வப்போதும் நிலைதளர்ந்துபோகும் நினைவையும் அறிவையும் உணர்வையும், மீண்டும் நற்கருத்துக்களைச் சுவைதோன்ற ஊட்டி எழுச்சியும் இன்பமும் பெறவைத்து அவற்றை மேன்மேல் வளர்ச்சிபெறச் செய்தற்குச் சிறந்த இலக்கிய நூல்கள் மிகவும் இன்றியமையாதனவாயிருக்கின்றன. தனித்த நேரங்களிலும், கருத்தொருமித்த காதலர் நண்பர் சான்றோர் முதலியவர்களோடு அளவளாவு நேரங்களிலும் உயர்ந்த உள்ளக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியுந் தருதற்கு இவ் விலக்கியநூற் பயிற்சிகள் பெரிதும் உதவியாயிருக்கும். கலித்தொகையில் வரும் சில உரையாடல்களின் அறிவு நுட்பங்களும் ஏனை அருமைகளும் அறிந்து இன்புறவல்ல தமிழ்த்திருவுடையார்க்கு இவ்வுண்மை இனிது விளங்கக்கூடும். எடுத்துக்காட்டாகக் கலி: ௱௭, கூ௱௭-ம் பாட்டுகளின் உரையாடல்கள் நினைவுகூரற்பாலன.

இனி, இலக்கிய நூல்கள் இங்ஙனமெல்லாஞ் சுவை மலிந்து தோன்றற்கு அவை மேற்கொள்ளும் அழகிய நூன்முறைகள் பல உண்டு. அவற்றுட் சில வருமாறு:

**க. சுவைப் பகுதிகள் தேர்ந்தெடுத்தல்:** உணர்வுக்கு இன்பந் தரவல்ல அழகான பொருட்பகுதிகளும் உயிர்களின் நல்லியல்புகளும் உலகத்தில் என்னென்ன உண்டோ அவற்றையே முதன்மையாகத் தெரிந்தெடுத்து இலக்கிய ஆசிரியன்மார் எழுதுவர். இவ்விலக்கிய அழகியல்புகள் அப்படியே இறைவன் திருவுள்ளத்தின் தூய பிழிவேயாம்.* அருமையான படக்காட்சிகள் அமைக்க விரும்பும் நற்கலைஞர்கள் அவற்றிற்கு அமையவேண்டும் உலகியற் காட்சிகள் பலவற்றையுங் கனிந்த அழகுள்ளனவாகவே தேர்ந்தெடுத்து நிழற்படங்கள் பிடிக்கக் காண்கின்றோம். காட்சிக்கினிய பூங்காக்கள், மலைப்படுகர்கள், கான்செறிவுகள், அழகு மாளிகைகள் முதலான நல்ல தோற்றங்களையே அவர்கள் தெரிந்தெடுக்கின்றனர். அங்ஙனந் தெரிந்தெடுக்குமிடத்தும், அவற்றை எந்தெந்தப் பக்கங்களிலிருந்து எந்தெந்த

---

* Bridges: *The Testament of Beauty* iii 32.

B B.

முறையாகப் படமெடுத்தால் மக்கட்கு எழுச்சியும் இன்பமும் நல்குமோ அவ்வாறே மிக முயன்று எடுக்கவுங் காண்கின்றோம். அதுபோலவே இலக்கிய ஆசிரியர்களான நற்கலைஞர்களுந் தம் நூல்களிற் சுவையான பாகங்களையே முதன்மையாகத் தெரிந்தெடுத்துக் கோத்து நமதுணர்வுக்கு நன்மை விளைப்பாராயிருக்கின்றனர்.

'முல்லைக்கலி'யில் அதன் ஆசிரியரான சோழன் நல்லுருத்திரன் என்னும் நல்லிசைப் புலவர் ஒரு தொழுவிலுள்ள ஏறுகளைப்பற்றிக் கூற நேரும்போது ஓரிடத்தில் (ரு : கக - உக) மிகக் கவர்ச்சியான அழகிய ஏறுகளையே முதன்மையாகத் தெரிந்தெடுத்துக் கோத்து நம்மை இன்புறுத்துகின்றார். ஒரு கரிய எருது என்றுமட்டுஞ் சொன்னால் அது கேட்பார்க்கு அவ்வளவு இன்பம் பயவாதென்று கருதிக் கால்கள் வெண்ணிறமாயும் உடம்பு கருநிறமாயுந் திகழ்கின்ற அழகிய ஏற்றைத் தெரிந்தெடுத்துச் சுவைப்ப உரைக்கின்றார். இங்ஙனங் கவர்ச்சி மிக்க இரு நிறங்கள் வாய்ந்த பளபளப்பான ஏறு பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாய் அழகின் எல்லையையே கடந்ததென்னும்படி அத்துணைப் பேரழகு தழைவதாயிருக்குமென ஆசிரியர் கருதினார்; கருதி அக்கருத்துத் தோன்ற அவரதனை,

"அணிவரம் பறுத்த வெண்காற் காரியும்"

என்று ஏற்ற அடைமொழிகள் புணர்த்தும் ஓதுவாராயினர். இங்ஙனமே அந்திவானம்போற் சிவந்த உடம்பில், அவ் வானத்திற் பூத்து விளங்கும் விண்மீன்கள்போல் வெண்ணிறப் புள்ளிகள் பரந்துள்ள அழகிய ஏறுகள் முதலானவற்றையும் ஆசிரியர் உரைத்துச் செல்வர். இங்ஙனம் பல.

இலக்கிய ஆசிரியன்மார் இவ்வாறெல்லாம் பெரும்பாலும் உலகத்திலுள்ள அழகுகளைத் தம் இலக்கியங்களுள் நிழற்பட மெடுத்தாற்போல ஒருங்கெடுத்து நிறுத்தி விளக்குதலால் அவ்வழகுகளைக் கண்டு மகிழ்தலில் இயற்கையே உள்ளம் வீழ்ந்து நிற்கும் ஆண்பெண்பாலா ரனைவர்க்கும் இவ்விலக்கியங்கள் எவ்வளவு உதவியாயிருக்குமெனச் சொல்லவும் வேண்டுமோ! ஒருநாள் உலாப்போனால் இப் பரந்த உலகத்தில் ஏதானும் ஒரு பகுதி அழகையே, அதுவுஞ் சற்று மேற்போக்காகவே கண்டு மகிழக்கூடும். எல்லா இடங்கட்கும் எல்லாரும் போதலும் இயலாது. ஆனால் இலக்கியங்களிலோ அவ்வழகுகளை இன்னும் ஆழமாகவுந் தெளிவாகவும் படக்காட்சிகளிற்போல உலகமெலாம் ஒருங்குகண்டு மகிழலாம்.

மேலும், உலகத்தின் படைப்பியற்கையைக் கூர்ந்து நோக்கும்போது அதன்கண் ஓர் அரிய மறைபொருள் பைய வெளிப்படுதலைக் காணலாம். உலகத்தில் இன்பத்துக்கு ஏதுவான அழகுகளும் துன்பத்துக்கு ஏதுவான

அருவருப்புகளுமென இவ் விரு பகுதிகளும் தலைமயங்கியே கிடக்கின்றன. ஒவ்வொரு பொருளிலும் இவ்விரண்டு மிருப்பது இயற்கையாயிருக்கின்றது. ஆயினும், எல்லா அருளும் ஒருங்குடைய இறைவன் தனது படைப்பின் மேற்பரப்பில் இன்ப நினைவுக்கு ஏதுவான அழகியல்புகளையே விளங்க விரித்துவைத்து ஏனைத் துன்பநினைவுக்கு ஏதுவான அழுக்கியல்புகளை எளிதிற் புலனாகாவகையாய் உண்மறைத்துவைத்திருக்கின்றான். அழகிய ஐந்நிறக் கிளியைக் கண்டவுடன் அதன் மேற்கவர்ச்சியில் நாம் உடனே உள்ளந் தோய்ந்து எவ்வளவு இன்புறுகின்றோம்! ஆனால் அதன் அழுக்குப் பகுதிகள் அதனுள் எவ்வளவு மறைவாய் எவ்வளவு வல்லமையாய் உண்மறைக்கப் பட்டிருக்கின்றன கருதுமின்கள்! அங்ஙனம் மறைக்கப்பட்டிராவிட்டால் உடனே நமது இன்ப நினைவு கலைந்து, உலக நிலையாமைகளும் இழிவு வெறுப்புகளும் பற்றி, ஒரு நொடி நேரத்துக்குள் அடுக்கடுக்காய்ப் பல துன்ப நினைவுகள் தோன்றி, நமது கிளர்ச்சியை அவித்துத் தளர்வு தந்து நம் அகப் புற முன்னேற்றங்களையெல்லாம் ஒடுக்கி நம்மை எவ்வளவு பாழாக்கிவிடும்! ஆகவே உலகத்தில் எத்தனையோ துன்ப நிகழ்ச்சிகளால் அலைக்கப்பட்டு உணர்வு கலங்கி நிலை தளர்ந்து தள்ளாடும் மக்கள் அப்பொல்லாத அருவருப்புகளிலேயே மாழ்கி மாய்ந்தொழியாதபடி அவர்கள் எந்த நேரத்தில் எங்கு எதை நோக்கினாலும் ஒரே பேரெழுச்சியும் பேராற்றலும் ஊட்டத் தகுந்த இன்ப நினைவே தோன்றுமாறு, எல்லாம் வல்ல இறைவன் மிக்க அருளோடு என்னென்ன வகையாகவோ இவ்வுலகம் முழுவதையும், ஆ! அழகு கனிந்து கனிந்து ஒழுகுமாறு மிக வல்லமையாய்ச் சித்திரித்திருக்கின்றான்.

காலையிற் கதிரவன் செங்கதிர் சொரிந்தால், மாலையில் மதியம் வெண்கதிர் பொழிகின்றது. பகலில் தாமரை மலர்ந்து விளங்கினால், இரவிற் குமுதம் அலர்ந்து வருகின்றது. மருத நிலத்து இரா இங்ஙனங் குமுதத்தால் நலம் பெற்றால், கான் நிலத்து இரா முல்லையால் மணம் பெறுகின்றது. ஓரிடத்தில் மான் ஓடிக் காட்டினால், மற்றோரிடத்தில் அன்றில் கூடிக் காட்டுகின்றது. பிறிதோரிடத்தில் மயில் ஆடிக் காட்டினால், வேறோரிடத்திற் குயில் பாடிக் காட்டுகின்றது. இறைவன் இயற்கையில் உள்ளந் தோயும் அருட்டிருவுடையார்க்கு, ஆ! எங்கும் இன்பம்! எங்கும் இன்பம்!! இன்ப நினைவுக்கு ஏதுவான இக் கடவுட் சித்திரங்களின் நிழற் படங்களே இலக்கியங்களாகும். இங்ஙனமாக இலக்கியங்கள் இன்ப நினைவுகட்கு ஏதுவான இவ் வழகியல்புகளையே தங்கட் கொண்டிருத்தலால், இத் துன்பவுலகத்திலிருந்துகொண்டு இன்ப வாழ்க்கையை விரும்பும் ஆண்பெண்பாலாரெல்லார்க்கும் அவை எவ்வளவு உதவியாயிருக்குமென எண்ணிப்பாருங்கள்! ஒவ்வோரில்லத்திலும் இசைத்தட்டுகள் போலவும் படக்காட்சிகள்போலவும்

இவ் விலக்கியக் கருவிகளும் நிறைந்து விளங்கி இன்பம் பொழியும் நாளன்றோ மக்கள் நல்வாழ்வில் வாழும் நாள்!

இலக்கிய மில்லாக்கால் நாட்டில் இன்பமேது? நாகரிகம் விரும்பும் நாடுகளெல்லாம் இதனாலன்றோ இலக்கியச் செழுமையையும் அதன் ஆசிரியர் நலங்களையும் விரும்பிப் போற்றுகின்றன. நிலவொளியைப்பற்றி மக்கட்கு நன்கு தெரியுமாயினும் அதன்கண் இன்ன அழகியல்பு உள்ளதென்று எல்லாரும் அறிந்துகொள்ளல் இயலாது. சிறந்த அருளறிவு படைத்தவர்கட்கே நுண்பொருளியல்புகள் விளங்கக்கூடும். அவர்கள் அவற்றைத் தம் இலக்கியங்களில் இனிப்ப வழங்குவர். அவ் விலக்கியங்களைப் பார்த்தால் எல்லாப் பொருள்களின் அழகியல்புகளையும் எளிதின் அறிந்துகொள்ளலாம். நிலவின் கதிர்களில் உணவுப் பொருள்களை விளைக்கும் மின்னாற்றல் உளதென்று அதன் அழகியல்பைக் கலித்தொகை (ருக:கக) வெளியிடுகின்றது. இலக்கியங்கள் மக்கட்கு எவ்வளவு நலனுள்ளவையாயிருக்குமெனக் கருதிப் பார்மின்கள்!

இன்னும், இலக்கியங்கள் வாயிலாக அவற்றின் ஆசிரியர்கள் மக்களின் தளருணர்வை நொடிப்பொழுதில் மாற்றி வளருணர்வை எளிதின் எழுமாறு செய்து இன்ப நினைவில் இருத்துந் திறம் பெரிது படைத்தவர்களாதலின் அவர்கள் சேர்க்கை யார்க்கும் இன்றியமையாததொன்றாம். நாகரிகமில்லா நாடுகட்குங்கூட அவர்கள் சேர்க்கையின்றி இனிய இன்பங் காண வேறு வாயிலே இல்லை. நல்ல நாகரிகங்களும் அரசுமுறைகளும் சிறப்பப்படைத்த நாடுகட்கே இலக்கியப் புலவர்களும் அவர்கள் இன்சுவை இலக்கியங்களும் மிக இன்றியமையாதனவாயிருக்கின்றன.

"புலன்நாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுது"

எனக் கலித்தொகையில் (ருகு: கஅ) இக் கருத்து எவ்வளவு சுவையோடு கூறப்படுகின்றது நோக்குமின்! புலவர்கள் வாய்மொழி இத்துணைச் சுவைத் திறம் படைத்தமையாலன்றோ பண்டுதொட்டே எல்லா அரசவைகட்கும் அவர்கள் சேர்க்கை இன்றியமையாததொன்றாய் இருந்துவருகின்றது! அரசனுள்ளத்தில் நாட்டின் அரசியல்நிகழ்ச்சிகளால் அடிக்கடி திடுக்கிடத்தக்க கடு நினைவுகள் மாறிமாறித் தோன்றி அவனுணர்வைப் பெரிதும் நிலைகலக்கிவிடுமாதலின், அத்தகைய இடுக்கான நேரங்களிலெல்லாம் உடனுக்குடன் இனிமை நினைவுகளை அவன்பால் எழுப்பி, முன் துன்ப நினைவுகளை ஒரு நொடிப்பொழுதில் அடியோடு மாற்றி, அவ்வுணர்வை எழுச்சி பெறச்செய்து வல்லமையாய் முன் நிலையினும் இன்பமாக நிலைநிறுத்தவல்ல பேராற்றல், ஆ! இலக்கியப் புலவர்கட்கேயல்லாமல் வேறு யார்க்கேனுங் கூடுமோ! இவ்வாற்றாற் புலவர்கள் சேர்க்கையும் அவர்கள் புதுப்புதுப்

பொன்மொழி நுகர்வுகளும் நாட்டுக்கு எத்துணையோ இன்றியமையாதனவா மென்பது கூறாமலே விளங்கும்.

உ. **சுவையில்லனவும் பயன்படுத்துதல்:** இலக்கியங்கள் உலகத்தி லுள்ள அழகுகளையே முதன்மையாகத் தேர்ந்துகொள்வதற்கேற்ப, உலக மும் அவ்வாறே தன் மேற்பரப்பில் அழகுவிளங்க அமைக்கப்பட்டிருக்கின்ற தென்று முன் கண்டோம். ஆயினும் அருவருப்புக்குரிய பிற பகுதிகளும் உலகத்தில் உண்மையால், அவையும் மிகச் சிறுகவேனும் இலக்கியங்களில் இடம்பெறுதற் குரியனவாயிருக்கின்றன. சுவைப்போக்கையே முதன்மை யாக விரும்பும் இலக்கிய ஆசிரியன்மார் இச் சுவையில்லனவற்றையுந் தம் இலக்கியங்களிற் சேர்த்துரைப்பதற்குச் சில ஏதுக்களிருக்கின்றன.

முதலாவது: உண்மையை மறையாமற் சொல்லவேண்டுமென்பது. உண்மையை உள்ளவாறே சொல்லுதலுஞ் சுவை பெருக்கும் முறைகளுள் ஒன்றாதலின் * இக் காரணத்தையுஞ் சுவைத்திறத்திலேயே அடக்கிக் கொள்ளலாம்.

இரண்டாவது: இவ்வழகில்லனவற்றை இடையிடையே சேர்க்கு மிடந் தெரிந்து சேர்த்தலால், ஏனை அழகுள்ளன முன்னையினும் மிக்க அழகுள்ளனவாகத் தோன்றுமென்பது. தலைவி சிறந்த அழகு வாய்ந்தவளே யாயினும் அவளத்தனை அழகில்லாதவர்களான தோழியர் சிலர் அவளருகே யிருக்குங்கால் இன்னும் அவளழகு நன்றாய் எடுத்துக்காட்டுகின்றது. நல்ல பைம்பொன்னாற் செய்த அணிகலன் இயல்பாகவே அதன் வேலைப்பாட்டி னால் அழகுள்ளதாயினும், எளிய நிலையிலுள்ள வேறோரணிகலனை அதன் பக்கத்திற் சேரவைத்துப் பார்க்கும்போது அது முன்னையினும் மிக்க அழகு வாய்ந்ததாய்த் தெரிகின்றது. இலக்கியங்களிலும் அங்ஙனந்தான். கலித்தொகை உயர்ந்த இன்ப நிலைகளான நன்மக்கள் ஆற்றும் ஐந்திணை யொழுக்கங்களையே அங்கங்கும் பெருக எடுத்துரைக்குமாயினும், தாழ்ந்த இன்ப நிலைகளான ஏனை அடியோர் வினைவலரால் நிகழுங் கைக்கிளை, பெருந் திணையொழுக்கங்களையும் அவ்வப்பகுதியின் இடையிடையே சிறுகச் சேர்த் துரைக்கின்றது. இதனால், உலகியலில் வழுவி நிகழும் இயற்கை நிகழ்ச்சி களையும் உள்ளவாறே சொல்லுதலென்னும் ஒருவகைச் சுவை பெறப்படுத லோடு, இயல்பாகவே மிக்க இன்பந் தருவனவாயுள்ள ஐந்திணை யொழுக்கங் களின் சுவை பின்னும் மிகுந்து தோன்றுவதான மற்றொரு வகைச் சுவை யுங் கனிந்து நிற்கின்றது.

---

* *An Introduction to the study of Literature* by William Henry Hudson; 2nd Edn. P. 20.

மூன்றாவது: நாளுந் தீம்பாலடிசிலே உண்பார்க்கு அது மேலுந் தெவிட்டி விடாமைப்பொருட்டு இடையிடையே தீம்புளிப் பாகரும் நுகர்விப்பது நன்மை தரும். இதனால் அப் பாலடிசிலின் பயனைப் பின்னும் பின்னுந் துய்ப்பதற்கு வேட்கை யெழும். அதுபோலவே இலக்கியங்களிலும் இனிய அழகியல்புகளையே நெடுகச் சுவைத்துவருவார்க்கு அதன் சுவை முடிவாகத் தெவிட்டிவிடாமல் மேன்மேலும் அதன் பயன்றுய்த்தலில் அவர்க்குத் தொடர்ந்த வேட்கை நிகழும்பொருட்டு இடையிடையே இவ்வழகில்லனவுந் தந்து உணர்வை மாற்றி வைப்பதென்பது. இங்ஙனம் இவ் வேதுக்கள் கொள்ளப்படும்.

௩. சுவையில்லனவற்றையுஞ் சுவைப்படுத்துதல்: இனி, இங்ஙனஞ் சுவையில்லனவற்றை உரைக்கவும் வேண்டும்; ஆனால் அவற்றைச் சுவைப் போக்கிற்குத் தடையில்லாமலும், ஏன், ஆக்கமாகவுங்கூடப் பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டுமென்பது ஒரு பெரிய விரகுதானாயினும் எப்படியும் அச் சுவையில்லன, தம்மை நினைவுகூர்வார்க்கு ஒரு வெறித்த நினைவை இடையிடையே ஊட்டி உணர்வை மயங்கச்செய்யாவோவெனின், அங்ஙன மன்று; சிறந்த இலக்கிய ஆசிரியன்மார் அவ்வளவு விழிப்பில்லாதவரல்லர். இன்பமில்லாத இவ் வெறித்த பொருள்களை ஆசிரியர்கள் தம் இலக்கியங் களுட் சேர்க்கு முன்னரே அவற்றை வேறு கருத்தினிமைகளாலும், இனிய உவமைகள் முதலியவற்றாலும், இருபொருள் பயப்பச் சொல்லுதல் கவர்ச்சி யான சொன்முறைகள் புணர்த்தெழுதுதல் இன்னிசை பயப்பச் சொல்லுதல் முதலிய எத்தனையோ வகையான பிற பல திறங்களாலுஞ் சுவைப்படுத்திக் கொள்கின்றனர்.*

இயல்பாகவே சுவையாப் பொருள்கள் தம்மைக் கற்பார்க்கு இடை யிடையே ஒரு வெறித்த நினைவை நினைவுகூர்விக்குமாயினும், இங்கே காட்டிய இச் சுவைத்திறங்களால் அந்நினைவு வெறும் நினைவளவாகவே நிற்பதல்லது அதன்மேற் சென்று அவர் உணர்வைக் கவ்வி அதனை மயக்கு மாறில்லை. அஃது எதுபோலவெனின், ஓர் அழகிய நாடகத்தில் கதைத் தலைவன், கதைத் தலைவி முதலான முதன்மையானவர்களின் நடிப்புக்கிடை யில் வில்லியர், வேடர், அடியோர் முதலான எளியோர் சிலரின் நடிப்பும் விராய் வரும். அங்ஙனம் வருமிடத்து அவ்வடியோர் முதலியோரின் அழ கின்மை, வறுமை, அறிவின்மை முதலிய சுவையா நிலைகள் காண்பார்க்கு ஒரு வெறித்த நினைவைத் தோற்றுவிப்பனவேயாம். ஆயினும் அந் நினைவு

* *An Idealistic view of life*: The Hilbert Lectures for 1929 by S. Radhakrishnan P. 189.

வெறும் நினைவளவாகவே நிற்பதல்லது அதன்மேற்சென்று, காண்பவரது கருத்தை ஈர்த்துத் தன்வயமாக்கித் துன்பத்திற் படுப்பிப்பதில்லை. ஏனென்றால், அவர்கள் மேற்கொள்ளுங் கோலம், பேச்சு, பேச்சின் கருத்துக்கள், நடிப்பு, நயங்கள் முதலிய பல சுவைத் திறங்களால் அந்தப் பாகம் இன் சுவைப்படுத்தப்படுகின்றது. பார்ப்பவ ருணர்வு இச் சுவைத் திறங்களாற் பெருகக் கவரப்படுதலாலன்றோ அக் கோலத்தாருடைய அழகின்மை வறுமை முதலிய எளிய நிலைகளில் அவ்வுணர்வு படியாமற் போகின்றது! வெறும் நினைவளவாய் நிகழ்கின்றது!

இனி, மற்றொன்றுங் கருத்திருத்துவோம். நாம் நாடோறும் இராக் காலம் வரப் பார்க்கின்றோம். பகலெல்லாம் நமது கண்ணறிவை விளக்கி நம் முயற்சிகட்கு இடஞ்செய்து இன்பந் தந்துவந்த கதிரவன் தனது கதிரொளிப் பாயலைச் சுருட்டிக்கொண்டு மாலையில் மேற்புலம் மறைந்து போக உடனே காரிருள் இரா உலகைக் கவிந்துகொண்டு நமது கண்ணை அவித்து நம் முயற்சிகளையெல்லாம் ஒடுக்கி நம்மை ஓரிடமாய் இருத்தி விடுகின்றது. நாம் தனித்திருக்கும் நேரமாயின் அவ் விரா வரவு நமக்கு ஒரு வெறித்த நினைவை எழுப்பி நமதுணர்வையும் ஈர்த்துத் துன்பத்துட் கிடத்தக் காண்கின்றோம். ஆனால், ஒரு நாளன்று, நாமிருக்கும் இல்லம் ஒரு திருமணம் நிகழும் இல்லமாயிருந்து அன்றிராப்போதில் இசையரங்கு நாடகம் ஊசல் முதலிய இனிய நிகழ்ச்சிகளெல்லாம் நிகழவிருப்பதாக நினைவு கூர்வோம். அதற்காக அங்கங்கும் பூப்பந்தர் முத்துப்பந்தர்களும் பன்னிற மின் விளக்குகளும் பிற பல கவர்ச்சியான அமைப்புக்களும் அமைக்கப்பெறுகின்றன. மாலைநேரம் நெருங்குகின்றது. நமதுணர்வை இன்புறுத்துந் தமர்கள் ஆடவரும் மகளிருமாக அழகிய ஆடையணிகலன்களால் தம்மை இனிதாகப் புனைந்துகொண்டு மலர்ந்த முகங்களோடு குழாங் குழாமாய் வந்துகொண்டிருக்கின்றனர். கதிரவன் மறைந்து இராப்போதும் பையப் பைய வந்து இருள் சூழ்கின்றதெனக்கொள்வோம். இந்நேரத்தில் நமதுள்ளம் எவ்வாறிருக்கும்? இராப்போது வந்தது என்று ஒரு நினைவு தோன்றுமேயல்லாமல் மற்று அதனால் உணர்வும் மயங்கித் துன்புறுவாமல்லமே! ஏனென்றால் நிகழ்ச்சிகள் பந்தர்கள் விளக்குகள் தமர்கள் முதலியவற்றால் அவ்விரா சுவைப்படுத்தப்பட்டிருத்தலின், நமதுணர்வு அவ் விராப்போதின் வரவாற் கவரப்படாமல், வெறும் நினைவளவாயிருந்து, மற்று அச் சுவைகளிலேயே பெரிதும் ஈடுபட்டு இன்புற்றவண்ணமாயிருக்கின்றது. நாடகத்தில் எளிய கோலத்தார் சுவைப்படுத்தப்படுதல் போலவும் இங்கே இராப்போது சுவைப்படுத்தப்பட்டாற் போலவுமே இலக்கிய நூல்களிலும் இடையிடையே வரும் சில வெறித்த பொருள்கள் முற்கூறியவாறு வேறு கருத்தினிமைகள் முதலியவற்றால் இன்சுவைப்படுத்தப்பட்டுக் கற்பாருணர்வு அச் சுவையி

னின்றும் வேறு பிறழ்ந்துவிடாதபடி நல்லாசிரியன்மாராற் பெரிதும் பாது காக்கப்படுகின்றது.

இதற்குக் கலித்தொகையிலிருந்து சில எடுத்துக்காட்டுகள் காட்டலாம். கலித்தொகையின் இறுதிப்பகுதியான நெய்தற்கலி இரக்கவுணர்வையே பொருளாகக் கொண்டதாகலின் அது கற்பாருணர்வை மிகவுந் துன்பத்தில் ஆழ்த்துதற்குரியதுதான். ஆனால் மிகச் சிறந்த நல்லிசைப் புலவரான அதன் ஆசிரியர் நல்லந்துவனார் அதனை அங்கங்குஞ் சுவைப்படுத்தி நடத்திச் செல்லுந் திறம் பெரிதும் அறிந்து இன்புறுதற்குரியதாயிருக்கின்றது.

இத்தனை காலம் தன் அறிவு ஆண்மை வீரம் காதல் என்னும் அரிய நல்லியல்புகளை அள்ளிச் சொரிந்து தன்னை இன்புறுத்தி வந்த தலைவன் இப்போது பிரிந்து வினைமேற் சென்றான். தலைவி அவன் பிரிவாற்றாமையால் மிகவும் மெலிந்துபோனாள். வளையல்கள் கழன்றுபோகாதபடி அவற்றின்முன் வழக்கமாய் இறுகச் செறித்து வைத்திருக்கும் 'தொடி' என்னும் முன் வளையமும் அம் மெலிவினால் நெகிழ்ந்துவிட்டது. தன் இரு கண்களிலும் நீர் ததும்பத் தலைவி மனமுருகி வருந்துவாளாயினள். இப் பகுதியை ஆசிரியர் தமது நெய்தலிற் கோத்துரைக்க நேர்ந்தது. நெய்தலிற் கோத்துரைத்தலால் அவர் இதனை முதலில் நெய்தற் பொருள் வரம்பு தோன்ற அமைத்துக்கொள்ளவேண்டும். 'தலைவன் பிரிந்தான்; தலைவி பிரிவாற்றாது வருந்தினள்' என்றுமட்டுங் கருத்துக் கூறினால் அது வெறும் பிரிவுப் பொருளையே கூறுவதாயிருக்கும்; அப்போது அது 'பாலை'யாம். அங்ஙனங் கூறாமல் தலைவி அவ் வருத்தத்தைப் பருவம் வருந்துணையும் ஆற்றியிருத்தலைப்பற்றிக் கூறுங்கால் அது பொறுத்திருத்தலாகிய இருத்தலொழுக்கத்தில் அடங்குதலின், 'முல்லை'யாம். அவ் வருத்தம் அதனினும் மீறிப் பொறுக்கவியலாததாய்த், தன்முன் எதிர்ப்படுவன அவை அஃறிணையாயினும் உயர்திணையாயினும் அவைமாட்டெலாந் தன் குறை தோன்ற வெளிப்படும்போது அஃது இரக்கவுணர்வாய் முடிதலின், அப்போது அது நெய்தலாம்.

இனித், தலைவியின்பால் இங்ஙனம் பொறுக்கவியலாததாய் வெளிப்படும் இரக்கவுணர்வு இருவகைப்பட்டுத் தோன்றும். ஒன்று தனது ஆற்றாமை கருதி வெளிப்படுதல்; மற்றொன்று இப் பிரிவினால் தன் தலைவனுக்கு நேரும் இன்னல்கள் கருதி வெளிப்படுதலாம். இலக்கிய ஆசிரியர்கள் இவ்விரண்டிலொன்றையோ அல்லது இரண்டையுமோ எடுத்து நெய்தற் பொருள்வரம்பாக ஆள்வர். இரண்டையும் எடுத்து ஆளுங்கால், தன் நலன் கருதி இரங்குதலைவிடத் தன் தலைவன் நலன் கருதி

இரங்குதலே காதலன்பிற் சிறந்த நன்மகளிர்க்கு இயல்பாதலின் ஆசிரியர்கள் அதனையே முதன்மைகொள்ள வைத்து ஏனைத் தன்னலங் கருதி இரங்குதலை அதனுள் அடக்கி மிக அழகாகக் கூறுவர். ஆசிரியர் நல்லந்துவனார் இவ் வகையில் மிக்க திறம் வாய்ந்தவராயிருக்கின்றார்.

'தலைவன் வினைமேற் போகிய கானம் மிக்க வெப்பமுள்ளது; அவ் வெப்பத்தில் அவர் என்ன துன்புறுகின்றாரோ! ஏ, வானமே! இது முது வேனிற் காலமாதலால் நீயோ வெண்மேகமா யிருக்கின்றனை. ஆ! என் தலைவன் செல்லும் வெங்கானத்தில் நீ நீர் பெய்யாது வறந்து என்ன காரியஞ் செய்கின்றனை!' என்று தலைவி தன் தலைவன் இன்னல் கருதி உளங் குழைந்து நொந்து அதனை ஆற்றமாட்டாது புறத்தே வானத்தை நோக்கிக் கூறி இரங்குகின்றாளாக ஆசிரியர், முன் கருத்தை இங்ஙனம் ஒழுங்குசெய்து கொள்கின்றார். ஈது எவ்வளவு இரக்கந் தருவதாயிருக் கின்றது பார்மின்கள்! இதனால் இப் பகுதி இப்போது செய்தற் பொருள் வரம்பு தோன்ற நின்றது. அது நிற்க:

நல்லந்துவனார், தமது செய்தலில் இடையே கோத்துரைக்க நேர்ந்த கருத்து இது. ஆனால் இக் கருத்தோ தன்னைக் கற்பார்க்குத் துன்ப நினைவை யெழுப்பி அவருணர்வை அதன்கண் மயக்குதற் குரியதாயிருக் கின்றது. அங்ஙனம் மயக்கிவிடாதபடி அதனை வேறு கருத்தினிமையினாற் சுவைப்படுத்தி அச் சுவையில் அவருணர்வைப் படிவித்துப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இப்போது ஆசிரியர் நல்லந்துவனார்க்கு முன்னிற் கின்றது. அதற்காக அவர் ஓர் விரகு செய்கின்றார்:

செய்தலிற் சேர்க்க நேர்ந்த முன் கருத்திற் கானமும் அதன்கண் வெப்பமுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. அவ் வெங்கானத்தில் தலைவன் வருந்துதலும் உரைக்கப்பட்டது. வானமும் வருகின்றது. தலைவி கண்ணீர் ததும்ப வருந்துதலும் வந்திருக்கின்றது. இக் கருத்துக்களை எங்ஙனமேனுந் தமதறிவின் றிறத்தால் ஆசிரியர் சுவைப்படுத்தியேயாக வேண்டும். அவரதனை எவ்வாறு இன்சுவைப்படுத்துகின்றார் பாருங்கள்! தலைவி வானத்தை நோக்கிக் கூறுகின்றாள்: 'ஏ, மேகமே; என் தலைவன் போகிய கானத்தில் வெப்பமோ மிகுதியாய் எரிக்கின்றது; அவன் அங்கே நைகின்றனன். இந்த நேரத்தில் நீ வறந்த வெண்மேகமாயிருந்து என்ன பயன்? ஒன்று செய்; தலைவன் பிரிவால் என் கண்களில் நீர் கடலேபோற் பெருகுகின்றது. நின்னோடு இன்னும் நின்னினத்து மேகங்களெல்லாமும் இக் கண்ணீர்க் கடலில் எவ்வளவு வேண்டுமானாலும் நீர் முகந்துகொள்ளலாம். நீர் தாராளமாயிருக்கின்றது. மேலும் வற்றாது பெருகிக்கொண்டேயிருக்கும். வெப்பம் மிகுதியாதலால்

தலைவன் கானத்திலும் நீர் மிகுதியாகத் தேவையாயிருக்கும். ஆதலால் அன்புகூர்ந்து நீ நின்னினத்தோடே கூடி என் கண்ணீர்க் கடலில் நீர் முகந்துகொண்டு கருமேகமாகி இவ் வான்வழியே விரைந்துசென்று என் தலைவன் செல்லும் வெங்கானம் நண்ணி அவன் செல்லுமிடமெல்லாம் செறிந்த நீர்த்துளிகள் வீசி அவ் வெப்பம் மிகாதபடி தணிவிப்பாயாயின் மிகவும் பயனுடைத்திருக்கும். நீ அங்ஙனங் கனைதுளி வீசுவையோ ?' என்பது. இங்ஙனமாக ஆசிரியர் இந் நெய்தற் கருத்தை வேறு கருத்தினிமையினால் இன்சுவைப்படுத்துகின்றார்.

இஃது எவ்வளவு வியக்கத்தக்கதாயிருக்கின்றது ! கற்பாருணர்வு இவ் வியப்பில் ஈடுபடாதிருக்குமோ கூறுமின்கள் ! இங்ஙனம் இச் சுவையில் ஈடுபடுதலால் அவருணர்வு முற்கூறிய வெறித்தபொருளால் மேலும் மயங்கி வருந்துதற் கிடமில்லாமற் போகின்றதன்றோ ? ஆசிரியர் நல்லந்துவனா ரறி வின் திறம், ஆ! நம்மை எவ்வளவு இன்புறுத்துகின்றது காண்மின்கள் ! இவ் வின் சுவைப் பகுதியை அவர் மேன்மேலுஞ் சொற்பொருட் சுவைப்பாகு திரள இசைச்சுவை கலந்து அச் சுவைச்சாறு சொட்டச் சொட்ட இனிய இளம் பதத்திற் றிரட்டி யெடுத்தளிக்குந் தீந்தமிழ்க் குறுவெண்பாட்டு வருமாறு :

“ தாழ்பு, துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கானம்
இறந்தெரி நையாமற் பாஅய் முழங்கி
வறந்தென்னை செய்தியோ வானம் ! சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து ”

என்பது.

இவ் வருந்தமிழ்ப் பாட்டின் சொற்றொடரமைதி, ‘கானம் எரி நையாமல் வானமே கனைதுளி வீசாயோ ?’ என்பதுவேயாம். இதனால் தலைவி தன் தலைவன் நலங் கருதி இரங்குதலையே ஆசிரியர் இதன்கண் முதன்மையாக எடுத்துக் கூறிய திறங் கண்டுகொள்ளப்படும். தலைவி தனது ஆற்றாமை கருதி இரங்குதலை ஆசிரியர் அம் முதன்மையான சொற்றொடரின் அடை மொழித் தொடர்களால் மிக அழகாக அடக்கி நிறுத்தினார். “ தாழ்பு துறந்து தொடிநெகிழ்த்தான்”, “ கண்ணீர்க் கடல் ” முதலியன இவ்வியல் பினை இனிது நினைவுகூர்வித்தல் கண்டுகொள்க.

இனி, இத்தகைய அரிய பொருட்சுவையை வெளிப்படுத்துதற்கு அதற்கேற்ற ஆற்றல் வாய்ந்த சிறந்த செஞ்சொற்களே இப் பாட்டிற் பொருந்த அமைந்திருத்தலும், அவற்றை ஆசிரியர் மேன்மேலும் வல்லவா

றெல்லாஞ் சுவைப்படுத்தியிருத்தலும் அறிந்து இன்புறுதல் வேண்டும். இப் பாட்டில் அவை அடிதோறுமிருப்பினும் இங்கே ஒன்றிரண்டேனுங் காட்டிச் செல்லுதல் நன்று.

தலைவன் பிரிந்தான்; அதனால் தலைவியின் உடல் மெலிந்தது. அதனை ஆசிரியர், அங்ஙனமே உடல் மெலிந்தது அல்லது இளைத்தது எனச் சொல்லலாம்; ஆனால் அவர் அதனை அங்ஙனஞ் சொல்லவில்லை; 'தொடி நெகிழ்ந்தது' என்பதனால் தெரிவிக்கின்றார்; சும்மா மெலிந்தது எனின் எந்த அளவுக்கு என ஒரு பொருள்வரம்பு தோன்றாமற்போமன்றோ? ஆகவே 'தொடி நெகிழ்ந்தது' எனக் கூறித் தொடிநெகிழத்தகுந்த அந்த அளவுக்கு உடல் மெலிந்தது என ஆசிரியர் தெளிவாய்ப் பொருள்வரம்பு தோற்றுவித்தாராயிற்று. மேலும், 'நெகிழ்தல்' என்னுஞ் சொல் இரங்கற் பொருளுக்கு எவ்வளவு பொருத்தமான சொல் கருதுமின்கள்! வன்மையா யிருப்பதொன்று வரவர மென்பதப்படுதலை அச் சொல் உணர்த்தும்; மெலிதல் இளைத்தல் முதலிய சொற்கள் அங்ஙனமல்ல. ஒரு பொருள் மெலிந்தால் அதன்கண் உள்ள பயன்படும் ஆற்றல் குறையும்; வடிவும் சுருங்கும். ஒரு பொருள் நெகிழ்ந்தால், அதன்கண் உள்ள பயன்படும் ஆற்றல் மேன்மேலும் மிகும்; வடிவும் அகன்று காட்டும். இங்ஙனமெல்லாம் சொற்கள் தத்தம் பொருள் வரம்புகளிற் பலவாறாக வேறுபடுமாதலின் அந் நுணுக்கங்கள் தெரிந்து சொற்களைப் பயன்படுத்துதலே நல்லாசிரியன்மார் திறமாயிருக்கின்றது.

இனி 'வளை' முதலான வேறு சொற்கள் உளவேனும், 'தொடி' என்னுஞ் சொல் இங்கு மிகச் சிறந்ததாய் இசைந்து நிற்கின்றது. 'வளை' என்பது 'வளைந்திருப்பது' என்பது மட்டும் உணர்த்தும்; இறுக்கம் உணர்த்தாது. ஆனால் இங்கே குறிப்பிடப்படும் முன் வளையம், கையோடு இறுக்கமாய் அதனைத் தொட்டுக்கொண்டிருத்தலையுங் காட்டுதலின் அதற்குத் 'தொடி' யென்னுஞ் சொல்லே மிக இசைவானதாயிருத்தல் காண்க. மேலும் இறுகி நிற்பதென்பது ஒரு வல்லென்ற நிகழ்ச்சியாதலின் அதற்கேற்பத் 'தொடி' யென்னுஞ் சொல்லும் வல்லோசைப்பட்டு நின்றது. 'இரங்குத' லென்பது மென்பதமுள்ளதாகலின் அதற்கேற்ப 'நெகிழ்த' லென்னுஞ் சொல்லும் எவ்வளவு மென்பதமுள்ள இன்னொலியாய்த் திகழ்கின்றது கருதுமின்கள்! அதுமட்டுமன்று: ஒரு பொருள் நெகிழ்வதற்குமுன் அதன் முன் நிலை இறுக்கமாயிருப்பதன்றோ இயல்பு; அங்ஙனமே இங்கே மென்பதமுணர்த்தும் மெல்லொலிச் சொல்லாகிய 'நெகிழ்தல்' என்பதற்கு முன், 'தொடி' என்பது வல்லொலிச் சொல்லாய் வன்பதமுற்று நிற்பது எவ்வளவு இயற்கையாயிருக்கின்றது! ஆகவே, இங்கே கருதப்பட்ட கருத்தை வெளிப்படுத்துவதற்குத் 'தொடி நெகிழ்த்தான்' என்னுஞ் சொற்கள் மிகவும் பொருத்தம் வாய்ந்தனவாய்த் திகழ்கின்றனவென்பது நன்கு தெளிந்து

கொள்ளப்படும். இங்ஙனம் பொருட்கரு நிரம்பிய இச் சொற்களை மாற்றி வேறு சொற்கள் பெய்துரைத்தால் இப் பகுதி இவ்வளவு சிறவாதன்றோ! தெய்வத் திருக்குறள் நூல் இந் நுணுக்கங்களாலேயே முற்றும் இயன்றதா யிருப்பதும் இங்கு நினைவுகூர்ந்து மகிழ்தல் வேண்டும்.

இனி, மேற் கலிப்பாட்டில், இங்ஙனம் பொருந்திய சொற்களே அமைந்து வருதலோடு, ஆசிரியர் அவற்றை மேன்மேலுஞ் சுவைப்படுத்தி வழங்குந் திறம் இன்னும் நமக்குப் பெருவியப்பும் மகிழ்ச்சியும் நல்குவனவா யிருக்கின்றது. 'தாழ்பு' 'துறந்து' என இரு வினையெச்சங்கள் முதலடி யின் முதலிலேயே வருகின்றன. அவற்றைத் 'தாழ்ந்து துறந்து' என ஒரு வாய்பாட்டாலேயுங் கூறலாம். ஆயினும் அங்ஙனங் கூறினால் அவை சுவைக்குமோ? ஓசை மாற்றி வேறுபடுத்துச் சொல்வது எவ்வளவு இனிக் கின்றது! இங்ஙனம் இனிக்குமாறு எழுதுந் திறங்கட்கு ஓர் அளவேயில்லை!

இனி, இப் பாட்டின்கண் எதிர்ந்துள்ள மற்றொரு முதன்மையான பேரழகும் நமதுள்ளத்தைப் பெரிதுங் கவர்கின்றது. இரங்கற்பொரு ளுள்ள பாட்டாகலின், இதன்கண் உள்ள எல்லா வல்லெழுத்துக்களும் ஏனை எழுத்தொலிகளோடு ஒன்றித் தம் ஒலி வன்மை பெரிதுங் கரைந்து போய் மெல்லோசையாய் இனித்தொலிக்கின்றன, 'தாழ்பு' என்பதில் இரண்டு வல்லெழுத்துக்களிருந்தும் இடையே நின்ற ழகர வொலியின் தொடர்பால் தம் ஒலிவன்மை எவ்வளவு கரைந்துபோய் மென்பத முற்று நிற்கின்றது பாருங்கள்! இப் பாட்டிலுள்ள ஒரு வல்லினச் சொல் லேனுந் தனக்குரிய ஒலிவன்மையில் ஒலிக்கவில்லை. எல்லாம் மென்பதப் பட்டு நிற்கின்றன. ஈது எவ்வளவு வியத்தற் குரியதாயிருக்கின்றது! இங்ஙனமே இப் பாட்டின்கண் ஒளிரும் ஏனையெல்லா அழகுகளையுந் தெளிய விளக்குவதானால் இவ்வுரை வரம்பின்றி விரியும். அது நிற்க.

இனி, மருதக் கலியில் ஒரு பகுதியை நினைவுகூர்வோம். ஓர் அரசனது அரண்மனையிற் குற்றேவல் செய்யுங் கூனியொருத்தியுங் குறள னொருவனும் இருந்தனர். இவர்கள் அவ்வரண்மனையின் புறத்தே ஓர் ஒதுக்கிடத்தில் தமக்குள் இன்பங் காண விரும்பினர்; குற்றேவன் மக்களாத லின் இவர்கள் நிகழ்த்தும் இன்பம் உயர்ந்த ஐந்திணை யொழுக்கமாகா தென்பது சொல்லாமலே விளங்கும். அது, தாழ்ந்த இன்பங்களுள் ஒன்றான பெருந்திணை யொழுக்கமாகவே இங்கு வருகின்றது. இவ் வொழுக்கத்தில் இக் கூனியுங் குறளனும் நிகழ்த்தும் எளிய உரையாடல்களும் ஏனை நடக்கை களும் பற்றி இம் மருதக் கலியின் ஆசிரியரான மருதனிளநாகனார் மிக்க உலகியற் பழக்கந் தோன்ற நேரே கண்ணெதிரிற் காண்பதுபோல் அத்துணை இயல்பு வழுவாமல் விளக்கியிருக்கின்றார்:

குறளன் ஓரிடத்தில் இருந்தான்; அவ்வழியே கூனி ஏதோ வேலையாய்ச் செல்வாளைப்போல் வந்தாள். உடனே குறளன் அவளை நோக்கி,

> என்னோற் றனைகொல்லோ
> நீருள் நிழல்போல் நுடங்கிய மென்சாயல்
> ஈங்கு உருச் சுருங்கி
> இயலுவாய்! நின்னோடு உசாவுவேன்; நின்றீத்தை

என்றான். 'நீரில் தெரியும் நிழல்போல நெளிந்த சாயலோடு உருவங் குறுகிச் சுருங்கி நடக்கின்ற ஏ கூனீ! நின்னோடு ஒன்று பேசவேண்டும், நில்! நான் இங்ஙனம் நின்னோடு பேசுவதற்கு நீ என்ன புண்ணியஞ் செய்தனையோ' என்பது இதன் கருத்து. தான் குறளனாயிருந்தும் அவன் இங்ஙனந் தன் உருவத்தையும் நிலையையும் இழித்துப் பேசியது கூனிக்கு ஒரு பெரும் வியப்பாயிருந்தது. பின்பு அவர்களுட் சிறிது பேச்சு நிகழ்ந்தது. முடிவிற் கூனி ஊடிக்கொண்டு, "குறுவட்டா! நின்னின் இழிந்ததோ கூனின் பிறப்பு" என்று சொல்லி நடக்கலானாள்.

குறளன் தானும் அவளைப் பின்பற்றி மெல்ல நடந்துகொண்டேபோய், அங்ஙனம் போகின்றவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறுவான்போல, 'ஏ, நெஞ்சமே! நாம் நமது விருப்பத்தைக் காட்டிக்கொண்டு அவளை இத்துணைப் பின்பற்றி வந்தும் அதற்கிசையாதாள்போல ஊடிக்கொண்டு எட்டி எட்டிப்போய் அக் கூனி குழையுங் குழைவுகாண்!' என்று அவள் கேட்குமாறு சொன்னான். அது கேட்ட கூனி, தானுந் தன் நெஞ்சை நோக்கிக் கூறுவாள்போல இவன் நடந்து வரும் நடையை நோக்கி,

> யாமை எடுத்து நிறுத்தற்றால் தோளிரண்டும் வீசி
> யாம் வேண்டே மென்று விலக்கவும் எம்வீழும்
> காமர் நடக்கு நடைகாண்

என்று இவன் கேட்பக் கூறி எள்ளினாள். 'காமனார் நடைபோல நடக்கும் இவன் நடையழகே அழகு' என்று தன்னை அக் கூனி எள்ளி நகையாடுதல் தன் செவியிற்பட்டதுங் குறளன், 'ஏ கூனீ! ஓ, நின் விருப்பந் தெரிந்தது; காமனார் நடையை இதோ பார்' என்று சொல்லி, யாமையை எடுத்து நேரே நிற்கவைத்தால் அதன் தோற்றம் எப்படியிருக்குமோ அதுபோல நின்று தன் குட்டைக் கைகள் இரண்டையும் விலாவுக்குள் வீசி வீசிச் சிறிது நடந்து காட்டினான் என, இங்ஙனமெல்லாம் அப்பாட்டின் (கலி. ௬௪) பொருள் தொடர்ந்து செல்கின்றது.

இங்கே காட்டப்படுந் தலைவியுந் தலைவனுங் கூனியுங் குறளனுமாயிருப்பதும், அவர்கள் குற்றேவன் மக்களாய் உயர்ந்த வளமின்றி அழகின்றியிருப்பதும், அவர்கள் பேச்சும் நடையும் நாணம் முதலிய உயர்ந்த நல்லியல்

புகளின்றி நிகழ்வதுங் கற்போருள்ளத்துக்கு எத்தனையோ அருவருப்புந் துன்பமுந் தரும் வெறித்த பொருள்களாகத்தாம் இருக்கின்றன. எனினும் அவருணர்வு அந் நினைவிற் படிந்துவிடாதபடி, ஆசிரியர் இப் பகுதியை எவ்வளவோ சுவைத்திறங்களால் இனிமைப்படுத்திருக்கின்றார். கூனி யொருத்திக்கு ஏற்றபடி குறளனொருவனை ஆசிரியர் இணைத்துவைத்ததே முதலிற் பெருஞ்சுவையா யிருக்கின்றது. அது மட்டுமன்று: இவர்கள் உரையாடல்களுள் மிக்க வியப்பைத் தரும் சிறந்த வேடிக்கைக் கருத்து களையே தெரிந்து கோத்துக் கற்போருள்ளத்தை வெவ்வேறு சுவைகளில் ஆசிரியர் ஈர்த்துச் செல்கின்றார். இன்னும் 'நீருள் நிழல்போல்' எனக் குறளனும், 'யாமை எடுத்து நிறுத்தற்றால்' எனக் கூனியும் பயன் படுத்தியதாக ஆசிரியர் காட்டிய உவமங்கள் எவ்வளவு பொருத்தமாய் அமைந்திருக்கின்றன பாருங்கள்! உவமைச் சுவையால் ஆசிரியர் இவ் வெறித்த பகுதியைச் சுவைப்படுத்துந் திறம் எவ்வளவு கவர்ச்சியாயிருக் கின்றது! இங்ஙனம் இவ் விலக்கியச் சுவை முறைகள் பலவாம்.

## உ. கலிச்சுவை

இனி, இலக்கியச் சுவையில் ஈடுபடுகின்ற புலவர் பெருமக்கட்கு உலகத்தில் அங்கங்குந் திகழ்கின்ற இனிமையியல்புகளிற் படிந்து நிற்றலே இயற்கையாயிருத்தலின், உண்மையில் அவரெல்லாம் அருள்விளக்க முடைய வரேயாவரென்பது துணியப்படும். ஏனென்றால், எங்கும் நீங்காது நிறைந் திருக்கும் இறைவன் அருளியல்புகளே உலகமெங்கும் அங்ஙனம் இனிமை யியல்புகளாகச் சுவைதோன்ற விரிந்து கிடக்கின்றன. அதனாலேதான் புலவர்கள் பொருள்களையும் உயிர்களையும் உற்றுநோக்கி அவற்றின் வாயிலாக விளங்கும் இறைவனியல்புக ளெல்லாமும் வெளிப்படுத்துவாராயிருக் கின்றனர். இங்ஙனம் அவர்கள் இறைவன் அருள்விளக்கத்திலேயே ஊன்றிப் படிந்து கிடத்தலின் அப்போது அவரது நிலை, உணர்விறந்தோர் உணர்வுநிலையாயிருக்கின்றது; அவரதுள்ளம் பளிங்குபோல் ஒளிவிளக்கமுந் தூய்மையுமுள்ளதாய் அழுக்கற்றுத் திகழ்கின்றது. இத்தகைய உள்ளங் களிலன்றோ இறைவன் திருநடம் நிகழும்! நிகழவே, அந்நிலையில் அங்கே ஓர் இனிய ஓசை தோன்றும். சமயவுணர்வுடையோர் அதனை 'நாதம்' என்பர். முற்றறிவுள்ள பெரும் பொருளின் ஆற்றலால் இது வெளிப் படுதலின் இவ்வோசை, இயற்கையே ஓர் ஒழுங்குள்ளதாய் நிகழ்கின்றது. பின், அது பலவாகப் பிரிந்து பற்பலவற்றை உருவாக்கும் ஏதுக்களாய் நிற்குமிடத்தும் அவ்வோசை ஒழுங்குமிகுந்தே நிகழ்கின்றது. கூர்ந்து நோக்கினாற் புறத்தே பற்பல உருவாதற்கு அவ்வோசையின்கண் உள்ள

ஒழுங்குமுறை மிக முதன்மையான எதுவாய்ப் பயன்படுகின்றதென்பது நன்கு விளங்கும். இவ்வோசை யொழுங்குகள் பாவோசையாய்ச் (Rhythm) சொன்முறையில் வெளிப்படும்பொழுது இலக்கண ஆசிரியர்கள் இவற்றைச் 'சீர்' என்பர். இது மேன்மேல் தாளம் முதலியன கொண்டு நிகழும்பொழுது 'பண்' ஆம். சிறந்த அருட் புலவர்கள்பால் தம்மை மறந்த நிலையில் இங்ஙனம் பாட்டு உண்டாகின்றது.* இதனாற்றான் இங்ஙனம் ஒழுங்கிற் சிறந்த நல்ல பாட்டுகளை யார் இயற்கையாகப் பாடவல்லவர்களாயிருக்கின்றார்களோ அவர்களை அது காரணமாகவே தெய்வத்தன்மையுள்ளவர்களாக மதிக்கும் வழக்கம் நமது நாட்டில் உண்டாயிற்று.

இனி இவ்வோசை யொழுங்குகளில் ஒரு வகையே 'துள்ள லோசை' யாம்; 'கலிச்சீ'ரோசை யென்பதும் இது. நின்ற சீர் நேரசை யிறுதியாக வுள்ள மூவசைச் சீராயிருந்து அதன் முன்னர், வருஞ்சீரின் முதலசை நிரையசையாயிருப்பது 'துள்ள லோசை' யென்னுங் கலியோசைக்குச் சிறப்பென்பர் ஆசிரியன்மார். நேரசை யிறுதியாகவுள்ள மூவசைச் சீரை 'வெண்சீர்' எனவுங் கூறுப. ஆகவே அவ் "வெண்சீர்ப் பின்னர் நிரைவந்து தட்டலே சிறந்த" †தென்றார் பேராசிரியர். இச் சிறப்பான கலியோசைக்கு அவ்வுரையாசிரியரே,

"அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்"

என்னுங் கலித்தொகை (கக) யடியைக் காட்டாகக் காட்டுவர். இதன்கண் 'அரிதாய' என்பது ஒரு சீர். இங்ஙனமே 'அறனெய்தி' என்பதும் பிறவும் ஒவ்வொரு சீராம்; ஒவ்வொரு சீரும் முதலில் நிரையசையிற் றொடங்குகின்றது; பின் நேரசையிற் சென்று முடிகின்றது. நிரையசை இரண்டெழுத்துக்களாய் இணைந்தொலிக்கின்றது. நேரசை ஓரெழுத்தாய்த் தனித் தொலிக்கின்றது. இதனால் நிரையசை தடித்த ஓசையானதெனவும் நேரசை மெல்லிய ஓசையானதெனவுந் துணிந்துகொள்ளலாம். துணியவே, ஒவ்வொரு சீரும் இவ்வாற்றால் முதலிற் கனமான ஓசையில் எழுந்து உரத்தொலித்துப் பின் வரவர அவ்வொலி குறைந்து மெல்லிதாய் முடிய, அம் முடியுந் தருவாயில் வேறொரு சீர் துவங்கி அங்ஙனமே முதலில் நிரையசையாய்க் கனத்தொலித்துப் பின் நேரசையாய் மெலிந்து நிற்ப, இவ்வாறே இக்கலியோசை தொடர்புற்றுச் செல்லும் முறைமை நன்கு விளங்காநிற்கும். ஓரோசை மெலியுந் தருவாயில் மற்றோரோசை இங்ஙனங் கிளர்ச்சியாய்க் கலித்தெழுந்து கனந்தொலித்துத் துள்ளிச் செல்வதனாற்றான், இக் கலிச்சீரோசை 'துள்ள லோசை' யெனப்படுவதாயிற்று.

---

* A. C. Bradley : *A Miscellany* (1929) P. 226.

† தொல். செய்: உக உரை.

இனி, இங்ஙனம் எழுச்சியாய் இவ்வோசை துள்ளிச் செல்வதற்குரிய ஏதுவுஞ் சிறிது அறிதல் வேண்டும். மக்கள் ஒன்றை ஊன்றியறியும்போது அதனியல்பில் அவருணர்வு முறுகி நிற்கின்றது. அந்நிலையில் அவர்பால் ஓர் ஓசை தோன்றுமென்று அறிந்திருக்கின்றோம். ஒருவன் மிக்க மகிழ்ச்சியாயிருக்கும்போது அவனை யறியாமலே அவன்பால் இசை தோன்றுதலைக் காண்கின்றனமல்லமோ? அங்ஙனமே துன்பம் மிகும்போதும், மிக முறுகிய நிலையில், உடனே அவன் வாய்விட்டு அழுதுவிடுதலையும் நாம் பார்க்கின்றோம். இங்ஙனமே பொருளியல்புகளை ஊன்றியறிகின்ற அமைதியான அருள்நிலையில் உணர்வு முறுகி நிற்கும்போதும் சான்றோர்கள்பாற் பாட்டு எழுகின்றதென் றறிதல் வேண்டும். இங்ஙனம் எழுகின்ற இப் பாட்டொலி அவ்வந் நேரத்தின் வெவ்வேறுணர்வு நிலைக்கேற்றவாறு வெவ்வேறு ஓசை யொழுங்குகள் உடையதாயிருக்கின்றது. பொருள்களின் நல்லியல்புகளிற் படிந்து உணரும்போது அவ்வுணர்வு இன்ப வுணர்வாய் வயங்கும். இன்பம் முறுகி நிற்கும்போது உணர்வு எழுச்சியுங் கிளர்ச்சியும் உள்ளதாயிருக்கின்றது. இனி அவ்வின்பம் மிக்க அமைந்த நிலையில் நிகழுமாயினும், அங்கும் அவ்வெழுச்சியுங் கிளர்ச்சியும், மிக்க அமைந்த நிலையிலேயே நுண்பொருளளவாய் நிகழாநிற்கும். உலகத்தில் இன்ப வுணர்வில் வயமாயிருக்கும் மக்கள் நிகழ்ச்சிகளை உற்று நோக்கினுல், அவர்கள் நிலையும் ஆரவார ஒலியும், எழுச்சியுந் துள்ளலுமாயிருக்கின்றன. ஆம், இன்பவெழுச்சிக்கு இயற்கையே இத் துள்ளலியற்கையிருக்கின்றது. ஆதலாற்றான், அவ்வின்ப நிகழ்ச்சியால் எழும் பாட்டோசையும் மேலே காட்டியவாறு துள்ளலோசைத்தாய் அவ் வொழுங்கு முறையில் நிகழ்கின்றதென்பது.* எனவே இன்பப் பொருள் பற்றிப் பாடுங்கால் அப் பாட்டு இத் துள்ளலோசையின் ஒழுக்கம் வாய்ந்த கலிப்பாட்டாய் வெளிப் படுகின்றதென்பது நன்கு தெளிந்துகொள்ளப்படும்.

'கலி' யென்னுஞ் சொல்லும் இப்பொருட்டாம். களிப்பின் பெருக்கு, செருக்கு, ஆரவாரம் முதலிய எழுச்சி நிலைகளை அஃதுணர்த்தும். ஆகவே துள்ளலோசைக்குக் 'கலியோசை' யென்பதுஞ் செய்யுள் முறைபிற் பெயராயிற்றென்பது. இங்ஙனமெல்லாம் இன்பம் பொருளாக இயல்பின் எழுந்து பண்டுதொட்டே புலனெறிப்பட்டு வந்தமையாற்றான் ஆசிரியர் தெய்வத் தொல்காப்பியர், இன்பவொழுக்கம் என்னும் அகத்திணை பற்றிப் பாடுதற்கு இக் கலிச் செய்யுளை மிகவும் உரியதெனத் தெரிந்து அதற்கே முதன்மை தந்து அதனையே முன்வைத்து யாப்புறுத்து இலக்கணஞ் செய்வாராயினர் (தொல். அகத்: ருரு).

---

* *Encyclopædia Britanica* 11th Edn. Vol. 23. P. 277. Rhythm in Verse.

இனி, இக் கலிச் செய்யுளின் அமைப்புமுறையும் மிக அருமைப் பாடுள்ளதாயிருக்கின்றது. ஆசிரியர் தொல்காப்பியர் இக் கலிச் செய்யுளை நான்கு வகையாகப் பாகுபடுத்தோதுகின்றார். அவற்றுள் 'ஒத்தாழிசைக் கலி' என்பது ஒன்று. ஆசிரியர் இவ் வொத்தாழிசைக் கலியையே கலிக் குச் சிறப்புடையதெனக் கொண்டு அதற்கே முதன்மை தந்து முன்வைத் தோதுவர். உரையிலும் இவ்வுண்மை எடுத்துக் காட்டப்படுகின்றது. (தொல். செய்: கஙூ). இனி, இங்ஙனம் முதன்மைபெற்ற ஒத்தாழிசைக் கலியையும் ஆசிரியர் மறித்தும் இருவகைப்படுத்தோதுவர். அவை, 'ஒத் தாழிசைக் கலி'யெனவும், 'ஏனை ஒத்தாழிசைக் கலி' யெனவுங் கொள்ளப் படும். இவற்றுள்ளும் 'ஒத்தாழிசைக் கலி' யென்பதே 'இன்பம்' என்னும் அகப்பொருள் கூறுதற்குச் சிறந்ததாய் 'அகநிலை யொத்தாழிசை' யெனப் பட்டு முதன்மையுற்றிருக்கின்றது. கலித்தொகையிலும் இவ் 'வொத் தாழிசைக் கலிப்பாக்களே' பெரும்பான்மையவாய் வருகின்றன. இவ்வாற் றாற், கலிப்பாக்களிலெல்லாம், 'ஒத்தாழிசைக் கலி' யென்பதே சிறப்பு மிக்க தாய்த் திகழ்கின்றதென்பது இனிது தெளிந்துகொள்ளப்படும். இச் சிறப் புக்குரிய ஏதுக்களும் மிக்க அருமையானவையா யிருக்கின்றன. இப் பொருட் பரப்புகளெல்லாம் இங்கே விரித்து விளக்குவதானால் இச் சிற்றுரை வரம்பிகந்துபோம். தொல்காப்பியப் பொருளதிகார இயல் ஒவ்வொன் றுக்கும் இப்போது யான் தனித்தனி ஆராய்ச்சி விளக்க நூல் எழுதிவரு கின்ற முறையில் அதன் செய்யுளியலுக்கும் ஒரு விளக்க நூல் எழுதிவரு கின்றேன். அதன்கண், தமிழ்ச் செய்யுட்களின் அமைப்பழகுகள், அவை அங்ஙனம் அமைதற்குரிய நுண்பொருளேதுக்கள், அவற்றால் உண்டாகும் பயன்கள் முதலிய நுட்ப திட்பங்கள் கூடியவரையில் விளக்கியெழுதப் பெறுகின்றன. அத் தொகுதிகள் வெளிவருங்கால் இந் நுண்பொருட் கூறு களெல்லாம் அவற்றிற் கண்டுகொள்வதற்கு இடமுண்டு. ஆயினும் இங்குஞ் சிறிது காட்டிச் செல்வது நல்லது.

'ஒத்தாழிசைக் கலி'க்கு ஆசிரியர் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்னும் நான்கு உறுப்புக்கள் கூறுவர். அகத்திணை யொழுக்கங் களில் ஒரு கருத்தை ஒருவருக்கொருவர் கட்டுரைத்துச் சொல்லுதலென் பது ஒரு முதன்மையான நிகழ்ச்சியாகும். இக் கருத்தேபற்றிச் "சொல் லிய சொல்லும் வியங்கொளக் கூறு" எனக் கலித்தொகையும் ஓரிடத்தில் (கககூ : கக) நுவலுவதாயிற்று. இங்ஙனம் பயன்படும்படி கட்டுரைக்கும் முறையில் இக் கலிச்செய்யு ளுறுப்புக்கள் நன்கமைந்திருக்கின்றன.

பொதுவாக, விளக்கத்துக் கேதுவான எந்தக் கட்டுரையும் 'முகப்பு', 'கருத்து', 'முடிப்பு' என மூன்று பகுதிகள் உள்ளனவாய் அமைவது இயல்பு.

ஒரு கருத்தைப் பற்றிப் பேச விரும்புவோன், அக் கருத்தைக் கூறுமுன் முதலில் அதற்கியைபான சிலவற்றைப் பேசித் தோற்றுவாய்செய்துகொள்கின்றான். அத் தோற்றுவாய்ப் பேச்சிலேயே, மேல் அவன் கூறவிருக்குங் கருத்து இன்னதுதான் என்று ஓரளவில் தெரிந்துகொள்ளும்படி, அக் கருத்தின் குறிப்புக்கள் சில அமைந்திருக்கும். அப்படி அமையாவிட்டால், மேலே சொல்லப்போகும் பகுதிக்கும் இதற்கும் ஓர் இயைபில்லாமற் போய், உறுப்பென்னும் பெயர்க்காரணமும் பொருந்தாதாய்க், கேட்போனுணர்வுஞ் சொல்வோனுணர்வும் ஒருமுகப்படாது வேறு வேறு முகமாய்த் தொடர்பின்றிச் சென்று முடிவிற் பயன் கெடும். ஆதலால் இத் தோற்றுவாய்ப் பகுதி மேற் கூறியவாறு, பின் வருங் கருத்தின் குறிப்புகளோடு அவற்றுக் கியைபான வேறு சிலவும் வாய்ந்து செவ்வையாய் அமைவது இன்றியமையாததாகும். இங்ஙனம் அமையும் இம் முதற் பகுதி 'முகப்பு' என்னும் பகுதியில் அடங்கும். இது, முதலில் தரப்படுவதாதலின் செய்யுள் நூலோர் இதனைத் 'தரவு' எனக் கூறினர்.

இதற்கு அடுத்தபடி 'கருத்துப்' பகுதி வெளிப்படும். பேசுவோன் தான் பேச விரும்பிய கருத்துக்களை இப் பகுதியிற் கேட்போன் மனங்கொள்ளுமாறு ஒரு முறைக்கு மும்முறை தெளிய விளக்கி மிகத் திறமாகக் கட்டுரைப்பது முறையாகும். கட்டுரையில் இப் பாகமே கருவெனத் தக்க அருமைப்பாடுள்ளது. கேட்போனுள்ளந் தான் கூறுங் கருத்தின் வயமாகி அதன்கண் தாழுமாறு கிளர்ந்திசைப்பதாகலின் இப் பகுதி 'தாழிசை' யெனப் பட்டது.* "வயமாகும்படி கலித்தொலிக்குந் துள்ளலோசை' யென்பது அதன் பொருள். ஒருவன் தான் சொல்லுங் கருத்தைக் கிளர்ச்சியோடு எதிரிருப்போனுக்குத் தெளிவாய்த் தெரியும்படி உரத்து ஒரு முறைப்படுத்து இனிப்பக் கூறும் பேச்சொலியே அவனை நன்கு வயப்படுத்தும். இங்ஙனம் எழுச்சியோடு இசைத்தலே 'துள்ளலிசை' யென மூன்னும் வந்தது. ஆகவே இத்துள்ளலிசையாகிய கலியிசை இங்ஙனம் பிறரை வயப்படுத்தித் தன்கண் தாழவைக்கும் இசையாமாறு நன்கு தெரிந்துகொள்ளப்படும். இக் கருத்தாற் பேராசிரியரும், "தாழிசை யென்பது தானுடைய துள்ளலோசைத்தாம்" (தொல். செய்: கஙல-உரை) என்றார்.* எனவே இக் 'கருத்துப்' பகுதி 'தாழிசை' யென்னும் பெயராற் கூறப்படுவது எவ்வளவு பொருட் கருவுள்ளதாயிருக்கின்றது கருதுமின்! மேலுங், கருத்துப் பகுதியாகிய இத் தாழிசைப் பகுதி இக் கலிப்பாப் பகுதிகளிற் கருவெனத் தக்க

---

* 'தாழம்பட்ட ஓசை' யென்பதும், கேட்பாருள்ளத்தைத் தன் வயமாய்த் தாழ வைத்தற்குரிய அவ்வியல்பினதான ஓசை யென்னும் பொருட்டாம். எழுந்தெழுந்து தாழ்ந்து நீரலைபோற் சரிந்தியலும் இசை யென்று கொள்க.

முதன்மையுடையதாகலின் இதன் பெயராலேயே இக் கலிப்பா 'ஒத்தாழிசைக் கலி' யெனப்பட்டதென்பதும் நினைவுகூரற்பாலது. கருத்துக்களை ஒரு முறைக்கு மும்முறை தெளிய விளக்குதற்கு இத் தாழிசைகள் தம்மில் ஒத்து மூன்றாய் வருதலின் (செய். கசஉ) இவை 'ஒத்தாழிசை' யெனப்படுமென்பது ஆசிரியர் கருத்து. 'ஒத்த தாழிசை' யென்பது ஒருசொற் றன்மையாய் வழங்கும் வகையில் 'ஒத்தாழிசை' யென்று முடிந்ததெனக் கொள்வது நன்கு பொருந்தும்.

இனி, இக் கருத்து விளக்கம் ஆன பின், இதன் பிழிவாக இன்னது நடைபெறவேண்டும் என முடித்துக் காட்டுவது இறுதிப் பகுதியான 'முடிப்பு' ஆகும். முதலில் தோற்றுவாய் செய்த கருத்து இம் முடிப்புப் பகுதியில் வந்து சுரிந்து முடியுந் தகவுடையதாகலின் இது 'சுரிதகம்' எனப் பெயர் பெற்றது.

இனி, நடுப்பகுதியான கருத்து விளக்கம் ஆனபின் அவ் விளக்கங் காரணமாகவே இவ் விறுதிப் பகுதியின் பயன் நிறைவேற வேண்டுமாகலின், அக் காரணந் தோன்ற, அவ்விரண்டையும் இணைப்பது போன்றதொரு 'தனிச்சொல்'லும் இக் கலிப்பாக்களில் அமைவதாயிற்று. முதலில் தரவுப் பகுதியிற் குறிப்பாகத் தோன்றிப் பின் தாழிசைகளில் தெளிவாக விளக்கப் பட்ட கருத்துக்கள் இத் தனிச்சொல்லின் வழியாகச் சாறுபோற் பிழிந்திறுகி இறுதிப் பகுதியான சுரிதகத்திற் பயன்றோற்றி நின்ற இயல்பு இவ் வாற்றால் இனிது தெளியப்படும்.

ஆகவே, ஒரு செய்யுளின் அமைப்புமுறையே ஒரு கட்டுரையின் அமைப்புமுறைபோல் இங்ஙனம் அமைந்து நிற்பதாயின், அதனருமை நமதுள்ளத்தை எவ்வளவு கவர்ந்து நிற்கின்றது கருதுமின்கள்!

சொற்சுவை, பொருட்சுவை, இசைச்சுவை, எனை இலக்கியச் சுவை முதலிய இத்தகைய நற்சுவைகளெல்லாம் ஒருங்கு வாய்ந்து திகழ்வதுதான், நூற்றைம்பது இன் கலிச் செய்யுட்களாலான, கற்றறிந்தாரேத்துங் இக் கலித்தொகையென்னும் பொன்றாச் செந்தமிழ் அமிழ்தம் என்க.

தமிழ் மக்கள் இத்தகைய அரிய பெரிய ஆரமுதத்தை இனிது நுகர்ந்து இன்புறுகவென்னுங் குழைந்த இரக்கத்தால் நமக்கு ஒரு நிரல் படக் கோத்துதவிய பெரியார் ஆசிரியர் நல்லந்துவனாராவர். கலித்தொகையின் ஐந்து பகுதிகளில் 'நெய்தற் கலி' யென்பதும் ஒன்று. அதனை இவ் வாசிரியர் பெருமானே இயற்றிச் சேர்த்திருக்கின்றார். "கல்வி வலார் கண்ட கலி" யெனவும் போற்றப்படும் இச் சுவை மலிந்த நூலைத் தாங் கோத்து வழங்குதற்கு மேற்கொண்ட அருமை ஒன்றேயும் ஆசிரியர் நல்

லந்துவனாரின் பெருமையைப் புலப்படுத்தப் போதும். உரையாசிரியர் நச்சினார்க்கினியருந் தம் வாய்மொழியினாலேயே இவ்வாசிரியர் பெருமானது பேரறிவின்றிறத்தை ஓரிடத்தில் (கலி. கசூஉ) வெளிப்படுத்தி மகிழ்ந்தார். இவர் பெருமை, 'அந்துவனார்' என்னும் அவர் இயற்பெயர்முன் அக்கால வழக்கப்படி 'நல்' என்னும் நன்மைப்பட்டமுஞ் சேர்த்து முன்னோர் 'நல்லந்துவனார்' எனச் சிறப்ப வழங்கி வந்தமையாலுந் தெளிவாம். இயற்பெயரின் முதலெழுத்து உயிரெழுத்தாகவேனும் அல்லது அதனியல்போடிசைந்த மெல்லின இடையின எழுத்தாகவேனுமிருந்தால், 'நல்' எனவும், அங்ஙனமன்றி அம் முதலெழுத்து வல்லின மெய்யாயிருந்தால் லகர வொற்றுக்கெட்டு 'ந' எனவும் இயைந்து வழங்குவது மரபாயிருந்தது. சோழன் நல்லுருத்திரன், நல்வெழினியார், நல்விறையனார், நல்லழிசியார், நல்லச்சுதனார், நன்னாகனார், நல்வழுதியார் எனவும், நக்கீரனார், நச்செள்ளையார், நத்தத்தனார், நப்பண்ணனார் எனவு மெல்லாம் வரும் பழம் பெயர்களால் இவ் வழக்குண்மை தெரிந்துகொள்ளப்படும். ஆகவே அத்துணைச் சிறப்புப் பெயர் பெற்றுத் தம் மாட்சிமை தோன்ற நிலவிய நல்லந்துவனாரே மக்கள் சுவைத்தின்புறுதல் கருதிக் குழைந்த அருளோடு இவ் வின்சுவைக் கலியைக் கோத்து வழங்கியிருத்தலின், அப் பேரருளாளர் எண்ணம் நிறைவெய்துமாறு, தமிழ்மக்கள் இக் கலித் தொகையை மேன்மேலும் நன்கு பயின்று நலம் பெறற்பாலார். சிறந்த ஆராய்ச்சி நூல்கள் சில எழுதுவித்தால் இக் கலி நூல் பலதுறைப் பொருட் குறிப்புக்களாலும் மேன்மேல் விளக்கம் மிக்குத் தமிழ்மக்கட்கும் பிறர்க்கும் நல்ல ஆக்கந் தரும்.

தமிழ்மலை,
திருவள்ளுவர் ஆண்டு
கக்கசுக, ஆடி, ரு.
20-7-'38

இளவழகன்.

---

# நூலாசிரியர்கள் வரலாற்றுச் சுருக்கம்

---

## க. சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ

கலித்தொகையின் முதற்பகுதியாகிய பாலைக்கலியிலுள்ள ரூடு பாடல்களையும் பாடினார் பெருங்கடுங்கோ என்பார். இவர் சிறந்த இப் பாலைக்கலியைப் பாடியமையினாலேயே, பாலைபாடிய பெருங் கடுங்கோ என்று அடைகொடுத் தழைக்கப்பெற்றார். "சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி பாடியது" என்று புறநானூறு கக-ஆம் செய்யு ளடிக்குறிப்பிற் காணப் படுவதுகொண்டு இவர் சேரர்மரபினர் என்று ஊகிக்கப்படும். இவர் கொடையிலும், வீரத்திலும், தமிழ்ப் புலமையிலுஞ் சிறந்த வொரு செந்தமிழ்ப் புரவலர். நற்றிணையென்னுந் தொகைநூலுட் பத்தும், குறுந்தொகை யென்னும் மற்றொரு தொகையிற் பத்தும், அக நானூற்றுத் தொகையிற் பன்னிரண்டும் ஆக முப்பத்திரண்டு செய் யுள்கள் இவர் பாடியனவாகக் காணக் கிடக்கின்றன. அறநூல், மரநூல், விலங்குநூல் முதலிய பல நூற்றுறைகளிலும், இசை நுணுக்கம் ஓவியம் முதலிய நுண்கலைத்துறைகளிலும் வல்லார் இவர் என்பது இவர் பாடியுள்ள செய்யுட்களிலிருந்து இனிது பெறப்படும்.

## உ. கபிலர்

இரண்டாம் பகுதியாகிய குறிஞ்சிக்கலியிலுள்ள உகூ செய்யுட் களையு மியற்றினார், "வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்" **கபிலர்.** இவர் திருவாரூரிற் பிறந்தவரென்று ஒரு சாராரும், திருவாத வூரிற் பிறந்தவர் என்று மற்றொரு சாராரும் கூறுவர். இவர் புலனழுக் கற்ற அந்தணாளர். சொற்சுவையும் பொருட்சுவையும் செறிந்திசைய இவர் செய்யுட் செய்யுந் திறமை வாய்ந்திருந்தாராதலின் நல்லிசைக் கபிலர் என்றே அழைக்கப்பட்டுப் பொய்யில் புலவருட் சிறந்த புலவராய் விளங்கிவந்தார். இவர் பாடிய செய்யுட்கள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பத்துடனெட்டெனப் பயில்கீழ் கணக்குமா

மூத்திற நூலினும்" அமைந்துள்ளன. இவர் இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழ்ப் பெரும் பிரிவுகளிலும் வல்லார் என்பது "மூத்தமிழ்க் கபிலர்" என்ற தொடரா லுய்த்துணரப்படும். இவர் கடையெழு வள்ளல்களில் ஐவரைப் புகழ்ந்து பாடியுள்ளார். எனினும், அவருட் டலைசிறந்திருந்த வேள் பாரியின் உயிர்நண்பரும் அவைப் புலவருமாக இவர் விளங்கிவந்தார் என்பது செய்யுட் சான்று. வேள் பாரி இறந்த பின்னர் அவன்மகளி ரிருவருக்கும் மண முடிக்க இவர் எடுத்துக்கொண்ட பெரு முயற்சி தனிப் பெருஞ் சிறப் புடைய தொன்றாகும். "கபில பரணர்" என்று வழங்கும் தொடர் கொண்டு இவர் பரணர் என்ற மாபெரும் புலவருடன் பிரியா நட்பு வாய்ந்தவர் என்பதும் பெறப்படும். குறிஞ்சிப் பாட்டும், ஐங்குறு நூற்றில் குறிஞ்சிநூறும், பதிற்றுப் பத்தில் ஏழாம் பத்தும், இன்னு நாற்பதும் இவரருளிய பிற செய்யுட்களாம். இதுகாறும் கிடைத்த செய்யுட்களில் இவர் பாடியனவாகக் காணக் கிடப்பன உஎஅ செய் யுட்களாம். உலகம் உள்ளளவும் இவ்வாசிரியர் பெயர் அழியாது நின்று நிலவும் என்பது உறுதி.

## ௬. மருதனிளநாகனர்

மூன்றும் பகுதியாகிய மருதக்கலியிலுள்ள ௬௫ பாடல்களையும் பாடினுர் இளநாகனுர் என்பார். நாகனென்ற பெயர்கொண்ட புலவர்கள் பலரும், இளநாகன் என்ற பெயர்கொண்ட புலவர்கள் வேறு சிலரும் இருந்தமையால் இவர் மருதனிளநாகன் என்றும், மதுரை மருதனிளநாகன் என்றும் அழைக்கப்பட்டனர்போலும்! மருதன் என்பது இவர் தந்தையாரைக் குறித்ததென்று ஒரு சாரா ரும், இவர் மருதக்கலியைப் பாடியதனுல் அடையாகக் கொடுக்கப் பெற்றதென்று மற்றொரு சாராரும் கூறுவர். இவர் ஊர் மதுரை என்பதும், இவர் இறையனு ரகப்பொருள் என்ற நூலுக்கு நல்லுரை யியற்றினுருள் ஒருவர் என்பதும், இறையனுரகப் பொருள் முதற் சூத்திர உரையிலிருந்து பெறப்படும். நற்றிணையிற் கஉ செய்யுட் களும், குறுந்தொகையில் சட்ம், புறநானூற்றில் ௬-ம், அகநானூற்றில் உ௬-ம் இவர்பாடிய பிறசெய்யுட்களாம். இவர் பாடல்களிலிருந்து இவர் சைவ சமயப்பற்று மிகுந்தவரென்றும், அகத்திணை புறத்திணைக் கருத்துக்களை அழகுறப்புனைந்து பாடும் ஆற்றல் மிக்கவர் என்பதும் எளிதில் உய்த்துணரப்படும்; மேலும், இளம்பிள்ளைகளுக்கு ஐம்

படைத்தாலியேயன்றி ஆனேற் றிலச்சினை யணிதல், உள்ளிவிழாவிற் கொங்கர் இடுப்பில் மணிகள் கட்டிக்கொண்டு தெருவினில் ஆடுதல், மதுரைமா நகரத்தெருக்கள் நாடோறும் அலகுகொண்டு தூற்றித் துப்புரவு செய்யப்படுதல்போன்ற அரியபல செய்திகளும் இவர் பாடல்களால் காணக் கிடக்கின்றன. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறனையும், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியையும், நாஞ்சில் வள்ளுவனையும் இவர் பாடியுள்ளார். தாம் பாடியுள்ள அகநானூற்றுப் பாடல்களுளொன்றில் (அகம். ருகூ) கலித்தொகை நூலைத் தொகுத்தருளிய ஆசிரியர் நல்லந்துவனுரைத் "தண் பரங்குன்றத் தந்துவன் பாடிய" என்று குறிப்பிட்டு அவர்பால் தமக்கிருந்த நன்மதிப்பை இவர் புலப்படுத்தியுள்ளார்.

## ச. சோழன் நல்லுருத்திரன்

நான்காம் பகுதியாகிய முல்லைக் கலியிலுள்ள கள பாடல்களையு மியற்றினுர் உருத்திரன் என்பார். புறநானூற்றின் கஙO-ஆம் பாட்டின் அடிக்குறிப்பில், பாடினோர்பெயர் கூறுமிடத்து, "சோழன் நல்லுருத்திரன்" என்று குறிப்பிடப்பட்டுள்ளமையால், இவர் சோழர்குடியில் வந்தவர் என்பதும், புலமை சான்ற பெரியார் என்பதும் இனிதுணரப்படும். முல்லைநிலச் சிறப்பியல்புகளையும், பழக்க வழக்கங்களையும் இவர் எடுத்து விளக்கியுள்ள அளவுக்குப் பிறபுலவர்கள் எடுத்துக் கூறவில்லை யென்றே கூறலாம். சோழர் குடிவந்தும் இவர் பாண்டிநாட்டையே பலபடப் புகழ்ந்து பாடியுள்ளார். சாமுத்திரிகம், நிமித்தம் போன்ற நூற்றுறைகளிலும் இவருக்குப் பயிற்சியுண்டென்பது இவர்தம் செய்யுட்களால் விளங்கும்.

## ரு. நல்லந்துவனுர்

ஐந்தாம் பகுதியாகிய நெய்தற்கலியின் ஙங பாடல்களையும் பாடிமுடித்தார் அந்துவனுர் என்பார். நல்லந்துவனுர் என்றும், மதுரையாசிரியர் நல்லந்துவனுரென்றும் இவர் பெயர் குறிக்கப் பட்டுள்ளதிலிருந்து இவர் அக்காலத்தாரால் நன்கு மதிக்கப்பட்டு வந்துள்ளார் என்பது தெளியப்படும். (இவர் பெயர் நல்லந்துவனுரன்று, நவ்வந்துவனுர் என்று பதிப்பாசிரியர் இ. வை. அனந்தராமையரவர்கள் வாதிப்பர்.) இவர் பிறந்த ஊர் மதுரை. மருதக்கலி பாடிய

மருதனிளநாகனார் அகநானூற்றுப் பாடல்களுளொன்றில் இவரைப் பெயர் குறித்துப் பாடியமை முன்னர்க் காட்டப்பட்டது. இவரே முதல்நான்கு கலிகளையும் ஒருங்கு தொகுத்து, ஐந்தாங்கலியாகிய நெய்தற்கலியையும், கடவுள்வாழ்த்துச் செய்யுளையும் பாடிச் சேர்த்துக் கலித்தொகை என்ற தொகைநூ லாக்கினார்.

> "நாடும் பொருள்சான்ற நல்லந் துவனாசான்
> சூடுபிறைச் சொக்கன் றுணைப்புலவோர்—தேடுவார்
> கூட்டுணவே வாழ்த்தோடு கொங்காங் கலியினையே
> கூட்டினன் ஞாலத்தோர்க் கு"

என்பதனால் இது தெளியப்படும். இவர் இந்நூலைத் தொகுக்குங்காற் பாலைமுதலா நெய்தலீறா விப்பொழுது காணப்படும் முறையிலேயே இந்நூலைத் தொகுத்தாரென்பது,

> "போக்கெல்லாம் பாலை புணர்த னறுங்குறிஞ்சி
> யாக்கமளி யூட லணிமருத—நோக்கொன்றி
> யில்லிருத்தன் முல்லை யிரங்கியபோக் கோர்நெய்தல்
> புல்லுங் கலிமுறை கோப்பு"

என்ற வெண்பாவால் அறியப்படும். நெய்தனிலப் பழக்க வழக்கங்கள் பலவற்றையும், வைதிக வொழுக்கங்கள் சிலவற்றையும் இவர் தம் நெய்தற்கலியுள் நன்கெடுத்து விளக்கியுள்ளார். உலக மாந்தர்க்கு நன்னெறி காட்டும் அறிவற வுரைகள் இவர் பாடிய கலியுள் மலிந்து காணப்படுகின்றமை இவர்தம் ஒழுக்கச் சிறப்பையும் , கல்வியின் மேன்மையையும் புலப்படுத்துவதாகும். நற்றிணையில் ஒரு செய்யுளும், பரிபாடல் முதலிருபத்திரண்டு செய்யுட்களுள் நான்கும், அகநானூற்றில் ஒரு செய்யுளும் இவரியற்றிய பிற செய்யுட்களாம்.

---

> "பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
> மருதனிள நாகன் மருத—மருஞ்சோழ
> னல்லுத் திரன்முல்லை நல்லந் துவனெய்தல்
> கல்விவலார் கண்ட கலி"

---

தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயிற்
௨௫. றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்.

இது தலைமகன் குறிப்புக் கண்டு பிரிவனென ஐயுற்றுச்செல்கின்ற தலைவி அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமை கேட்டுப் பொருள்வயிற் பிரிகின்றானெனத் துணிந்து ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இது "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே" * என்பதனால் அந்தணன் அறங் கருதித் தூதிற்பிரிந்து அவ்வரசர் செய்த பூசனை வாங்கிக்கொண்டு வருதற்குப் பிரிகின்றதென்று கொள்க. இது "வேற்றுநாட் டகல்வயின் விழுமம்"† கூறுகின்றது.

(இ - ள்.) இன்றீங்கிளவியை யுடையாய்! நெஞ்சு நடுக்கமுறும்படி பலகாலுங் கேட்டுங், கேட்ட அதனை உண்டோ இல்லையோவென்று ஐயுற்றுந், தாம் அஞ்சியிருந்த பொருள் தாங் கேட்டபடியிலே மெய்யாய் வருத்தமாமெனும் பழமொழி அறுதியாக உண்மை; அஃது எங்ஙனேயென்னில், நின்னுடைய உறவானவர், பலநாளும் புதியதொன்றாக என்னைப் பாராட்டுகையினாலே யானும் இப்பாராட்டுதல் ஒரு பிரிவையுடைத்தென்று கருதி அப்பிரிவை ஆராயாநிற்க, ஐந்து வகையாகக்‡ கூட்டின மாசில்லாத வண்மையையுடைய படுக்கையிற் புணர்ந்த புணர்ச்சியிடத்தே என்தோளிலே துயில்கொண்டு கனாக்காண்கின்றவர், "ஆராய்ந்த கோற்றொழிலையுடைய செறிந்த தொடியணிந்த முன்கையினையுடையாள் கையாறுகொள்ளாளாய்க், குத்துங் கொம்பினையுடைய யானை நீர் வேட்கையினாலே விளங்குகின்ற பேய்த்தேரின் பொருட்டு ஓடும் நெடுமலையில் வெய்யசுரத்தைப் போய் இரு பெருவேந்தரையுஞ் சந்துசெய்வித்தற்கு நடுவாகநின்று சந்துசெய்வித்தபின்னர் யாம் பெறுதற்கு உரியவாய் அவர் எமக்குச்செய்யும் பூசனையாகியபொருள் அவர் தந்து முடியுமளவுந், தனக்கு வரைவினையுடைய இல்லறத்தையுங் காத்துச் செந்தீயையும் பாதுகாக்க வல்லளோ!"வென்று கூறினார்; ஆய்ந்த இழையினையுடையாய்! நங்காதலர் கூட்டத்திற்கு இடையீடாகக் கொண்ட காரியம் பொருள்வயிற்பிரிவாயின், யாந் தம்மைப் பிரிந்து உயிர்வாழும் வலியிலேமாயின், இனி, "அவள் மார்பிற் றொய்யிலை நீங்காதவர் இப்பொழுது துறந்தார்"ரென்று நொய்ய மகளிர் கூறும்பழி தம்மிடத்தே நிற்ப, என்னுயிர் தம்மோடேகூடப் போயிற்றென்று சொல்.

---

* தொல். பொருள்: உ௬. † தொல். பொருள்: க௪௬.

‡ ௧௨-ம் பக்கம் பார்க்க.

'நெஞ்சநடுக்குறக்' கேட்டது, "இவ் ஆலிலே பேயுண் "டென்று கேட்டாற்போல்வது. 'இன்கிளவி,' பின்பு காரியத்தில் இனிய கிளவி; 'தீங்கிளவி,' கேட்ட காலத்தில் இனிய கிளவி.

'கனவுவா'ரென்றது தொடங்கி 'என்று'ரென்ற துணையுங் கனவென்னும் மெய்ப்பாடு. 'கையாறு,' உயிர்ப்பின்றி வினையொழிந்தயர்தல். தொய்யில் அவரெனக் கூட்டுக.

'போயின்'றென்ற குற்றுகரம் இன்பெற்று னகரந் திரியாமல் நின்றது. தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள்.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இது சீருந் தளையுஞ் சிதையாமற் பன்னீரடியின் இகந்து ஒரு பொருணுதலாத சேர்வகைக் கலிவெண்பா. (உச)

## உரு.

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுண் முதியவன் புணர்ப்பினா
லைவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழ
லொள்ளுரு வரக்கில்லை வளிமக னுடைத்துத்தன்
னுள்ளத்துக் கிளைகளோ டியப்போகு வான்போல
வெழுவுறழ் தடக்கையி னினங்காக்கு மெழில்வேழ
மழுவஞ்சூழ் புகையழ லதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுர
மிறந்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின் ;

மணக்குங்கான் மலரன்ன தகையவாய்ச் சிறிதுநீ
தணக்குங்காற் கலுழ்பானாக் கண்ணெனவு முளவன்றே
சிறப்புச்செய் துழையராப் புகழ்பெற்றி மற்றவர்
புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல் ;

ஈங்குநீ ரளிக்குங்கா லிறைசிறந் தொருநாணீர்
நீங்குங்கா னெகிழ்போகும்[1] வளையெனவு முளவன்றே
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவ
ரொல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்புபோல் ;

(பாடம்.) 1. நெகிழ்பேகும்.

ஒருநாணீ ரளிக்குங்கா லொளிசிறந் தொருநாணீர்
பாராட்டாக் காற்பசக்கு நுதலெனவு முளவன்றே[1]
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல் ;

உரு. எனவாங்கு,

யாநிற் கூறுவ தெவனுண் டெம்மினு
நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
னளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே.

இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி நீ பிரிந்தாற் பீடிலார் தொடர்புபோல நும்மை அலர் தூற்றுவன இவ்வகைப்பட்டன சிலவுளவெனத் தலைவி யாற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது.

(க—கஉ) வயக்குறு . . . . கேட்டீமின்:—

(இ - ள்.) வடமொழிப் பெயர் பெற்ற வயக்குறு மண்டிலம்போலும் முகத்தவனுடைய மக்களுள் மூத்த துரியோதனன் சூட்சியாலே, ஐவ ரென்று உலகத்தார் புகழுந் தன்மபுத்திரர் முதலியோர் உள்ளேயாகக், கையாலே புனையப்பட்ட அரக்குமாளிகையை விரைந்து நெருப்புச்சூழ்ந் தாற்போலக், களிப்பு விளங்குகின்ற மதத்தவாகிய கடிய களிறுகள் உள்ளே யாக, உலர்ந்த மூங்கிலையுடைய உயர்ந்த மலையைச் சூழ்ந்த முழங்குகின்ற அழலைக், கணையத்தை மாறுபடுகின்ற[2] தடக்கையினையுடைய தன் இனத் தைக் காக்கும் அழகினையுடைய வேழம், புகையழலையுடைத்தாகிய ஒள்ளிய உருவத்தினையுடைய அவ்வரக்கில்லை அந்த வீமசேனன் அழித்துத் தன் உளத்திற்குப் பொருந்தின சுற்றத்தோடே பிழைக்கப் போகின்றவனைப் போல, அதர்படும்படி மிதித்துத் தம்முடைய திரளோடே கூடிப் போதுங் காட்டுப் பரப்புச் சூழ்ந்த குன்று அழலும் வெய்தாகிய சுரத்தை இறப்பீ ராயின், ஐயனே ! பின்னை இவளுடைய நிலைமையைக் கேட்பீராக !

வடமொழிப்பெயர் பெற்ற வயக்குறு மண்டிலம் போலும் முகத்தவ னென்றது, ஆதித்தரிற் பகனென்னும் வடமொழிப்பெயரைப் பெற்ற விளங்குதலுறும் ஆதித்தனைப் போலும் முகத்தையுடையவனென்பது ; அவன் தான் குருடாயினமையிற் பிறரைக்காணாதவாறுபோல இவனும் பிறரைக் காணாத முகத்தையுடையவனென்றவாறு ; என்றது திருதராஷ் டிரனை. இனி, விளக்கமுற்ற கண்ணாடியின் பெயரை வட சொல்லாகிய பெய ராற்பெற்ற முகத்தவன் என்றலுமாம்; அது தர்ப்பணானன னென்னும்

(பாடம்) 1. உளதன்றே. 2. மாறுபடுக்கின்ற.

பெயரை. அது பிறரைத் தான் காணுதவாறுபோல இவனும் பிறரைக் காணு னென்றதாம். இனி, விளக்கமுற்ற நாடெனநின்ற அச்சொல்லினைத் திருத ராஷ்ட்ரனென்னும் வடமொழிப் பெயராலே தமிழ்ச்சொலீருகத் திரித்த ததராயனென்னும் பெயர் பெற்ற பாண்டுவுக்கு மூத்தவனென்றும் உரைப்ப.

முற்றிய முழங்கழலே, இனங்காக்கும் வேழம், புகையழலேயுடைய அவ் வரக்கில்லே அவ்வளிமகன் உடைத்துக் கிளைகளோடே போவான்போல, அதர்படமிதித்துக் குழுவொடுபுணர்ந்து போஞ்சுரமென்க. அழலேமிதித்துப் போமென முடிந்தது. அழுவஞ்சூழ் குன்று அழல்சுரமென்க. இது சுரத் திற்கு அடை.

'ஐய கேண்மி'யென்பது ஒருமைப்பன்மை மயக்கம். ஆயில், ஆலெவ விகாரமாயிற்று.

இது தரவு.

(கசு—கசு) மணக்குங்கால் . . . . தொடர்புபோல் :—

(இ - ள்.) தம்மிடத்தே இருந்தாராக அவர்களுக்குச் சிறப்புக்களைச் செய்து புகழ்ந்து வாழ்த்தி அவர் எழுந்த அளவிலே அவர்க்குள்ள பழிகளைப் பலர்க்குங் கூறும் புறங்கூறுவாருடைய உறவுபோல நீர் கூடியிருக்குங் காலத்துச் செவ்வியைத் தோற்றுவித்து மலரையொத்த தகைமையினையுடைய வாய்ச் சிறிதுபொழுது நீர் பிரியுங்காலத்து நம் பழியைத் தூற்றி அழுத லமையாத கண்ணெனவுஞ் சில பகை உளவன்றோ ?

அப்பகையைப் பேணுங் கண்ணெனவுமென்றது, "கண்ணின் சிறந்த வுறுப்பில்லை"* எனப்பட்டும் பகையாமென்றுங்[1] குறிப்பிற்று.

(கஎ—உ0) எங்குநீ . . . . தொடர்புபோல் :—

(இ - ள்.) ஒருவர்க்குச் செல்வமுண்டான இடத்து நீங்காதிருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து பின்னை அவர் மிடித்தகாலத்து அவர்க்கு ஒன்றை உதவுதலில்லாத அறிவில்லாதாருடைய † உறவுபோலே நீர் நும் மிடத்தே கூடியிருந்து அருள்செய்யுங் காலத்து இவட்கு உண்டாகிய அழகைத் தானும் பெற்று இறைமிசை சிறந்துகாட்டி ஒருநாள் நீர் பிரியுங் காலத்துத் தோள் மெலிகையினாலே தான் உதவி செய்யாது கழன்றுபோம் வளையெனவுஞ் சில பகை உளவன்றோ ?

அப்பகையைப் பேணும் வளையெனவுமென்றது சிறந்து [illegible]மாயினும் பகையாயிற்றென்றவுங் குறிப்பிற்று.

---

* நான்மணி. ருக. † அகம். எக.; கஉகூ-ஆம் குறளுரை.

(பாடம்) 1. பகையா யிருக்குமென்னுங்.

(உக—உச) ஒருநாணீ . . . . தொடர்புபோல் :—

(இ - ள்.) இருவர் மனமும் பொருந்திய நட்பாலே அவன் கூறிய மறைப்பொருளை அறிந்து அம்மறைப்பொருளை அவன் நீங்கிறுற் பிறர்க்கு இருந்து சொல்லும் பெருமையில்லாதார் உறவுபோலே, ஒரு நாள் நீர் அளி செய்யுங் காலத்து நும் அளிக்குத் தானுங் கூடிறுற்போன்று ஒளி மிக்கு, ஒரு நாள் நீர் அளியாக்காலத்து நும்முடைய குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்துகாட்டும் நுதலெனவும் ஒரு பகை உண்டன்றே ?

அப்பகையைப் பேணும் நுதலெனவுமென்றது, சிறப்புறுப்பாய் அழகு கொடுத்தற்கு உரியது பகையாயிற்றென்னுங் குறிப்பிற்று. மெய்யெல்லாங் கோலஞ்செய்தாலும் நுதற்குத் திலகம் முதலியன தீட்டாக்கால் அவை கோலமாய்த் தோன்றாத தன்மை நுதற்கு உளதாகலிற் சிறப்புறுப்பாயிற்று.

இவை மூன்றுந் தாழிசை.

(உரு) எனவாங்கு :—

(இ - ள்.) என்று ; 'ஆங்கு' : அசை.

இது தனிச்சொல்.

(உசு—உகூ) யாநிற் . . . . கவினே :—

(இ - ள்.) யாம் நினக்குக் கூறுகின்ற வார்த்தையால் என்ன பயன் உண்டு ? எம்மினுங்காட்டில் அப்பகையுண்மையை நீ நன்றாக அறிந்தாய் ; அதுவுமன்றி, நெடுந்தகாய் ! இந்த ஆராய்ந்த இழையினையுடையாள் அழகு நீ அளித்தலை நீங்குங் காலத்து இவ்விடத்து, வானந் துளிமாறுபொழுது இவ் வுலகங் கெடுமாறுபோலக் * கெடுங்காண் ; அதனை உட்கொள்ளாய்.

இது சுரிதகம்.

இதனுற் றோழிக்கு இழிவுந் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இது பெருமைக்கெல்லை கூறிய பன்னீரடித் தரவும் நான்கடித் தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உச)

உரு.

ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு
மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலு

* குறள். ருருஎ.

மானேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமு மாங்கத்[1]
தீதுதீர் சிறப்பி னைவர்க ணிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்று லிளவேனின் மேதக ;
பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொலைத்தவென் றடமென்றோ ளுள்ளுவா
ரொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர் ;
திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவோர்
நசைகொண்டு தந்நிழல்[2] சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர் ;
அறல்சாஅய் பொழுதோடெம் மணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவா
ருறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
யாறின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட் டுறைபவர் ;
எனநீ,
தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.

இது "மேவிய சிறப்பி னேனோர்"* என்னுஞ் சூத்திரத்திற் பணைமேற்சென்ற அரசன் திறைபெற்ற நாடு காத்து அரசன்கண் சென்ற பொருண்முறைமை ஆடிப் படுத்துவதற்குப்[3] பிரிவனென்றலின், பிரிவின்கண் தலைவன் இளவேனிற் காலத்துப்[4] பிரிய, அக்காலவரவின்கண் தலைவி ஆற்றுளாய் அவர் தமக்கு அருளுங்காலையில் அருளார்கா ணென்றுட்குத், தோழி, அவர் வாவிற்கு இக்காலந் தூதாயன்றே வந்தது, நீ ஆற்றுவாயாகவென வற்புறுத்தியது.

(க—அ) ஒருகுழை . . . . மேதக :—

(இ - ள்.) நீர்பொருகின்ற கரையினிற்கும், ஒரு பூங்குழையையுடைய நம்பி மூத்தபிரானைப்போலப் பூங்கொத்துக்கள் பொருந்தின வெண்கடம்பும்

---

* தொல். பொருள் : ௨அ.

(பாடம்) 1. ஆங்குத். 2. தக்கிழல். 3. படுத்துவதற்குப். 4. காலை குறித்துப்.

பருதியாகிய அழகிய செல்வனைப்போல அரும்புகள் அலர்ந்த செருந்தியுஞ், சுறவையுடைத்தாகிய கொடியினையுடைய காமனைப்போல மிஞிறுகள் ஆரவாரித்தற்கிடமாகிய காஞ்சியும், அவன் தம்பி சாமனைப்போல நிறம் விளங்கிப் பூக்கள் நெருங்கின ஞாழலும், இடபத்தினையுடைய கொடியினையுடைய இறைவனைப்போலப் பூக்கள் காலத்தை எதிர்கொண்ட இலவமுந், தமக்குக் குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய ஐவர்களுடைய நிறத்தின் றன்மைபோல, அக்கரையிடத்துப் பூக்கள் விரிந்த பிற மரங்களோடே அழகுபெறப், பிரிந்தார்க்கு நோவு பொருந்தக், கூடியிருந்தார்க்குப் பெருமை பொருந்த இளவேனில் வந்துற்றது ;

'மீனிலேறு,' 'ஆனிலேறு,' 'மிஞிறார்க்குங் காஞ்சி': இடத்துநிகழ் பொருளின் றொழில் இடத்தின்மேலே நின்றது. 'ஏனோன்': ஏனையோனின் விகாரம். 'ஆங்'கென்றது அக்கரையை. கரை மராமுஞ் செருந்தியுங் காஞ்சியும் ஞாழலும் இலவமும் பிற மரங்களோடே கவின்பெறவென இடத்துநிகழ் பொருளின் றொழில் இடத்துமேல் ஏற்றலுமொன்று.

இது தரவு.

(க—கஉ) பல்வரி . . . . டுறைபவர் :—

(இ - ள்.) இயற்கைநலங் கெட்ட என்னுடைய பெருமையையுடைய மெல்லிய தோளைப், பலவரியினையுடைய இனமாகிய வண்டுகள் புதிதாகிய தேனை நுகரும் இளவேனிற் காலத்தே, கூட நினைப்பார், முன்னர் அந்நாடு ஆள்பவர் கலக்கமுறுத்த அலைபெற்றுப், பின் தன்னை நிழலாக அடைந்த குடிமக்களுக்கு நெஞ்சு வருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து, முன்பு நாடாட்சிபெற்ற பகைவரை வென்ற புகழை உலகத்தார் புகழப் புதுமையையுடைய நாட்டிலே இருக்கின்றவர்* ;

என்றதனால், திறைபெற்ற நாட்டைத் திருத்தித் தன் நாடுபோல நெறிமுறைமை நடத்துவித்தலே பொருளென்று இருக்கின்றவர் நம்மை நினையாராகவென்று நிகழ்ந்தது கூறினாள். 'விருந்து' நாடெனவே பகைவர் தோற்றுத் திறை கொடுத்தமை தோன்றிற்று.

'உள்ளுவா'ரெனு முற்றுவினை பெயர்கொண்டு நின்றது; காத்து உறைபவரென்க.

(க௩—க௬) திசைதிசை . . . . டுறைபவர் :—

(இ - ள்.) குற்றமற்ற என் நலங்கெடுவதற்குத் திசைதோறுந் திசைதோறுந் தேனினம் ஆரவாரிக்குந் திருமருதந்துறைமுன்னே அருளுதலைச் செய்வார், நம்மைக் காத்தற்குரியான் இவனென்று நச்சுதல் கொண்டு தம்மை நிழலாக வந்தடைந்த குடிமக்களைத் தமக்குப் பாரமென்று

* புறப். வெண். வஞ்சி : எ.

பொறுத்துத் தம் புகழ் உலகெங்கும் பரக்கையினாலே அவ்வுலகத்தார் புகழத் தமக்கியலாகிய நாட்டிலே இருக்கின்றவர்;

"யாறுங் குளனுங் காவு மாடிப் - பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப"* என்பதனால், திருமருதந்துறையில் அருளுவாரென்றான்.

(கஎ—உ0) ஆறல்சாஅய் . . . . டுறைபவர் :—

(இ - ள்.) எம்முடைய அழகினையுடைய நுதலும் பசந்து, நாமும் வலியமைந்த[1] பெரிய அழகை இழப்பதற்கு நீராற்று ஓடுதல் சுருங்கின இளவேனிற் காலத்தே அருளுதலைச் செய்யார், முன்பு காட்சிபெற்ற அரசர்செய்த வருத்தத்திற்கு அஞ்சி நிழலாக வந்தடைந்தார்க்கு நெஞ்சு வருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து, செறியவற்றி ஆய்வரசர் பொருளை விரும்புகையினாலே, அவரை நீங்கின நாட்டிலே இருக்கின்றவர்;

இவை மூன்றுந் தாழிசை.

(உக—உரு) எனநீ . . . . தூதே :—

(இ - ள்.) என்றுகூறி மனஞ்சுழலாதே கொள்; அதற்குக் காரணம் யாதெனில், நங் காதலர் பொருகின்ற மாறுபாட்டையுடைய யானையையுடையவராய்ப் போர்செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவருடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலான நாடுகளைப் பெற்ற வெற்றியையுடையராகையினாலே அவருடைய மெய்ம்மொழியாகிய தூது வருகின்றதென்றுசொல்லி வந்ததுகாண்; இனித், தோழி! நீ இனிது வாழ்வாயாக!

'மேம்பட்ட' ஈண்டுப் பெயராய் நின்றது. வாரலென்பதன்று என்று பாடமாயின், வெற்றியையுடையராகையினாலே அவர் மெய்ம்மொழியாகிய தூது வந்ததென்று சொல்லி வந்ததென்க.

'எனநீ' தனிச்சொல்; சுருங்கியது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இது தரவின்கண் ஐஞ்சீரடிவருதலிற் கொச்சகமாய்க் கலிவெண்பாட்டின் வேறாயிற்று. (உ௬)

## உஎ.

ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போற் றீங்கரை மரநந்தப்
பேதுறு மடமொழிப் பிணையெழின் மானோக்கின்
மாதரார் முறுவல்போன் மணமௌவன் முகையூழ்ப்பக்

* தொல். பொருள் : கஙக.

(பாடம்) 1. வலிமையமைந்த.

காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழல்குபு
தாதொடுந் தளிரொடுந் தண்ணற றகைபெறப்
பேதையோன் வினைவாங்கப்* பீடிலா வரசனுட்
டேதிலான் படைபோல விறுத்தந்த திளவேனில் ;

நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பாணுக் கூடலு முள்ளார்கொல் ;

கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல னணிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னுதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல் ;

மையெழின் மலருண்கண் மருளூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினாற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்தம் மாயமோ டமர்ந்தாடும்
வையைவா ருயரெக்கர் நுகர்ச்சியு முள்ளார்கொல் ;

எனவாங்கு,

நோய்மலி நெஞ்சமோ டிணைய றோழி
நாமில்லாப் புலம்பாயி னடுக்கஞ்செய் பொழுதாயிற்
காமவேள் விழவாயிற் கலங்குவள் பெரிதென
வேழுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே.

இது தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண் எம்மையோமறக்க, இக்காலத்து இவ்வூரின்கட் டாம் விளையாடும் விளையாட்டும் மறந்தாரோ வெனச் சொல்லி ஆற்றுளாய தலைவிக்குத் தோழி தலைவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

(க—அ) ஈதலிற் . . . . திளவேனில் :—

(இ - ள்.) கொடுத்தற்றொழிலிடத்துப் பொருட்குறை காட்டாமற் கொடுத்து இல்லறம் நிகழ்த்தும் முறைமையை அறிந்து நிகழ்த்திய தீவினை யில்லாதவனுடைய செல்வம் மிகுமாறுபோல, இனிதாகிய நீரையுடைய ஆற்றங்கரையில் மரங்கள் தழைக்கக், கேட்டோர் மயக்கம் உறுதற்குக்

* கலி. அ : க.

காரணமான மடமொழியினையும் மான்பிணையினது அழகையுடைய நோக்குப்போலு நோக்கினையுமுடைய காதலையுடைய மகளிருடைய எயிறுபோல மணத்தையுடைய மௌவலின் முகை அலரத், தண்ணிதாகிய அறலினையுடைய மணல் கழன்று வீழ்ந்த தாதாலுந் தளிராலுங் காதலரைக் கூடினவருடைய மயிர்போல அழகுபெற, இளவேனிற்காலம், அறிவில்லாத அமைச்சன் காரியத்தைப் புலப்படுத்தப் படைவலி இல்லாத அரசனது நாட்டிலே பகையரசன் படை வந்துவிடுமாறுபோலத், தங்குதலைச் செய்தது ;

ஊழ்ப்பத் தகைபெற இளவேனில் இறுத்தந்ததென்க. 'காட்டா' தென்பதற்குக் கொடுத்தென்றுங் 'கழல்குபு' வென்பதற்கு வீழ்ந்தவென்றும் வினை வருவிக்க.

இது தரவு.

(கூ—கஉ) நிலம் பூத்த . . . . முள்ளார்கொல் :—

(இ - ள்.) நிலம் பொலிவு பெறுதற்கு ஏதுவாகிய மரத்தின்மேலேயிருந்து காலங்கண்டு எக்கழுத்தஞ்செய்து[1] ஆரவாரிக்குங் குயில்கள் நம்மை இகழும்படியாக, நன்மை பொலிவுபெற்ற நமது நிறங்கெடும்படியாகத் தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக ; தாம் அணிந்த கலங்கள் பொலிவுபெறுதற்குக் காரணமான அழகினையுடைய பரத்தையருடைய அழகு தம் மனத்தை மகிழ்ச்சியைச் செய்கையினாலே தம் அறிவு பொலிவுபெற்று அவரைப் புகழ்தல் அமையாத கூடலையும் நினையாரோ ? நினைக்கில் வருவரன்றோ ?

பெயரெச்சத்திற்குக் காரணம்வருதல் கருவிக்கண் அடங்கும். 'மறந்தைக்க,' வியங்கோட் டிரிசொல்.

(கங—கரு) குளமிசை . . . . விரும்பார்கொல் :—

(இ - ள்.) நஞ்சாயல் கெட்டமைகண்டு மலைமேலே மயில் ஆரவாரித்து ஆடும்படியாக, ஊரிலுள்ளார் ஆரவாரித்து அலர் தூற்றும்படியாக, நம்முடைய இயற்கைநலமும் மிகக் கெடும்படியாகத் தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக ; பகைவரை மாயஞ்செய்து கொல்லாது வென்றுகொல்லும் பரக்குங் கடலிடத்து எய்தாநின்ற மாமரத்தைத் தடிந்த வென்வேலையுடைய[2] முருகன் திருப்பரங்குன்றின்மேற் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டையும் விரும்பாரோ ? விரும்பில் வருவரன்றோ ?

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளு - மந்நிலம் பொழுதொடு வாராவாயினும் - வந்த நிலத்தின் பயத்த வாகும்."* என்ற விதியாற்றி

* தொல். பொருள் ; சகூ.

(பாடம்) 1. எக்கழுத்தஞ் செய்து. 2. வென்றி வேலையுடைய.

குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற்காலத்து வருதலிற் பொழுதொடு புள்ளும் மயங்கிற்று.

(கஎ—உ0) மையெழில் . . . . முள்ளார்கோல் :—

(இ - ள்.) எம்மை மயலாக்கிக் கருமையுடைத்தாகிய அழகினையுடைய நீலமலர்போலும் மையுண்கண்ணை மகிழ்ச்சிகொள்ளும்படி தம்மோடே மருவுதலூட்டித் தாம் செய்த பொய்யாலே மனந் தம்மிடத்திலே புரிதலைச் செய்த தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; கோலஞ் செய்தலை யுடைய பரத்தையர் தம்முடைய திரளோடே மனம் பொருந்தி விளையாடும் வையையாற்றிடத்து நீண்ட உயர்ந்த இடுமணலிடத்து நுகர்ச்சியையும் நினையாரோ? நினைக்கில் வருவரன்றோ?

மருவுதலூட்டி யென்றார் அக்கண்ணிடத்து நாவாற் செய்யுந் தொழிலை. மருவூட்டிச் செய்தவென ஒரு சொல் வருவிக்க.

இவை மூன்றுந் தாழிசை.

(உக) எனவாங்கு :—

(இ - ள்.) என்றுகூறி; 'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(உஉ—உசு) நோய்மலி . . . . விரைந்தே :—

(இ - ள்.) நோய்மிக்க நெஞ்சோடே வருந்தாதேகொள்; தோழி! நாம் அமர்ந்த காதலர், தனிமையாயின், நாமில்லாத தனிமையாயிருந்தது; காலமாயிற், பிரிந்தார்க்கு நடுக்கஞ் செய்யும் இளவேனிற் காலமாயிருந்தது; ஊரிலுள்ளார் கொண்டாடும் விழவாயிற், காமவேளுக்குச் செய்யும் விழவா யிருந்தது; ஆதலாற் பெரிதுங் கலங்குவளென்று கருதிப் பகைவர் மயக்கம் உறுதற்குக் காரணமான கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தித் தாந் துணையாந்தன்மையை நமக்குத் தந்தார்காண்!

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இஃது எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் ஐயடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உசு)

உஅ.

பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவு
நாடினர் கொயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோற்
றோடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கட்
டோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்

செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போற் றுவர்மணல்
வையையா ரவிரற லிடைபோழும் பொழுதினான் ;

விரிந்தானா மலராயின் விளித்தானாக் குயிலாயிற்
பிரிந்துள்ளா ரவராயிற் பேதுறூஉம் பொழுதாயி
னரும்பட ரவலநோ யாற்றுவ ளென்னாது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை யளியென்றோ ;

புதலவை மலராயிற் பொங்கரின வண்டாயி
னயலதை யலராயி னகன்றுள்ளா ரவராயின்
மதலைஇ னெஞ்சொடு மதனில ளென்னாது
நுதலூரும் பசப்பாயி னுணங்கிறை யளியென்றோ ;

தோயின வறலாயிற் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயிற்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டழுமாது
பாயனோய் மிகுமாயிற் பைந்தொடி யளியென்றோ ;

எனவாங்கு,

ஆயிழா யாங்கன முரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா தம்மினுந்
தாம்பிரிந் துறைத லாற்றலர்
பரிந்தவண் செய்தி வருகுவர் விரைந்தே.

இஃது இளவேனில்வரவின்கண் ஆற்றாத் தலைவி ஆற்றாளெனக் கவன்ற தோழி, அவர் பிரிந்திருத்தல் நம்மினும் தாம் வல்லரல்லரெனச் சொல்லி வற்புறுத்தியது.

(க—எ) பாடல்சால் . . . . பொழுதினான் :—

(இ - ள்.) சுனையிடத்துப் பூக்களை ஆராய்ந்து பறித்தலும் வேண்டா வாகிப் பாடுதல் அமைந்த தலைமையினையுடைய பூக்களைக் கொம்புகள் தாம் கொடுக்க வேண்டுமென்று விரும்பியுங் கொடுப்பனபோல் இறைஞ்சி விளங்குகின்ற கமழுங் கண்ணியைக் கட்டிச் சூடும் அம்மகளிரிடத்தே நிலத்திலே தாழ்ந்து கொடுத்துத் துறைதொறுந் துறைதொறும் மரங்கள் அழுந்துமாறும் படி, சிவந்த தலைக்கோலந் தங்கின மயிர்போற் சிலவிடங்கள் சிவப்புடைத் தாகிய மணலையுடைய வையையாற்றில் ஒழுகுகின்ற விளக்கத்தையுடைய அறல்மணல் திருமகளுடைய அழகினையுடைய மார்பிடத்து முத்தாரத் தோடே ஒப்புக்கொண்டு நடுவே பிளந்தோடும் பொழுதின்கண்;

கவின்பெற அறல் இடைபோழுமென்றது காரணகாரியமாம், பெருகியநீர் வற்றினகாலத்து அவை பூத்தலின்.

குறிஞ்சிநிலத்திற் சுனைப் பூக்களைத் தேடிப் பறியாதபடி இக்கரையில்[1] மரங்கள் வேண்டும் பூக்களைக் கொடுத்தனவென்றார்.

'சுனையவு' மென்னும் உம்மையைக் கொய்யலுமென மாறுக ; உம்மை, எதிர்மறை. 'சினையவு'மென்னும் உம்மையை நயந்துமென மாறுக ; உம்மை, சிறப்பு.

கல்லிடத்துநீர்நிலைக்குச் சுனையென்னும் பெயரே ஆண்டுக்கூறுதலானும், யாற்றங்கரைக்கண் இன்மையானுஞ், சினை தாழ்ந்து கொடுத்தலன்றிச் சுனை தாழ்ந்து கொடுத்தல் இன்மையானும் இதுவே பொருளாம். 'தோடுறத் தாழ்ந்' தென்றதற்குத் திரட்சியுறத் தங்கியென்றுங், 'கவின்பெற' வென்றதற்குக் கவின்பெறாநிற்கவென்றும் பொருள்கூறிற், பெறாநிற்க 'இடைபோழு' மென்றது பிறவினையாதலின் ஆற்றிற்குச் சிறப்புக் கூறிற்றன்றாய் வேறோர் வினையாமாறுமுணர்க.

இது தரவு.

(அ—கக) விரிந்தானா . . . . யளியேன்னோ :—

(இ - ள்.) மலர்கள் அலர்ந்து அமையாவாயிற், குயில்கள் தம் பெடையை அழைத்துக் கூவுமாயின், நந்தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயின், இளவேனிற்காலம் மயக்கம் உறுத்துமாயின், அரிய நினைவையுடைய அவலத்தைச் செய்யுங் காமநோய்க்கு இவள் ஆற்றுவளென்று கருதாது இவள் இறந்துபடுவளென்று நீ வருந்தும்படி எனக்குக் காமநோய் மிகுமாயின், வணங்கின இறையையுடையாய் ! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்னபயன் தரும் ?

(கஉ—கரு) புதலவை . . . . யளியேன்னோ :—

(இ - ள்.) மலர்கள் சிறுதூற்றினவையாயின்,[2] வண்டுகள் சோலையிடத்தனவாயின், அலர் அயலாரிடத்ததாயின், நந்தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயிற், பசப்பு ஒரு பற்றில்லாத நெஞ்சுடனே தானும் வலியளல்லளென்று கருதாதே நுதலிடத்தே பரக்குமாயின், அசைகின்ற இறையினையுடையாய் ! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்னபயன் தரும் ?

(கசு—கக) நோயினா . . . . யளியேன்னோ :—

(இ - ள்.) அற்றுவருதலையுடைய நீர் மணலிடத்தே செறிந்தனவாயிற், கொம்பிற் பூக்களிலே சுரும்பு ஆரவாரிக்குமாயின், தளிர் மாவிடத்தனவாயின், நந்தலைவர் நம்மை மறந்து நினையாராயிற், பூவினது அழகை இழந்த கண்கள் உறக்கத்தைக்கொண்டு ஆற்றியிராமற் றனிமையால் உண்டான

(பாடம்) 1. இக்கரையின். 2. சிறுதூற்றிலவையாயின்.

நோய் மிகுமாயிற், பசிய தொடியினையுடையாய்! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்னபயன் தரும்?

ஓகாரங்கள் எதிர்மறையாதலிற் பயன் தாரதென நின்றது.

இவை மூன்றுந் தாழிசை.

(உ0) எனவாங்கு :—

(இ - ள்.) என்று; 'ஆங்கு' அசை.

இது தனிச்சொல்.

(உக—உச) ஆயிழாய் . . . . விரைந்தே :—

(இ - ள்.) ஆராய்ந்த இழையினை யுடையாய்! அங்ஙனம் பயனின்றாக உரையாதேகொள்; சேய்நாட்டில் உறைகின்றவர்க்கு நம் வருத்தத்தைக் கூறினமாய் நாந் தூதுபோக விடவேண்டா; நம்மின்றுந் தாம் இக்காலத்துப் பிரிந்திருத்தலை ஆற்றாராய் விரைந்து வருகுவராதலால் வருந்தி என்ன காரியஞ் செய்கின்றாய்?

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இஃது எழடித்தரவும் நான்கடித்தாழிசையும் பொருள்பெற்ற தனிச் சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உக)

உஉ.

தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி
னல்லாந்தா ரலவுற வீன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதவிய பசலைதீர் நகன்றலைப்
புல்லிய புனிறொரீஇப் புதுநல னேர்தர
வளையவர் வண்டல்போல் வார்மணல் வரிக்கொள
விளையவ ளைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவ டிதலைபோ
லாயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதின்கண்;

சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் னிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடையுந் தலைத்தரூஉம்;

போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மற் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்;

தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு
நெடுநிலாத் திறந்துண்ண[1] நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்;

எனவாங்கு,

வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தேகிநம்
மருந்துயர் களைநர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் றேமொழி படர்ந்தே.

இது பருவ வரவின்கண் ஆற்றாத தலைவியைத் தோழி வற்புறுப்ப, வன்புறை யெதிரழிந்தாட்குத், தோழி, அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

(௧—௧௯) தோல்லேழில் . . . . போழுதின்கண் :—

(இ - ள்.) கருப்பந் தங்கிய காலத்துப் பிறக்கும் வேட்கையாகிய நோய் இளமைக்காலத்து அழகைக் கெடுக்குமளவன்றி மிகவருத்துகையினாலே அதற்கு அலமந்த சுற்றத்தார், பின்னர், அவள் மெய்ந்நோக்காடு கண்டு வருத்தமுறும்படி புதல்வனை யீன்றவள், அப்புதல்வனைக்கொண்டு அக்குடியையெல்லாம் பாதுகாத்துக்கிடந்த கிடக்கைபோலத், தன்னிடத்துப் பயிரையுண்டாக்கின உழவர், தனக்கு இடையில் வந்த நோய்க்கு வருந்திய வருத்தம் நீங்கும்படி, தான் ஈன்ற உணவுகளைக்கொண்டு குடிமக்களையெல்லாம் பாதுகாத்த உலகம், அவள் தன்னைப் புல்லிய ஈன்றணுமை தீர்ந்து புதுநலம் பெற்றாற்போலத், தான் ஈன்ற பசுமை தீர்ந்த புதிய அழகுதோன்ற, வளையினையுடைய இளையோர் இழைத்த வண்டற் பாவையும் பூவுங் கலந்துகிடந்தாற்போல வார்ந்த மணல் பூக்கள் உதிர்ந்து கிடந்த வடுவைத் தன்னிடத்தேகொள்ள, இளையமகளிருடைய மயிர்போல நுடமணலை ஊடறுத்தலையுடைய நீர் ஒழுக, மாமைநிறத்தையுடையவள் திதலைபோல மாவீன்ற சிறிது முற்றின தளிரின்மேலே அழகிய இதழையுடைய பலமலர்களினுடைய வியக்கத்தக்க தாதுகள் உதிர்தலைச்செய்யப்,* பெருமை பொருந்த இளவேனிற்காலம் வந்துவிட்ட பொழுதின்கண்ணே;

* கலி. ௪0 : ௧௯ - ௨0.

(பாடம்) 1. அறந்துண்ண.

11

(உஉ) எனவாங்கு :—

(இ - ள்.) எனச்சொல்லி;
'ஆங்கு': அசை.
இது தனிச்சொல்.

(உங—உசு) வருந்தினை . . . . . படர்ந்தே —:

(இ - ள்.) வருந்தித் தங்கின நின் வளை கழலும்படியாகத் தலைவர் பின் பாராதே அரிய நாட்டிலே பிரிந்திருந்து தேடும் பொருட்பிணியாலே போய்த், திருந்தின எயிறுகள் விளங்குதற்குக் காரணமான நின் தேன் போலும் மொழியை நினைத்து, நம் அரிய துயரைக் களைவாராய் வந்தார்; இனி, நீ வருந்தாதேகொள்.

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது, "நிலனொருங்கு மயங்குதலின்று"* எனவே, காலம் மயங்கு மென்றலின், வேனிலும் வாடையும் மாலையும் கங்குலும் வந்தன.

இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உஅ)

## ங0.

அருந்தவ மாற்றியார் நுகர்ச்சிபோ லணிகொள
விரிந்தானாச் சினைதொறூஉம் வண்டுந்தா தமர்ந்தாடிப்
புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புநீர்த் தெவ்வாயு
மிருந்தும்பி யிறைகொள வெதிரிய வேனிலான்;

துயிலின்றி யாநீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ
வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்;

பானாள்யாம் படர்கூரப் பணையெழி லணைமென்றோண்
மானோக்கி னவரோடு மறந்தமைகு வான்மன்னோ
வானாச்சீர்க் கூடலு ளரும்பவிழ் நறுமுல்லைத்
தேனார்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின்?

உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ

* தொல். பொருள் : கஉ.

நம்மை மறந்து அவ்விடத்தே அமைந்திருப்பன்; அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே;

(கரு—கசு) உறலியா . . . . நுளராயின்:—

(இ - ள்.) இக்காலம் பெறுதற்கரிய இளவேனிற் காலத்துடனே பெருமையினையுடைய பூங்கொத்துக்களையுடைத்தாகிய யாற்றிடைக்குறையைப் புடைசூழ்ந்து வையை அறலுண்டாம்படி ஒழுகுமென்று அவற்குச் சொல்லுவார் உளராயின், தன்னை உறுதற்குரிய யாம் ஒளிகெடும்படியாகக் காமனுக்கு எடுத்த திருநாள் இக்காலத்து வெற்றியையுடைய இழையினையுடைய பரத்தையருடனே விளையாடுவன்; * அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே;

"சினனே பேதைமை நிம்பிரி நல்குர - வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே" † என்பதனாற் பரத்தையரோடு விளையாடுவானெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாகவெனக் [1] காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது. இவை விளையாட்டிற் பிறந்த உவகை யென்னும் மெய்ப்பாடு; இவை தன்கட் டோன்றிய பெயர்பற்றி வரும்.

இவை மூன்றுந் தாழிசை.

(கஎ) எனவாங்கு:—

(இ - ள்.) எனச்சொல்லி; 'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(கஅ—உக) நுணியாநோ . . . . பேரிதே:—

(இ - ள்.) மீளாத காமநோயிலே வருந்தியமையாத தகைமையையுடையவள் நின்னுடைய விருப்பத்தையுடைய கழல் அணிந்த அடியைப் பணிந்து சேராத அச்சம் அமைந்த பகைவரைப்போலே பெரிது நடுங்கினள்; அவள் அழகைப் பெறும்படி அழகு விளங்கின நெடிய திண்ணிய தேரைச் செலுத்துவாயாக.

இது சுரிதகம்.

"பாசறைப் புலம்பலும்" ‡ என்புழித் தூதுகண்டு தலைவன் புலம்புவனாகலின், தூதாய்ச்சென்ற பாணன் கூறினான்.

இது "திணைமயக் குறுதலும்" § என்பதனாற் பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தலைவற்கு அசைவும் பிறந்தன.

---

* கலி. நரு : கஉ - கசு. † தொல். பொருள்: உசுரு

‡ தொல். பொருள் : சுக. § தொல். பொருள் : கஉ.

(பாடம்) 1. ஈண்டு அடையானாகவெனக்.

இஃது இளவேனிற் காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிருவென்று மண் ணசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக்காலமும் பின்பனிக்காலமும் வந்து வருத்தலின் ஆற்றாத தலைவியைத் தோழி வருவரென வற்புறுப்பவும், வன்புறை எதிரழிந்தவழித் தலைவன் யாங்குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராளெனப் பின்பனிக்காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகையாற் கூறியது.

(௧—௮) கடும்புனல் . . . . நுரைந்ததை :—

(இ - ள்.) யாறு கூதிர்காலத்துப்[1] பெருகுதலிற் கடிதாகிய நீர் வற்றிக் கால்களாக ஓடுதலுண்டாய்க் கலக்கந் தெளிந்து அழகுபெற, நெடிய குளங்களின் அயலே அயலே நுண்மணல் தோன்ற, அம்மணலின் அறல் மறையும்படி கோலஞ்செய்வனபோல ஈங்கையினது வாடற்பூக் காம்பு கழன்று அம்மணலிலே வீழக், கணவரைப் பிரிந்த மகளிர் நுதல் போல முன்பு பூத்த பீர்க்கம்பூ இப்பொழுது பூவின்றாகத், தாங் காதலித்த தலைவரைக்கூடின மகளிர் முகம்போலப் பொய்கையிற் பூக்குந் தாமரையைப் பொய்கை புதிதாகப் பூக்க, முன்பனிக்காலத்திற்கும் பின்பனிக்காலத்திற்கும் மேலாய்நின்ற இளவேனிற்காலம் ஆயிழாய்! நம்மைக் கூடினவர் தப்பாமல் வருவேமென்று கூறின காலம்; அதனாற்பெற்றதென்? அக் காலம் வருந்துணையும் ஆற்றியிராதபடி முன்பனிக்காலத்து வாடையாலும் மெய் வளைதற்குக் காரணமான பின்பனியாலும் உண்டாகிய வினை ஒழிந்து அயர்தல் இறந்துபாட்டை நமக்குக் கூட்டுகையிலுமே நெஞ்சு கலக்கமுறாநின்றது; யான் எங்ஙனம் ஆற்றுவேன்?

முன்னாகின்ற செயவெனச்சங்கள் 'மேனின்ற' வென்னும் பெயரெச்சத்தோடு முடிந்து, அது 'பொழு'தென்னும் பெயரோடு முடிந்தது.

கையாலும் ஒரு மெய்ப்பாடென் றுணர்க.

இது தரவு.

(௯—௧௨) மயங்கமர் . . . . வரைவாடை :—

(இ - ள்.) உலகிற்கு உணவுகளை விளைத்தற்குக் காரணமாகிய மதியின் கதிர்கள் பாலையொத்து விளங்கும் இராப்பொழுதோடே விளங்குகின்ற அணிகள் குளிரும்படியாக வந்த இந்த அசைதலையுடைய வாடைக்காற்று, இரண்டு படையுந் தம்முள் மயங்கின போரிலே மாறுகிய அரசனைக்கொன்று அவன் நாட்டைக் கைக்கொண்டு கூற்றின்மேலே வருமவருடைய வீரத்தாற் பிறந்த அழகை நாங் கண்டு நகரும்படியாக நம் உயிரைக்கொள்ளாது விடுவதொன்றாய் இருந்ததோ? அது கொண்டேவிடும்;

நயங்குதல் - அசைவு.

(பாடம்) 1. கூதிர்க்காலத்தும்.

செல்லுமென்று தூக்கி, அத்துணையும் ஆற்றாது இவள் வருந்துவளென்று கருதிக் கூற்றுவனையொத்த வேற்படையினையுடையவர் புகழ் வளர்கின்ற உயர்ந்த கூடலிலே நெடிய வெற்றிக்கொடிகளைக் கட்டும்படியாகப் புகுந்தார்காண்.

'நிறுத்து' என்றது, தூக்கியென்னும் பொருட்டு.

"கிழவி நிலையே வினையிடத் துரையார் - வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" * என்பதனால் உருவுவெளிப்படுதலின் 'இவள்' என்றான்.

"நிலனொருங்கு மயங்குத லின்று" † எனவே, காலம் இரண்டும் மயங்குமென்றலின் முன்பனியும் பின்பனியும் மயங்கிற்று.

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எட்டடித் தரவும் நான்கடித் தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (௩0)

௩௨.

எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற வைம்பால்போன்
மையற விளங்கிய துவர்மண லதுவது
வைதாக நெறித்தன்ன வறலவிர் நீளம்பா
லணிநகை யிடையிட்ட வீகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ நெறிகொளத்[1]
துணிநீராற் றூய்மதி[2] நாளா லணிபெற
வீன்றவ டகலைபோ லீர்பெய்யுந் தளிரொடு
மான்றவ ரடக்கம்போ லலர்ச்செல்லாச்[3] சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடு
நல்லவர் நுடக்கம்போ னயம்வந்த கொம்பொடு
முணர்ந்தவ ரீகைபோ லிணரூழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடு
நயந்தார்க்கோ நல்லைம னிளவேனி லெம்போல ;

பசந்தவர் பைதனோய் பகையெனத் தணித்துநம்
மின்னுயிர் செய்யு மருந்தாகிப் பின்னிய
காதல ரெயிறேய்க்குந் தண்ணருவி நறுமுல்லைப்
போதாரக் கொள்ளுங் காற்குராற் கென்னுங்,

* தொல். பொருள்: கஅகூ. † தொல். பொருள்: கஉ.

(பாடம்) 1. வெறிகொளத். 2. றூமதி. 3. லலர்செல்லா.

மாயிழைற்போல, நீயும் நெறிகொள அணிபெற எப்பொழுதும் வருவை யென்று விரும்பியிருந்தார்க்கு மிகவும் நல்லையோ?

நெறிகொளக் கொடியொடும் அணிபெறவெனக் கூட்டுக.

ஈர்: ஈர்க்குமரம்.

இளவேனில் எம்போல நயந்தார்க்கு நல்லையோவென மாறுக.

நீதான் வந்து அழகிதாகச் செய்தாயென இளவேனிலைநோக்கித் தோழி கூறினள்- அதனைநோக்கிக் கூறியபின்னர்த் தலைவியை நோக்கிக் (கூறுகின்றாள்.)

(கச—கக) பசந்தவர் . . . . விருந்தே:—

(இ - ள்.) தோழி! இவ்விளவேனில் குளிர்ந்த அருவியின் அருகேநின்ற நறிய முல்லையினது மகளிரெயிற்றை யொக்கும் பூக்களை நம்முடைய கமழ்கின்ற கொத்தாகிய மயிருக்கு நிறையக் கொய்துகொண்மினென்று கூறாநிற்கும்; அதுவேயுமன்றி உலகத்திற் பசந்தவருடைய வருத்தத்தையுடைய காமநோயையுந் தனக்குப் பகையென்று கருதிப் போக்கி விசேடித்து நம்முடைய இனிய உயிரை உண்டாக்கும் மருந்துமாய் நாம் துயர் அறுதற்குக் காரணமான வார்த்தையோடே நாம் முயங்கிய காதலருடைய தூதாய் வந்தது; ஆதலால் இனி அக்காலத்திற்கு விருந்தானவற்றை நாஞ் செய்வேம்.

பின்னரிய காதலர் தூதென மாறுக. பசந்தவர் நோயைத் தணித்து என்பதனானும், நம் இன்னுயிரைச் செய்யும் மருந்தாகி என்பதனாலுந் தலைவி காலங்கண்டு வருந்தினமை பெற்றாம். இளவேனிற்கண் வருவலெனக் கூறிப்பிரிந்தவர் தப்பாரென்பதுபற்றி அவர் வார்த்தையோடே தூதாய் வந்ததென்றாள்.

'கொள்ளு'மென்னும் உம்மீறு பன்மையுணர்த்தி முன்னிலையாய் நிற்றல் "இர் ஈர் மின்"* என்பதனுட் கூறினாம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிமிகிர்ந்தோடிய கொச்சகக்கலிப்பா. (கூக)

கூகூ.

வீறுசான் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயநந்திக் கவின்பெற
மணிபுரை வயங்கலுட் டுப்பெதிர்ந் தவைபோலப்
பிணிவிடு முருக்கித ழணிசயத் துதிர்ந்துகத்
துணிசய நிழலோர்க்கித் துதைபுடன் வண்டார்ப்ப

* தொல். சொல்: உஉச.

யாறு கண்களை விழித்துப் பார்த்தனபோலப் பக்கத்தினின்ற குளங்கள் நீர் நிறைந்து பூக்களால் அழகுபெறப், பளிங்குமணியை[1] யொக்கும் கண்ணாடிக் குள்ளே பவழம் அழுந்தப்பட்டவை தோன்றினாற்போல அரும்பவிழ்கின்ற முருக்கினுடைய இதழ்கள் அழகையுடைய குளங்களிலே காம்பினின்றுங் கழன்றுவீழத், தெளிந்த குளங்களின் நிழலிலே தம்மையுந் தாம் ஊதும் பூவையுங் கண்டு அவ்விடத்தே நெருங்கி வண்டுகள் சேர ஆரவாரிக்கும்படி யாகக் கரையினின்ற மரங்களெல்லாம் அரும்புகள் அலர்ந்து பல மணிகளைச் சூடினாற்போலப் பூக்களைச் சூட, எம்மைப்போலாது காதலையுடைய கண வரைக்கூடினவருடைய அகத்திடுதலையுடைய கையை நெகிழாதே தாதை வீழ்க்கும்[2] இளவேனிலோ வந்தது; பூவின்து அழகையுடைய மையுண்கண் வருந்த நம்மைக் கைவிட்டவர் வாராராயினார்;

ஓகாரம் பிரிநிலை.

இது தரவு.

(க0–கரு) எரியுரு . . . . பசப்பு :—

(இ - ள்.) இவ்விளவேனிற்பொழுது நெருப்பின் உருவையொப்ப இலவம் பூப்பப், பொரியின் உருவை யொப்பப் புன்குகள் பூ உதிரப், புதிய மலர் களையுடைய கோங்கம் பொன்னென்னும்படி தாதை அலர, நாம் வெறுக்கும் படி வந்து தனித்திருப்பாரை அகத்திடாது புறத்தே தள்ளி இகழ்ந்து இவ்வூர் அலர்தூற்றுங் கொடுமையை யொக்கும்; அது கண்டு பசப்பு எனது அழகையுடைய நலத்தை மறைப்பதுபோல இராநின்றது;

(கசு–உக) நோந்து . . . . நோய் :—

(இ - ள்.) பிரிந்த மகளிரை நகுதற்கு நங் காலம் வருகின்றதில்லையே யென்று நொந்திருந்து, அது வந்தபின்னர் நம் வருத்தங்கண்டு சிரிப்பன போலக் கொம்புகள் பூ மிக்கன; அதனைக் கண்டு என் நெஞ்சம் வருந்தித் தலைவரை நினைந்து அழிவதுபோலே இராநிற்கும்; மயில்கள் நம்மை இகழ்ந்து காலமன்றியுஞ் சேரத் திரண்டு ஆடுவனபோலே இராநிற்கும்; நங் கையில் வளைகள் நாங் காப்பவுங் கழல்வனபோலே இராநிற்கும்; என் கண் போலே அறுதியையுடைய நீர் இற்று ஒழுகும் இளவேனிற்காலத்துந் தலை வர் வாரார்; ஆதலால், இந்நோய் இனி இந்நிலையினும் மிகுவதுபோல இரா நிற்கும்;

(உஉ–உரு) நரம்பின் . . . . மரோ :—

(இ - ள்.) நரம்பின்[3] இனிய இசையைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம்போல, ஒலிக்கும் ஓசையையுடைய மிஞிறோடே தும்பி தாதை

(பாடம்) 1. பளிக்குமணியை. 2. யவிழ்க்கும். 3. நரம்பினது.

துள் ஆசிரியவடி சிறிதுவருமென்றலிற் 'பொரியுரு வுறழப் புன்குபூ வுதிர' என ஆசிரியவடி வந்தது. (௩௨)

௩௩.

மன்னுயிரேமுற மலர்ஞாலம் புரவின்று
பன்னீராற் கால்புனல்[1] பரந்தூட்டி யிறந்தபிற்
சின்னீரா னறல்வார வகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவ ரிறுதிக்கட்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
வின்னம ரிளவேனி லிறுத்தந்த பொழுதினான் ;
விரிகாஞ்சித் தாதாடி யிருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
யெரிபொத்தி யென்னெஞ்சஞ் சுடுமாயி னெவன்செய்கோ
பொறைதளர் கொம்பின்மேற் சிதரின மிறைகொள
நிறைகளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவு
முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்பு பனிவாருங் கண்ணாயி னெவன்செய்கோ ;
களையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல விசைப்பவுங்
கொளைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
கிளையழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயி னெவன்செய்கோ ;
எனவாங்கு,
நின்னுண்ணோய் நீயுரைத் தலமர லெல்லாநா
மெண்ணிய நாள்வரை யிறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே.

இது பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து ஆற்றுளாய தலைவிக்குத் தோழி அவன் வரவுணர்ந்து அழியுவகையாற் கூறியது.

(க—எ) மன்னுயி . . . . பொழுதினான் :—

(இ - ள்.) அகன்ற யாறுகள் அகன்ற உலகிடத்துப் பெருமையையுடைய உயிர்களெல்லாம் உயிர்வாழும்படி பலவாகிய நீரோடுகால்களாலே தம்

(பாடம்) 1. பாய்புனல்.

(௧௬—௧௯) தளையவிழ்பூஞ் . . . . னேவன்செய்கோ :—

(இ - ள்.) முறுக்கு அவிழ்ந்த பூக்களையுடைய சினையிடத்தே சுரும்பினம் யாழ்போலே ஒலியாநிற்கவும், கொண்ட கோட்பாட்டினைக் குலையாதவருடைய தீமையை மறையாநிற்பேன் ; அதனாற் பெற்றதென்? மறைப்பினுஞ் சுற்றங் கெட வாழ்பவன் ஆக்கம் பொலிவழியுமாறுபோலப் பொலிவழிந்து தோள்கள் வளைகிடத்த லமையாவாய் நெகிழ்ந்து கழலுமாயின் யான் அதற்கு என்செய்வேன் ?

கண் பனிவாருந், தோள் வளையோடுமெனச் சினைவினை முதன்மேல் நின்றது.

இவை மூன்றுந் தாழிசை.

(௨௦) எனவாங்கு :—

(இ - ள்.) என்றுசொல்லி ;

'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(௨௧-௨௪) நின்னுண்ணோய் . . . . தாங்கே :—

(இ - ள்.) நின் நெஞ்சினோய் கூறி நீ[1] சுழலாதேகொள். எடீ! நாம் வருவரென எண்ணி யிருந்த நாளெல்லை கடவாமற், கண் உறுகின்ற வருத்தத்தைக் கை நீக்கினாற்போலக் காதலர் சமைத்தமாவினையுடையராய் வந்தார் காண் ;

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எழுடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (௬௬)

௩௫.

மடியிலான் செல்வம்போன் மரனந்த வச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவண் மேனிபோற் றளிரீன வம்மேனித்
தாய சுணங்குபோற் றளிர்மிசைத் தாதுக
௫. மலர்தாய பொழினண்ணி மணிநீர்க்[2] கயநிறப
வலர்தாய துறைநண்ணி யயிர்வரித் தறல்வார
நனியெள்ளுங் குயிமேனேக்கி யினைபுகு நெஞ்சத்தாற்
றுறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ள லெல்லாநீ ;

(பாடம்) 1. நின் நெஞ்சினோயை நீ கூறிச். 2. மணிநீர.

வண்ணவண் டிமிர்ந்தானா வையைவா ருயரெக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கவவிநாம் விடுத்தக்கா
லொண்ணுதா லமக்கவர் வருதுமென் றுரைத்ததை ;

மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ
வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கா
லொளியிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை ;

நிலனாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை ;

எனவாங்கு,

உள்ளுதொ றுடையுநின் னுயவுநோய்க் குயிர்ப்பாகி
யெள்ளறு[1] காதல ரியைதந்தார் புள்ளியற்
காமர் கடுந்திண்டேர்ப் பொருநன்
வாய்மை யன்ன வைகலொடு[*] புணர்ந்தே.

இது வற்புறுத்துந் தோழி தலைவிக்கு, ஈண்டு வேனில் அல்லவோ அவர் வருவேனெனச் சொன்ன காலமென வற்புறுத்தியதாயினும், நீ வேறுகொள்ளல் அவர் வந்தாரெனத் தலைவன் வரவுணர்த்தித் தோழி ஆற்றுவித்தது.

(க—அ) மடியிலான் . . . . செல்லாது :—

(இ - ள்.) மாதே! நீ உள்ளம் மடிந்திருத்தலில்லாதவனுடைய செல்வம் பெருகுமாறுபோல† மரங்கள் பூப் பெருக்க, அங்ஙனம் முயன்று பெற்ற செல்வத்தைத் தான் வருத்தாமற் படிபெற்று உண்பாரது நுகர்ச்சிபோல அம்மரங்களிற் பலகொம்புகளிலே தேனையுண்டு மிஞிறுகள் ஆரவாரிப்பக், கரியநிறத்தையுடையவன் மேனிபோலத் தளிரை ஈன, அந்நிறத்திற் பரந்த அணங்குபோல அந்தத் தளிரின்மேலே தாது விழ, அந்த மலர்பரந்த சோலையை ஊடறுத்துப் பளிங்குபோலும் நீர்களையுடையவாகிய குளங்கள் யாற்றுநீரைப் பெறப், பூப்பரந்த துறைகளையுடைய நன்மணலைக் கோலஞ்செய்து அறலையுடைய நீர் ஒழுக, இவற்றின்மேலே தான் மொழிந்த தோற்றத்த பருவத்தாற் பிரிந்திருந்தாரை மிக இகழுங் குயிலைப் பார்த்து வருந்தி நெகிழ்கின்ற

* பதிற்.-உக-அ. † குறள்.-[illegible]

(பாடம்) 1. வெள்ளறு.

நெஞ்சத்தோடே அவர் நம்மைத் துறந்து இனி நினையாரென்று கருதி வெறுப்புக்கொள்ளாதேகொள்;

இது தரவு.

(கூ—கஉ) வண்ணவண் . . . . றுரைத்ததை :—

(இ - ள்.) ஒள்ளிய நுதலினையுடையாய்! நாம் நிறுத்தினவளவில் நில்லா வாய்க் கண் நீர்மல்க முயங்கி விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், நிறத்தையுடைய வண்டுகள் ஆரவாரித்து, இன்பம் அமையாத வையை யாற்றில் ஒழுங்குபட்ட உயர்ந்த இடுமணலிடத்துக் குளிர்ந்த அருவி நீராலே வளர்ந்த நறிய முல்லைப்பூவிற் றாதையுண்ணும் இவ்விளவேனிற் காலமல்லவோ?

'விடுத்தக்கால்': காலீற்று வினையெச்சம்.

(கரு—கசு) மல்கிய . . . றுரைத்ததை :—

(இ - ள்.) ஒளியிழாய்! நீர் எடுத்துக்கொண்ட காரியம் வெற்றி யுண்டாவதாகவென்று கூறித் தொழுது நாம் விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், பெருகியகாலத்து நீர் நிறைந்த ஆற் றிடைக்குறையிலே அவர் தம்மை மகிழும் பரத்தையரைக் கூடிக் காமனுக்கு நிகழ்த்துகின்ற விழாவிடத்தே அவருடனே விளையாடும் இவ்விளவேனிற் காலமல்லவோ?

(களஎ—உ0) நிலனாவிற் . . . . றுரைத்ததை :—

(இ - ள்.) விளங்குகின்ற இழையினையுடையாய்! இறந்துபடுவேமோ ஆற்றியிருப்பேமோவென்று பலவற்றையும் ஆராயும் நெஞ்சினையுடையே மாய் நாம் வருந்தி விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், நிலத்திலுள்ளார் நாவிலே வழங்கும் நீண்ட மாடங்களையுடைய மதுரையி லுள்ளார் அறிவினையுடைய சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புதுமை யைக் கொண்டாடும் இவ்விளவேனிற் காலமல்லவோ?

"வேந்துறு தொழிலே யாண்டின தகமே"* என்பதனான் இது பின் பனியிற் பிரிந்து இளவேனிலுள் வருதல் குறித்தலின் இருதிங்க ளிடை யிட்டது.

இவை மூன்றுந் தாழிசை.

(உக) என்வாங்கு :—

(இ - ள்.) எனச்சொல்லி; 'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

---

* தொல். பொருள்: கஅகூ.

(க—எ) கதிர்விரி . . . . விறல்வெற்ப :—

(இ - ள்.) எதிரே எதிரே ஓங்கிய பெருமையையுடைய மலையினது அகற்சியையுடைய சாரலில் இளஞாயிற்றினுடைய விரிகின்ற செறிந்த கிரணங்களினுடைய அழகைத் தன்னிடத்தே கொண்ட மாணிக்கப் பாறையிலே நிற்கப்பட்டு முழங்குகின்ற ஓசையையுடையவாய் இரண்டு மலையினின்றும் வீழ்கின்ற அருவி தனது அழகிய கொம்புகளின் மேலே வீழ்தலாலே முதிர்ந்த கொத்துக்கள் அலர்தல் கொண்ட முழவுபோலுந் தாளினையுடைய நெருப்புப்போலும் வேங்கை, புகரினையுடைய மத்தகத் தினையும் அழகினையுமுடைய யானைகள் பூவொடு கூடிய நீரை மேலே சொரியாநிற்க எக்காலமும் முறுக்கு நெகிழ்ந்த தாமரைமலரினது அழகை யுடைய அல்லியிலே வீறுபெற்றுத் திருமகள் விரும்பியிருந்தா லொத்த * தேஞறும் வெற்றியினையுடைய வெற்பனே!

சுடரின் கதிரினைக்கொண்ட அடுக்கமெனவே மாணிக்கப்பாறை யென் னும் பொருள் தந்தது. எதிர் எதிர் ஓங்கிய வரைகளைத் தலைவன் சுற்றத் தாருந் தலைவி சுற்றத்தாருமாகவும், அவற்றிடையடுக்கத்தைத் தலைவன் மனையாகவும், இரண்டருவியும் வீழ்கின்றதனை இருவகைச் சுற்றத்தாருஞ் செய்கின்ற சிறப்புக்களாகவும், இணர் ஊழ்கொண்டதனைப் புதல்வர்ப் பயந்தலாகவும், வேங்கையைத் தலைவியாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது பயவுவமப்போலி. இதனாற் கூறியது நின் நாட்டில் உறைகின்ற வேங்கை சிறப்பெய்தினாற்போலத் தலைவியும் நின் இல்லின்கண் வந்து சிறப்பெய்துமாறு கடிதின் வரைந்துகொள்க வென்றதாயிற்று. 'வரிநுத லெழுஉம்' முதலாகத் 'திருநயந்திருந்த' வென்ற வினையுவமம் முற்கூறிய உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்தா லும் உள்ளுறையுவமம் போலத் திணையுணர்தலைத் தள்ளாது நின்றது. இதற்கு விதி முற்கூறினும். †

(அ—கO) நன்னெவ்வங் . . . . னுணி :—

(இ - ள்.) என்னுடைய தோழி தன்னுடைய வருத்தமுறு நிற்கவும் நீ செய்த அருளில்லாமையை என்னையும் உட்பட மறைத்தாள்; அவள் இங் ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்டு யான் நின்னைப் பிறர் முன்னே பழிகூறுதலைத் தான் நாணிக்காண்;

யான் பழிகூறுவேனென்று தான் நாணியெனத் தலைவி குறியாத தொன்றனைக் கூறினமையின் இது குறியா கூறலாம்.

உம்மை, சிறப்பு.

---

* சீவக. - பதுமை. † இந்நூல் கOள-ஆம் பக்கம் பார்க்க.

(கக—கரு) கூருநோய் . . . . .ஹணி :—

(இ - ள்.) என்னுடைய தோழி மிகுகின்ற காமநோய் சிறவாநிற்கவும் நீ செய்த அருளில்லாமையைச் சேரியிலுள்ளாரும் அறியாதபடி மறைத்தாள்; அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்கு மப்பொழுதே[1] நீ நிலைபேறுடைமை யல்லையென்று யான் பிறர்க்குக் கூறுதலைத் தான் நாணிக்காண் ;

உம்மை, சிறப்பு. ' ஒரும் ': அசை.

(க௪—க௬) நோயட . . . . . ஹணி :—

(இ - ள்.) என்னுடைய தோழி காமநோய் வருத்துகையினாலே வருந்தியும் நீ செய்த அருளில்லாமையை ஆயத்தையும் மறைத்தாள் ; அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்டு மாயத்தை வல்ல நினது பண்பில்லாமையைப் பிறர் கூறுதலைத் தான் நாணிக்காண் ;

ஆயத்திற்கும் வருத்தம் புலப்படாமை மறைத்தாளென்ற உம்மை சிறப்பும்மை.

(கஎ) எனவாங்கு :—

அசை.

(க அ—உ) இனையன் . . . . விரைந்தே :—

(இ - ள்.) நினது தீமையான் உண்டாகிய அருந்துயரத்தை அந்தண்மைத்தாகிய அரிய நற்குணத்தினானே நீ பின்னர்க் காத்தாற்போல இத்தன்மையனவாகிய தீமைகளைப் பிறரறியாதபடி நினைத்தாளாய்க் காத்தவளுடைய ஆரஞரைத் தீர்க்கும் மருந்தாகிப் பெருமா ! நாம் விரைந்து செல்வேம் ;

' தீமையாயின, விட்டுப்பிரிவும்[2] அருமை செய்தயர்த்தலுமாம்.'

இதனாற் றலைவற்கு விரைவு[3] பிறந்தது.

இஃது எழுடித்தரவும் மூன்றடித்தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (௪)

௫௫.

விடியல்வெங் கதிர்காயும் வேயமலகலறைக்
கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை
யருமணி யவிருத்தி யரவுநீ ருணல்செத்துப்
பெருமலை மிளிர்ப்பன்ன சாற்றுடைச் சுனைபெய

(பாடம்) 1. கேட்டு அப்பொழுதே. 2. இட்டுப் பிரிவும். 3. வரைவு.

உருமுக்கண் ணுறுதலி னுயர்குர லொலியோடி
நறுவீய நனஞ்சாரற் சிலம்பலிற் கதுமெனச்
சிறுகுடி துயிலெழூஉஞ் சேணுயர் விறல்வெற்ப ;

கால்பொர நுடங்கல[1] கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை ;

புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்குநின்
னகன்மலை யடுக்கத்த வமையேய்க்கு மென்பதோ
கடையெனக் கலுழுநோய் கைம்மிக வென்றோழி
தடையின திரண்டதோ டைவாடச் சிதைத்தனை ;

சுடருற வுறநீண்ட சுரும்பிமி ரடுக்கத்த
விடர்வரை யெரிவேங்கை யிணரேய்க்கு மென்பதோ
யாமத்துந் துயிலல ளலமரு மென்றோழி
காமரு நல்லெழில் கவின்வாடச் சிதைத்தனை ;

எனவாங்கு,

தன்றிமை பலகூறிக் கழறலி னென்றோழி
மறையிற்றன் மருவுற மணந்தகட் பருகலாற்
பிறைபுரை நுதலவர்ப் பேணிநம்
முறைவரைந் தனரவ ருவக்கு நாளே.

இது வரைவிடையாற்றாத தலைவிக்குத் தோழி தான் தலைவனை நெருங்கி வரைவு கடாவ அதுகேட்ட தலைவன் வரைவுமுயற்சியான் வருதல் இடையிட்டதூஉந் தமர் வரைவெதிர்ந்ததூஉங் கூறி அவளை ஆற்றுவித்தது.

(க—எ) விடியல்வெங் . . . . விறல்வெற்ப :—

(இ - ள்.) விடியற்காலத்து விரும்பிய ஞாயிற்றைக் கெடுக்கும் மூங்கில் நெருங்கின அகன்ற மாணிக்கப்பாறையிடத்து, மணத்தையுடைய சுனையிடத்தே அழகுபெற்று வளர்ந்த காந்தளினது அழகிய குலையினைப், பெறுதற்கரிய மணி விளங்குகின்ற பொறியினையுடைய பாம்பு நீரை உண்டலாகக் கருதிப், பெரிய மலைகளைக் கீழ்மேலாக்குமாறுபோலே இருக்கின்ற காற்றினையுடைத்தாகிய செறிந்த மழையில் உருமேறு இடித்தலால் எழுந்த

(பாடம்) 1. நுடங்கலிற்.

உயர்ந்த ஓசையாகிய ஓசை பரந்து நறிய பூக்களையுடைய சாரலிலே ஒலிக் கையினாலே விரையச் சிறுகுடியினுள்ளார் உறக்கமுணரும் மிக உயர்ந்த வெற்றியினையுடைய வெற்பனே!

மாணிக்கப்பாறை தலைவி உறைகின்ற மனையாகவுஞ், சுனையிடத்துக் காந்தள் சுற்றத்தார் பேண அழகுபெற்ற தலைவியாகவும், மணத்தைத் தரும் அக்காந்தள் பாம்புபோற் றோன்றியது மேல் இல்லறத்தைத் தருகின்ற களவொழுக்கம் பிறர்க்குத் தீங்குபோற் றோன்றியதாகவும், உருமேறு இடிக்குதலால் எழுந்த ஓசை குறவர் சாரலெல்லாஞ் சிலம்பியது அங்ஙனந் தீதாகக் கருதின அயலார் கூற்றைக் கேட்ட தாய் கழறிய கூற்றைப் பரந்ததாகவுஞ், சிறுகுடி துயிலெழுந்தது காவன் மிகுதியாற் றலைவியுந் தானுங் காவு [illegible]யீடுபட்டு வருந்தித் துயிலின்றியிருந்த தன்மையாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது வினையுவமப்போலி.

(அ—கக) கடல்போர . . . . சினைத்தனை:—

(இ - ள்.) முயங்குதலமையாத கூட்டம்பெருமையால் வருந்தின என் தோழியுடைய பல இதழையுடைய மலர்போலும் உண்கண்கள் பசக்கும்படி நீ கெடுத்தது, காற்றடிக்கவுந் தன் பெருமையால் அசையாவாய் நின்று ஒலிக்கின்ற ஓசையினையுடைய அருவிகளையுடைய நினது பெருமையையுடைய வரையில் நீர்நிறைந்த சுனையின் மலரையொக்குமென்றும் பொருளாமையோ? அதுவன்றேல் அருளின்மையன்றோ?

(கஉ—கரு) புகர்முகக் . . . . சினைத்தனை:—

(இ - ள்.) உயிர்போம் பருவமென்று கூறும்படியாகக் கலங்குதற்கு ஏதுவாகிய காமநோயைக் கடக்கும்படியாக என் தோழியுடைய பெருத்தலை வாகிய திரண்ட தோள்களை அழகு வாடும்படி நீ கெடுத்தது, புகரையுடைத்தாகிய முகத்தையுடைய களிற்றோடே புலி பொருது தளைத்துத்[1] திரியும் நின்னுடைய அகன்ற மலையில் அடுக்கத்தனவாகிய மூங்கிலையொக்குமென்னும் பொருளைமையோ? அதுவன்றேல் அருளின்மையன்றோ?

(கசு—கக) சுடருறு . . . . சினைத்தனை:—

(இ - ள்.) நடுயாமத்துந் துயில்கொள்ளாத [illegible] மனத்தினையும் என் தோழியுடைய விருப்பம் மருவிய நல்ல எழுதி[illegible] நுதலை [illegible] நீ கெடுத்தது, ஞாயிற்றைத் தீண்டும்படியாக [illegible] கின்ற முழைஞ்சுகளையுடைய மலையினது பக்கமலையில் [illegible] போலும் வேங்கையினது பூவின் நிறத்தையொக்குமென்னும் பொருளாமையோ? அதுவன்றேல் அருளின்மையன்றோ?

---

(பாடம்) 1. பகைத்துத்.

'காமரு' : விகாரம் ; மருவும் : ஈற்றுமிசை உகரம் மெய்யொடுங் கெட்டு மகரஞ் சந்தியாற் கெட்டது.

(௨௦) எனவாங்கு :—

(இ - ள்.) என்று ; 'ஆங்கு': அசை.

(௨௧—௨௪) தன்றீமை . . . . நாளே :—

(இ - ள்.) தன் பொல்லாங்குகள் பலவற்றையுஞ் சொல்லி யான் கழறுகையினாலே அவர் என் கூற்றினை இஃதுண்மையென்று தெளிந்து களவொழுக்கத்திலே தான் நம்மோடு மருவுதலுறுகையினாலே கூடின உறவு பின்னர் வரைவுமுயற்சியான் அருகுகையினாலே, பிறையொத்த நுதலினை யுடையாய்! இக் களவொழுக்கத்தில் வேட்கை நீங்கி நாம் அவரைப் பேணி அவரிடத்தே தங்குதலை அவர் விரும்பின நாளிலே நஞ் சுற்றத்தாரும் அவர்க்கே கொடுப்பதாக அறுதியிட்டுவிட்டார் ; இதுகாண் நமக்குண்டாகிய நன்மை.

'தன்,' 'தான்,' 'அவர்' என்பது ஒருமைப்பன்மை மயக்கம். உறைதல் 'உறை' யென விகாரமாயிற்று.

இதனாற் றலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது.

இஃது ஏழடித்தரவும் நான்கடித் தாழிசையுந் தனிச்சொல்லும் நான் கடிச் சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி. (௧)

௪௧.

வீயகம் புலம்ப வேட்டம் போகிய
மாஅ லஞ்சிறை மணிநிறத் தும்பி
வாயிழி கடாத்த வான்மருப் பொருத்தலோ
டாய்பொறி யுழுவை தாக்கிய பொழுதின்
வெஞ்சினம் சினையென விறற்புலி முற்றியும்
பூம்பொறி யானைப் புகர்முகங் குறுகியும்
வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை
நயனுடை நட்பாக்கும் வினைவர்போன் மறிதரு
மயமிழி யருவிய வணிமலை நன்னாட ;

எறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறுஅன்
மாறினெ னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப
கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப்
பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக ;

அருஞ்செல[1] வாரிடை யருளிவந் தளிபெருஅன்
வருந்தினெ னெனப்பல வாய்விடூஉந் தானென்ப
நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலதொழு மனத்தோடு பைதலேன் யானாக;

களைபெய னடுநாள்யான் கண்மாறக் குறிபெருஅன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
னளிநசைஇ யார்வுற்ற வன்பினேன் யானாக;

எனவாங்கு,

கலந்தநோய் கைம்மிகக் கண்படா வென்வயிற்
புலந்தாயு நீயாயிற் பொய்யானே வெல்குவை
யிலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலைச்
சிலம்புபோற் கூறுவ கூறு
மிலங்கே ரெல்வளை யிவளுடை நோயே.

இஃது அல்லகுறிப்பட்டுத் தலைவன் மீள அதனை என்பிழையாகக் கருதுவ னெனக் கவன்று ஆற்றாளாகித் "தன்குறி தள்ளிய தெருளாக் காலை - வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் - தன்பிழைப் பாகத் தழீஇத் தேறிய"* தலைவியது நிலைமை தோழி தலைவற்குக்கூறி இவ்விடையீடு நின்தோழியினாயிற்றென எனது பிழைப்பாக்கி அவளை ஆற்றுவிப்பாய், நீ உரைத்ததே உரையாம் அவட்கெனெ அவளது ஆற்றுமை கூறி வரைவு கடாயது.

(க—கூ) வீயகம் . . . . நன்றுடை :—

(இ - ள்.) தான் நுகர்கின்ற பூத் தன்னையின்றித் தனித்து உறையத், தான் விரும்பிய பூவின்மேலே போன பெருமையினையும் அழகினையுமுடைத் தாகிய சிறகினையும் நீலமணிபோலும் நிறத்தினையுமுடைய தும்பி, யாயி டத்தே பெருகி வீழ்கின்ற மதத்தையும் வெள்ளிய மருப்பினையுமுடைய யானைத் தலைவனோடே அழகினையுடைத்தாகிய வரியினையுடைய புலி வந்து போர்செய்த காலத்தே, வேங்கையினது அழகையுடைய பூங் கொம்பென்று கருதி விறலையுடைய புலியைச் சூழ்தரும் வேங்கைச்சினை யென்று பொலிவுபெற்ற புள்ளிகளையுடைய யானையினது புகரினை யுடைய முகத்தை அணுகியும், வலிமிகுகின்ற கோபத்தாலே வாட் போரைச் செய்யத் தொடங்கின மன்னரை நட்பாக்கும் உபாயத்தை

* தொல். பொருள்: கககு.

(பாடம்) 1. அருஞ்செலவாரிடை.

ஆராய்ந்து நட்பாக்குஞ் சந்துசெய்வாரைப்போலப்* பலகாலுந் திரியும், பள்ளத்தே குதிக்கின்ற அருவிகளையுடைய திரண்ட மலைகளையுடைய நன்னாடனே!

மறித்தரும் பயமிழி என்றும் பாடம்.

தும்பி வினைவர்போல முற்றியுங் குறுகியும் மறிதருமென்க. பூப்புலம்ப வேட்டம் போகிய தும்பி தலைவி தனித்திருக்க முன்வரைந்துகொண்ட மனைவியிடத்தே வேட்கைசென்று போன தலைவனாகவும், அத்தும்பி வருத்தத்தை நிகழ்த்துவனவாய்த் தம்மிற் பகைத்த புலியையும் யானையையுந் தனக்குத் தேனைத் தரும் வேங்கைப்பூவாகக் கருதிச் சுழல்கின்ற தன்மை நம்மேல்[1] அன்பின்றி இருக்கவுந் தனக்கு இன்பமுளதாகக் கருதிப் பகற்குறியும் இரவிற்குறியும்[2] பெறுதற்கு மறுகுகின்ற தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப்போலி.

"பின்முறை யாக்கிய"† என்ற சூத்திரத்துத் "தொன்முறை மனைவி" என்றதனால் தொன்முறை மனைவியுண்மையும் உணர்க.

'நயனுடை நட்பாக்கும் வினைவர்போல்' என்ற ஏனையுவமம் உள்ளுறையுவமத்தைத்தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்துத் தானும் உள்ளுறையுவமம்போற் றிணையுணர்தலைத் தள்ளாதுநின்றது.

(௧0–௧௩) ஏறிரங் . . . . யானுக:—

(இ - ள்.) யான் தன்னைக் கூடுதற்கணுள்ளதாகிய வேட்கையினாலே யான் பகற்குறியைத் தள்ளின நிலைமையை என்பிழைப்பாக மனத்தான் நோக்கி இரவிற்குறி யேற்றுக்கோடற்கு யான் கொத்தினையுடைய நொச்சிப்பூ விழுகின்ற ஓசையை ‡ அவன் குறியோவென்று கருதுஞ் செவியோடே வருத்தத்தையுடையேனாகாநிற்கத் தான் உருமேறு இடிக்கின்ற இருளையுடைய நடுவாகிய இராப்பொழுதினது செவ்வியைப் பெறானாய்ப் பகற்குறியையும் யான் மாறினேனென்று கூறி இனி மனத்தே கொள்ளா நிற்கும்;

மனத்தின் வினையைச் செவிமேல் ஏற்றினார், அதுகருவியாக உணர்தல் நோக்கி.

(௧௪–௧௭) அருஞ்செல . . . யானுக.—

(இ - ள்.) யான் நிற்கின்ற நிலைமை உயர்தற்குக் காரணமான கடவுளுக்கு வரைவு முடிந்தாற் செய்யுங் கடன்களை § மேற்கொண்டு தான்

---

* குறள் - ௧௮௭. குறிஞ்சி - உ௭-உ௮. † தொல். பொருள் : ௧௭உ.
‡ குறுந் - ௧௩௮. § ஐங்குறு.-உ௫௯.
(பாடம்) 1. தம்மேல். 2. இரவுக் குறியும்.

குறிபெறுமையிற் றன்மாட்டு நிகழும் வருத்தம் பலவற்றையுஞ் சூழும் மனத்தோடே வருத்தத்தையுடையேனாகாநிற்கத் தான் அரிய செலவினை யுடைய வழியிடத்தே நம்மை அருள்செய்து வந்து நம்முடைய அளியைப் பெறுஞய்ப் பகற்குறியும் பெறுமல் வருந்தினனென்ன இனிப் பலவார்த்தையுங் கூறுநிற்கும் ;

நிலையுயர்தல் : வரைந்துகொண்டாலுயர்தல்.

(கஅ—உக) கனைபெய . . . . யாளுக :—

(இ - ள்.) மழை தன்னைப் புரக்க நச்சுதன்மேலுள்ள வேட்கை யினாலே வானத்தைப் பாடும் வானம்பாடிபோல* இருவகைக் குறியிலுந் தான் அளிக்கின்ற அளியை நச்சுதலாலே தன்மேல் நிறைவுற்ற அன்பினை யுடையேனாகாநிற்கத் தான் நெருங்கின மழையையுடைத்தாகிய பானிநாளிலே யான் இடமாறப் பகற்குறியையும் பெறுஞய்ப் பூணப்பட்ட இழையினை யுடையாய் ! என்னிடத்துண்டாகிய பழியை நினக்குச் சொல்லாநிற்கும்.

தான் யான் ஆக அருளாக்குமென்பன எதிர்காலத்து நிகழ்கின்ற நிகழ்வு. 'என்ப'வென மூன்றுதாழிசையிலும் வந்தன இசைநிறையாய் நின்றன.

(உஉ) எனவாங்கு :—

(இ - ள்.) என்றிவள் கூறும்படியாக ;

(உங—உஎ) கலந்தநோய் . . . . நோயே :—

(இ - ள்.) இவளைக் கலந்த நோய் இவள் ஒழுக்கத்தை மிகுக்கையி ஞலே அதுகண்டு கண் துயிலாத என்னிடத்தே நீ வெறுத்தாயுமாய், விளங்குகின்ற தாழ்ந்த அருவியாலே அழகுகொண்ட நின்மலையின் பக்கமலை கூறுவனவே கூறுமாறுபோல நீ கூறுவனவற்றையே கூறும் இலங்குகின்ற அழகினையுடைய எல்வளையையுடைய இவளுடைய நோயை இவள் ஆற்றும் படியாக ஒரு பொய்ம்மொழி கூறியாயினும் வெல்வாய் நீ உரைத்ததே இவட்கு உரையாம்.[1]

'எல்' : ஒளி.

அல்லகுறிப்பட்டு மீண்டதனை என்பிழைப்பாகக் கருதும் அல்லளாக் கவன்று ஆற்றளாமென்றதனுனுந் "தன்குறிதவறிய.........தழீஇத்தேற லும்" † என்னுஞ் சூத்திரத்திற்குப் பகற்குறியென்றே பொருளாதலானும் இவ்வாறே பொருள் கூறவேண்டுமென் றுணர்க.

---

*. புறம். கசுஅ : உடு. † தொல். பொருள் : கககூ.

(பாடம்) 1. என ஆற்றுமை கூறி வரைவுகடாயினன்.

தாழிசைகளிற் றோழி சொல்லெடுப்புதற்குத் தலைவி சிறுபான்மை கூறுதலைப் "புலத்தலு மூடலு மாகிய விடத்துஞ் - சொலத்தகு கிளவி தோழிக் குரிய"* என்பதனாற் கொண்டவாறுணர்க.

இதனாற் றலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் ஐயடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கO)

சஎ.

ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று மடக்கமு முடைய
னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வன்மையு[1] முடைய
னன்னா னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்;

நின்னின்றி யமையலேன் யானென்னு மவனாயி
னன்னான்சொ னம்புண்டல் யார்க்குமிங் கரிதாயி
னென்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால்;

அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனாயிற்
றமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயி
னளியரோ வெம்போல வீங்கிவன் வலைப்பட்டார்;

வாழலேன் யானென்னு நீநீப்பி னவனாயி
னேழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற்
சூழுங்கா னினைப்பதொன் றறிகிலேன்[2] வருந்துவல்
சூழுங்கா னறுநுதா னம்முளே சூழ்குவம்;

அவனை,

நாணடப் பெயர்த்த னமக்குமாங் கொல்லாது
பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்
வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்

---

* தொல். பொருள் : கருஎ.

(பாடம்) 1. வண்மையு. 2. றறிகலேன், றறிகிலன்.

கூறுவென் போலக் காட்டி
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே.

இது தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவன் தன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக்கூற்றுத் தன்னாற் பொறுக்க வொண்ணாதவாறும் அவன் கருத்துந் தலைவிக்குக் கூறி அவன் குறை நயப்பத் தன்னுள்ளே சொல்லியது.

(க—அ) ஒன்றிரப்பான் . . . . பண்மாறும் :—

(இ - ள்.) விளங்குகின்ற இழையினையுடையாய்! என்னிடத்து ஒரு காரியத்தை இரந்துநிற்பான் போலே தன்னைப் பிறரால் இகழப்பட்டு எளியராந்தன்மை தோன்றவுஞ்[1] சிலமொழி கூறும்; அங்ஙனங் குறையிரந்து நிற்பினும் உலகத்தையெல்லாம் பாதுகாப்பான்போலே இருப்பதொரு வலியுமுடையன், மெய்ப்பொருள் கூறும் நூல்களைக்கூற வல்லவர்களை வழிபட்டு நின்று அப்பொருளை அறிந்தான்போலே நன்மக்களைக் கண்டாற்றோன்றும் மன அடக்கமுமுடையன், வறியோர் வறுமையைக் கொடையினாலே போக்க வல்லான்போலே இருப்பதொரு வலியுமுடையன், அத்தன்மையையுடையான் ஒருதலைவன் தனக்குரிய ஆளுந்தகைமையைக் கைவிட்டு என்னைநோக்கிக் கூறும் பலகாரியங்களும் மாட்சிமைப்படுஞ் சொல்லைக் கேட்பாயாக;

“மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு, நினையுங் காலைப் புலவியு ளுரிய”* என்பதனுள், “நினையுங்காலை” என்றதனாற் றோழியுயர்வுங் கிழவோன்பணிவுங் கொள்கவென்றலாற் றோழி இங்ஙனங் கூறினாள். “உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே”† என்பதனால் ‘உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்’ என்றாள்.

உம்மைகளெல்லாம் ஐயவும்மை.

‘சொல்லு’மென்றது பிறர்கட்டோன்றிய வருத்தம்பற்றி நிரிவால் பிறந்தது, அவன் இவ்வாறு ஒழுகல் நமக்கு இளிவரலெனக் குறிப்பாற் கூறிக் குறைநயப்பித்தலின்.

(கூ - கக) நின்னின்றி . . . நறுநுதால்:—

(இ - ள்.) நறிய நுதலினை யுடையாய்! அவன் நின்னையின்றி[2] யான் உயிர்வாழலேனென்று[3] கூறுநிற்குமாயின், இங்ஙனம் இறந்துபடுந் தன்மையை யுடையவன் கூற்றை நம்புதலைச் செய்தல் இவ்விடத்து யாவர்க்கும் அரிதாயிருக்குமாயின், இந்நிலைமைக்கண் என்னைச்சேர்ந்த வருத்தங்கள் பிறர்க்கும் உளவோ? இல்லையன்றே!

* தொல். பொருள் : உஉஎ.

† தொல். பொருள் : உசo.

(பாடம்) 1. தோன்றியுஞ். 2. நின்னையன்றி. 3. வாழேனென்று.

(கஉ - கச) அறியாய்நீ . . . . வலைப்பட்டார்:—

(இ - ள்.) அவன் யான் வருந்துவல் நீ அதனை அறியாயோவென்று கூறிநிற்குமாயின், தமக்கு உயிர்போலச் சிறந்த தோழியரோடு உசாவித் துணியாமற் றமியராயிருந்தே துணிதல் மகளிர்க்கும் அரிதாயிருக்குமாயின், இந்நிலைமைக்கண் அவன்[1] வலையிலே அகப்பட்டார் சிலர் எம்மைப்போல அளிக்கத் தக்காராயிருப்பாரோ? அளியாதிருப்பரன்றே![2]

(கரு - கஅ) வாழலேன் . . . . சூழ்குவம்:—

(இ - ள்.) அவன் நீ அருளாதொழியின் யான் உயிர்வாழேனென்னு மாயிற், குடிப்பிறந்தார் பேதையராயிருப்பரென்று* நன்மக்கள் அவரைச் சிறப்பித்துச் சொல்லுஞ் சொல் நீ முதுக்குறைமை பூண்டிருத்தலின் நினக் குப் பழியாயிருக்குமாயின், இந்நிலைமைக்குச் செய்யலாவதொரு காரி யத்தை ஆராயுங்கால் நினைப்பதொரு காரியத்தை அறியேனாய் வருந்தா நின்றேன்; இந்நிலைமை ஆராய்ந்து பார்க்குங்கால் நறிய நுதலினையுடை யாய்! நம்முள்ளே ஆராய்ந்து பார்ப்பேம்;

(ககூ - உச) அவனை . . . . நெஞ்சே:—

(இ - ள்.) நம்மை நாண் வருத்துகையினாலே அவனைப் போக்குதல் நமக்கும் அவன் இறந்துபடுகின்ற நிலைமைக்கட் பொருந்தாது, அவன் இறந்துபடுகின்றவனைப் பேணினரென்று நன்மக்கள் புகழ்ந்து கூறப்படுதல் நின் கருத்தாற் பெண்மையுமன்றாயிராநின்றது; இங்ஙனமாகவும், அவன் நின்னை முயங்குமளவைத் தன் நெஞ்சாலே கைக்கொண்டுவிட்டான்; அதற்கு நீ மேவுகின்றிலை, இதற்கு யான் இனிக் கூறுவதொன்றின்றெனத் தலைவிக்குக் கூறிப், பின்னைத் தோழி தன் நெஞ்சோடு முன்னிலைப்புற மொழியாகக் கூறுவாளாய்க்,[3] குறியிடத்தே வாவென்று கூறுவாள்போலே அவனுக்கு ஒரு பொய்க்குறியைக் காட்டி அவன் மேவின வழியிலே நெஞ்சே மேவுவாயாக என்றாள்;

இதனாற் றலைவிக்குச் சூழ்ச்சி பிறந்தது.

இஃது 'ஒன்'றெனச் சொற்சீரும் 'அவனை'யெனத் தனிச்சொல்லும் பெற்றுத் தாழிசையுள் ஒனைமூன்றடியாக ஒன்று நான்கடியாய் வந்தமையிற் கொச்சகக்கலியாயிற்று. (கக)

## சஅ.

ஆமிழி யணிமலை யலர்வேங்கைத் தகைபோலத்
தேமூசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த

---

* இறைய. சூ. உக.

(பாடம்) 1. இவன். 2. வலியராயிருப்பரன்றே? 3. கூறுவாள்.

வாய்கில்லா வலிமுன்பின் வண்டூது புகர்முகப்
படுமழை யடுக்கத்த மாவிசும் போங்கிய
கடிமரத் தருத்திய கமழ்கடாந் திகழ்தரும்
பெருங்களிற் றினத்தொடு வீங்கெருத் தெறுழ்முன்பி
னிரும்புலி மயக்குற்ற விகன்மலை நன்னாட;

வீழ்பெயற் கங்குனின்[1] விளியோர்த்த வொடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பிற் றாய்முன்னர் நின்சார
லூழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்;

இணையிரு ளிதுவென வேங்கினின் வரனசைஇ
நினைதுய ருழப்பவள் பாடில்கட் பழியுண்டோ
வினையளென் றெடுத்தரற்று மயன்முன்னர் நின்சுனைக்
கனைபெய னீலம்போற் கண்பனி கலுழ்பவால்;

பன்னாளும் படரடப் பசலையா லுணப்பட்டாள்
பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ
வின்னுரைச் செதும்பாற்றுஞ் செவ்வியு ணின்சோலை
மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால்;

எனவாங்கு,

பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோளட் பெனநீவிப்
பூங்கண் படுதலு மஞ்சுவ ளாங்கிய
வருந்துய ரவலந் தூக்கின்
மருங்கறி வாரா மலையினும் பெரிதே.

இது வரையாது வந்து ஒழுகுந் தலைவற்குத் தோழி தலைவியாற்றாமையும் இவ்வொழுக்கம் புறத்தார் அறியப்படுகின்றமையுங் கூறி வரைவுகடாயது.

(க - எ) ஆமிழ் . . . . நன்னாட:—

(இ - ள்.) எட்டுத்திசையுங் காத்தற்றொழிலை மேற்கோடற்குப் பொருந்தினவாய்ப், பகைத்தவை எதிர்தில்லாத மிக்க வலியினையும் விளக்கத்தைத் தருகின்ற கமழ்கின்ற மதத்தான் நனைந்த கவுளினையும் நீர் வீழ்கின்ற அழகினையுடைய மலையிடத்துத் தேனினம் மொய்க்கும் பூக்களையுடைய வேங்கையினது அழகுபோல வண்டுகள் ஊதுகின்ற புகரினையுடைத்தாகிய முகத்தினையுமுடைய சொரியும் மழையையுடைத்தாகிய பக்கமலை

(பாடம்) 1. கங்குலின்.

யிடத்தனவும், பெருமையையுடைய விசும்பிலே வளர்ந்த மிகுதியையுடைத்தாகிய மரங்களையுடைய ஆற்றிடைக் குறையிடத்தனவுமாகிய, பெரிய யானைத்திரள்களோடே வீங்கின கழுத்தினையும் மிக்க வலியினையுமுடைய பெரிய புலி மாறுபாட்டாலே போர்செய்தலுற்ற மலையினையுடைய நல்ல நாடனே!

'திசைகாவல் கொளற்கொத்த' என்றதனால் உலகைத் தாங்குதற்கு உரியனென்றும், 'வலிமுன்பின்' என்றதனான் மிக்க வலியினையுடையனென்றும், 'நனைகவுள்' என்றதனாற் செல்வச் செருக்குடையனென்றும், 'வண்டூது புகர்முகம்' என்றதனாற் பலர்க்கும்[1] பயன்படுகின்றானென்றும் இருவகைச் சுற்றத்திற்கும் ஏற்றுக. இருவகைச் சுற்றமாவன, தலைவியுடைய தந்தை சுற்றமுந் தாய்சுற்றமுமாம். இருவகைய [2] வாகிய * களிற்றோடே 'புலி மயக்குற்ற' என்றதனான் இருவகைச் சுற்றத்தாருடனே ஊரிலுள்ளார் தலைவியை அலர்கூறிப் பகைக்கின்றாரென உள்ளுறையுவமங் கொள்க. இது வினையுவமப்போலி.

(அ - கக) வீழ்பெயற் . . . . உகுபவால்:—

(இ - ள்) தாழிட்டு அடைத்தாற்போலுங் கடிய காவலையுடைய தாய் முன்னே, நின்னுடைய மலைச்சாரலிலே முறைமையையுற்ற கோடல் உகுமாறுபோலே ஒளியினையுடைய வளைகள் உகுவனவாய் இராநின்றன; இங்ஙனமாதற்கு, இடைவிடாது வீழ்கின்ற மழையையுடைய இராக்காலத்து நின்னுடைய குறியால் அழைக்கின்ற அழைப்பினைச் செவிகருவியாக ஓர்த்ததனாலுண்டான மனவொடுக்கத்தாலே உயிர்வாழ்கின்ற நாள் மிக்கவளுடைய வருந்துகின்ற தோளிடத்து அவை நினக்குச்செய்த தப்பு உண்டோ? இல்லையே;

'உகுப': அகரவீற்றுப் பலவறிசொல், படுத்தலோசையாற் பெயராய் நின்றது.

(கஉ - கரு) இனையிரு . . . . கலுழ்பவால்:—

(இ - ள்.) இவ்வாறே ஒரு களவொழுக்கமுடையளென்று உயர்த்துக் கூப்பிடுகின்ற அயலார்முன்னே நின்னுடைய சுனையிடத்துச் செறிந்த மழையையேற்ற நீலம்போலே கண்கள் நீர் சொரிவனவா யிராநின்றன; இங்ஙனமாதற்கு, இது யாம் வருந்துதற்கு ஏதுவாகிய இருளென்றேங்கி நின் வருதற்றொழிலை நச்சி நினைத்தலானுண்டான வருத்தத்திலே வருந்துகின்றவளுடைய துயிலில்லாத கண்ணிடத்து அவை நினக்குச் செய்த பழிகளுண்டோ; இல்லையே;

---

* இரிசரம், நதிசரம் என்ற இருவகை.

(பாடம்) 1. பரக்கும். 2. இவ்வகையவாகிய.

(கசு—கக) பன்னாளும் . . . . துரைப்பதால் :—

(இ - ள்.) நுரைகளையுடைய இனிய சின்னீர் வந்து ஆரவாரிக்கும் இளவேனிற்காலத்தே நின்னுடைய சோலையில் ஒளிகெட்ட தளிரையொத்த நிறக்கேடு வந்து பலர்க்குங் கூறுவதாயிராநின்றது ; இங்ஙனமாதற்குப் பல நாளும் நினைவு வருத்துகையினாலே பசலையாலே நுகரப்பட்டவளுடைய பொன்னையுரைத்ததொரு மணியுண்டாயின் அதனை யொத்த பசலை* பரந்த மாமை நிறத்தின்கண் அது செய்த பழிகளுண்டோ ? இல்லையே ;

(உ0) எனவாங்கு :—

அசை.

(உக—உச) பின்னீதல் . . . . பெரிதே :—

(இ - ள்.) அவள் அங்ஙனமான இடத்து அவள் பூப்போலுங் கண் பாடின்மையை நீவிப் படுதற்கும் யான் அஞ்சுவேன் ; அதற்குக் காரண மென்னெனில், அத்துயிலிடை நினைத்து வருந்தத் தக்க கனவாற் பின்னர்த் தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைத் தூக்கிப் பார்க்கில் அஃது எல்லை யறியவொண்ணாத மலையினும் பெரிதாயிராநின்றது ; இனி இவ் வருத்தம் உறுதபடி நீ வரையாமற் பிரியப்பட்டாளோடு கொண்ட உறவு பின்னுதலை நீ கொடுத்தல் வேண்டும் ;

பின்னுதல் 'பின்'னென நின்றது. " பின்னீ தொடர்" நிலை[1] என்றார் † பிறரும். துயில்கொள்ளாமையைத் துடைத்து என்க.

இதனாற் றலைவற்கு அசைவு பிறந்தது.

இது தரவுந் தாழிசையுந் தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கஉ)

சுக.

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை
நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
ரு. புதுவ தாக மலர்ந்த வேங்கையை
யதுவென வுணர்ந்தத னணிநலை முருக்கிப்
பேணு முன்பிற்றன் சினந்தணிந் தம்மரங்

* நற். நக0ச : சு.  † கலி. கரு : கஅ.

(பாடம்) 1. பின்னியதொடர்.

காணும் பொழுதி னோக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை நன்னாட ;
போதெழின் மலருண்க ணிவண்மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மின்னோருங் கண்ணாக விடியென்னாய் பெயலென்னா
யின்னதோ ராரிடை யீங்குநீ வருவதை ;

இன்புற வளித்தனை யிவண்மாட்டு நீயின்ன
வன்பினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மணங்கமழ் மார்பினை மஞ்சிவ ரடுக்கம்போழ்ந்
தணங்குடை யாரிடை யீங்குநீ வருவதை ;

இருளுற ழிருங்கூந்த லிவண்மாட்டு நீயின்ன
வருளினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
யொளிறுவேல் வலனேந்தி யொருவன்யா னென்னாது
களிறியங் காரிடை யீங்குநீ வருவதை ;

அதனால்,

இரவின் வார லைய விரவுவீ
யகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுவையிவ டடமென் றோளே.

இது நீரிவ்வாறு வருகின்ற வரவு எமக்குத் துன்பத்திற்குக் காரணமாகாநின்ற தெனக் கூறி இரவுவருவானைத் தோழி பகல்வருகவென்றது.

(௧ - ௯) கோடுவரி . . . , . நன்னாட :—

(இ - ள்.) வளைந்தவரியினையுடைய புலி வந்து போர்செய்கையினாலே அதனை வென்ற வருத்தத்தோடே நெடிய மலையிடத்தே துயில்கொள்ளும் யானை மெய்யான காலத்தே தான் பொருதுவென்றது மனத்திடத்தே கிடக்கையாலே அதனைப் பொய்யான காலத்தே கண்டு கடுக வெருவி* எழுந்திருந்து புதிதாக மலர்ந்துநின்ற வேங்கைமரத்தைப் புலியென் றுணர்ந்து அம்மரத்தினுடைய அழகிய நலத்தைக் கெடுத்துத் தன் வலியினாற் பேணாத சினம் மாறி அவ்வேங்கையைக் காணுங்காலத்து அதனைப்பார்த்தலைச் செய்யாமல் நாணிக் கவிழ்ந்துபோன நன்றாகிய மலை நாடனே!

புலியினைவென்று துயிலும் யானை அயலார்கூறிய அலரைச் சுற்றத் தார்க்குப் பொய்யெனத் தேற்றி மனைக்கட் டுயில்கின்ற தலைவியாகவும்,

* குறள். ௫௯௯.

கனவிற்கண்டு வெருவின தன்மை அத்தலைவி கனவில் தான் அங்ஙனஞ் செய்ததெல்லாந் தன் மனத்ததாகலின் அச்செயலைக் கனவிலுங்கண்டு அவள் வெருவின தன்மையாகவும், வேங்கையை நலங்கெடுத்தமை தோழி புனைந்து களவொழுக்கத்திற்கு உடம்பட்டுக் கொடுமைசெய்து ஒழுகுகின்றானென்று தலைவி தோழியை வருத்தியதாகவும், அது சினந்தணித்த தன்மை தோழி கருத்தறியாமல்[1] அவனைக் கொடுமை கூறினேமென்று தலைவி உட்கொண்ட தன்மையாகவும், அஃது அதனை நோக்காது இறைஞ்சுகின்ற தன்மை யாமும் இவள் வருந்த இங்ஙனங் கூறினேமென்று எதிர்முகமாக மகிழ்ந்து[2] நோக்காது தலைவி நாணி இறைஞ்சியிருக்கின்ற தன்மையாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது வினையுவமப்போலி.

(க0-கரு) போதெழின் . . . . வரவாறு :—

(இ - ள்.) அலரும் பருவத்ததாய் அழகினையுடைத்தாகிய மலர்போலும் மையுண்கண்ணினையுடைய இவளிடத்து நீ இன்றியமையாத காதலையுடையையென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது; இஃதொழிய வழியை ஆராய்ந்து பார்க்குங் கண் மின்னுக இடியென்று கருதாயாய் மழையென்று கருதாயாய் இப்பெற்றித்தானதோர் அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது;

(கசு-கஎ) இன்புற . . . . வரவாறு :—

(இ - ள்.) இவள் இன்புறும்படி அளித்தாயாகையினாலே இவளிடத்து நீ இன்றியமையாத அன்பினையுடையையென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது; அஃதொழிய மணம் நாறுகின்ற மார்பினையுடையையாய் மஞ்சு பரக்கின்ற பக்கமலையை ஊடறுத்துச் சூரரமகளிரையுடைய அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது;

(கஅ-உக) இருளற . . . . வரவாறு :—

(இ - ள்.) இருளோடே மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடைய இவளிடத்து நீ இன்றியமையாத அருளினையுடையையென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது; அஃதொழிய விளங்குகின்ற வேலை வலக்கையிலே எடுத்து யான் ஒருவனென்று கருதாதே யானை உலாவுகின்ற அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது;

ஒருவனென்றது இவ்வுலகத்தார்க்குத் தலைவனென்றது.

(உஉ) அதனால் :—

அசை;

---

(பாடம்). 1. தோழிக்குத் தெரியாமல். 2. எதிர்முகமாகவும் இறக்க.

(உங - உரு) இரவின் . . . . , றோளே:—

(இ - ள்.) அவ்வின்னாமையால் எமக்குத் துன்பம் வருதலின், ஐய இனி இராக்காலத்து வாராதே கொள்; இவளுடைய பெருமையை யுடைய மெல்லிய தோள்களை விரவிய பூக்கள் அகன்ற பாறையிலே கோலஞ்செய்யும் மலைச்சாரலிடத்தே பகற்காலத்தும் பெறுவை.

இதனாற் றலைவற்குச் சூழ்ச்சி பிறந்தது.

இது தரவிற் குறைந்த சுரிதகம்பெற்ற ஒத்தாழிசைச்கலி. (கங)

## ருo.

வாங்குகோ ணெல்லொடு வாங்கி வருவைகள்
மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி
தூங்கிலை வாழை நளிபுக்கு[1] ஞாங்கர்
வருடை மடமறி யூர்விடைத் துஞ்சு
மிருணிந்த சோலை யிலங்குநீர் வெற்ப;
அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
வுரவுவின் மேலசைத்த கையை யோராங்கு
நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர[2] லேனல்
கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டு மிவளே
பல்கோட் பலவின் பயிர்ப்புறு தீங்கனி
யல்கறைக் கொண்டூ ணமலைச் சிறுகுடி
நல்கூர்ந்தார் செல்வ மகள்;
நீயே, வளியி னியன்மிகுந்[3] தேருங் களிறுந்
தளியிற் சிறந்தனை வந்த புலவர்க்[4]
களியொடு கைதூ வலை;

அதனாற்,

கடுமா கடவுறூஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையி லாவ தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்[5]
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி

---

(பாடம்) 1. நணிபுக்கு. 2. பைங்குர. 3. இகன்மிகுந். 4. புலவற். 5. வரிவனை தன்மான்.

யுழையிற் பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் [1] றோழியது கவினே.

இது "புணர்ந்த பின் அவன்வயின் வணங்கற்கண்" * தோழி கூறியது. அது தோழியிற் கூட்டம் நிகழ்ந்தபின் முற்காலத்துப் பணிந்து பின்னின்றோனைத் தோழி தானே பணிந்தொழுகுதலாம்.

(க - ரு) வாங்குகோ . . . . வெற்ப:—

(இ - ள்.) தானே வளைகின்ற மூங்கிலின் கோலை நெல்லுடனே வளைத்துத் தின்கின்ற முழந்தாளையுடைய கரிய பிடி அம்மலைக்கட் செறிந்த இலையினுடைய வாழை செறிந்த இடத்தேபுகுந்து, ஆங்கண் வருடைமானினது மடப்பத்தையுடைய மறி பரந்துதிரிகின்ற இடத்தே, ஞாயிறு தோன்றுகின்ற விடியற்காலத்தே, துயில்கொள்ளும் இருள்செறியுஞ் சோலையினையும் விளங்குகின்ற நீரினையுமுடைய வெற்பனே!

மூங்கில் மிசைந்த பிடி தம்மிடத்துத் தாழ்ந்த அரிய தலைவனை அன்புடனே பெற்று நுகர்ந்த தலைவியாகவும், பின்னர் அது வாழைச்செறிவிலே புகுந்து அப்பழத்தை நுகர்ந்த தன்மை அவன் வரைந்து கொண்டுழி அவன் மனைக்கண் கலிவற இருந்து அவனை நுகர்ந்ததாகவும், புலிமுதலியனவின்றி மறி ஊரிடத்துத் துயிலுதல் அலர் கூறுவாரின்றி அவன் சுற்றத்திடை இல்லறம் நிகழ்த்தித் தங்குந் தன்மையாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது வினையுவமப்போலி.

(சு - கச) அரவின் . . . . மகள்:—

(இ - ள்.) பாம்பின் பொறிபோலும் பொறிகளும் பகைவரை வருத்துதலுங் கூடின வலியினையுடைய வில்லின் மேலே வைத்த கையினையுடையையாய் நின்று நிரைத்த வளையணிந்த முன்கையையுடைய என் தோழியைக் காமக் குறிப்பு அவட்கு நிகழும்படி நோக்கிப், படிகின்ற கிளிகள் பரக்கும் பசிய கதிரையுடைய புனத்திற் கிளியைக் கடிதலை ஒருபடிப்பட மறப்பித்து, நின் வயத்தளாக்கியே விட்டாயாயின், இனி நீ இடையிடாது நினைத்தலைப் பாதுகாத்தலை இவள் விரும்பும்; இவள் பல குலைகளையுடைய பலாவினது பிசினையுடைத்தாகிய இடத்தையுடைய இனிய பழம் வீழ்ந்து கிடந்த பாறையிடத்தே எடுத்துக்கொண்டு உண்ணும் ஊகங்களையும் பெருஞ் சோற்றுத்திரளையுமுடைய சிறிய குடியிலிருக்கும் [2] பின்னையான் மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள்; † ஆதலான் நின்னைப் பிரிந்து வருந்துதலாற்றுள்;

* தொல். பொருள் : ககசு. † குறள் - சுஈ.
(பாடம்) 1. பாகத்தென். 2. குடியிலிருக்கும்.

'இவ' ளென்றது, படர்க்கையை முன்னிலையாகக் கூறியது. "ஊன் சோற் றமலை பாண்கடும் பருத்தும்" * என்றார் பிறரும்.

(௧௫-௨௪) நீயே . . . . கவினே :—

(இ - ள்.) நீ காற்றினுங் காட்டிற் போதற் றொழிலிலே மிக்குச் செல்லுந் தேரையுங் களிற்றையும் நின்பால் வந்த புலவர்க்குக் கொடுத்தலாற் கையொழிந்திருத்த விலையாய் மழையினும் அருள்சிறந்தாய் ; ஆகையினாலே யானுஞ் சுரபுன்னை வளர்ந்த மலைச்சாரலிற் றிரியும் வருடையாகிய நல்ல மானின் மறியை வளர்ப்பாரைப்போலே முன்னர் நீங்காமற் பாராட்டி, அவளிடத்துநின்றும் பிரிவையாயின் மேகலை யணிந்த அல்குலை யுடைய என்றோழியது கவினும் நீங்கும் ; அதற்காகக், கடிதாகிய மாவைப் பின்னுங் கடிதாகச் செலுத்துந் தாற்றுக்கோல்போலே சிறிதுங் கொடுமையை யுடையையல்லையாந் தன்மை அறிந்திருந்தும் அவளை நின்னிடத்தே சேர்த்துவேன் ;

இதனாற் றலைவற்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது தரவும் வெண்பாட்டொன்றும் அதன்பின்னர் ஐஞ்சீர் அடுக்கிய குறுவெண்பாட்டொன்றுந் தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்ற கலிவெண்பாட்டு. (௧௪)

## ௫௧.

சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி † மேலோர்நா
ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிரே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா
யுண்ணு நீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்

* புறம். ௩௩: ௧௪. † குறள். ௧௦௭௪.

கரு. கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்.

இது "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின் பகுதிக்கண்" *
தலைவி தோழிக்குக் கூறியது.

(இ - ள்.) ஒளிபொருந்தின வளையினையுடையாய்! ஒன்றைக் கேளாய்! தெருவிடத்து நாம் உண்டிகளை ஆடும் மணலாற் செய்த சிற்றிலைக் காலால் அழித்துக் கூந்தலிலே அடைவித்த கோதையை அறுத்து வரியினையுடைய பந்தை எடுத்துக்கொண்டு ஓடி நாம் நோவத்தக்க தொழில்களைச் செய்யுஞ் சிறியனாகிய காவலில்லாதவன், முன்னொரு நாளிலே, அன்னையும் யானுஞ் சேர இருந்த அளவிலே, "இல்லில் உறைகின்றவர்களே! உண்ணப்படுந் தண்ணீரை வேட்டேன்" னெனச் சொல்லி வந்தவனுக்கு, அன்னை, "விளங்குகின்ற பூணினையுடையாய்! உண்ணுநீரைத் தகட்டுப் பொன்னாற் செய்த கரகத்தாலே வார்த்து உண்ணப்பண்ணுவித்து வா" வென்று சொன்னாள்; என்று சொல்லுகையினாலே யானுஞ் சிறுபட்டியாயிருக்கின்ற தன்னை அறியாதே சென்றேன்; சென்ற பின்னை அவன் என்னுடைய வளையணிந்த முன் கையைப் பிடித்து என்னை நலிகையினாலே அலமந்து, "தாயே! இவ னொருவன் செய்ததோர் செயலைப் பாராய்" யென்றேனாக, அத்தாயும் கூப் பிட்டு ஓடி வருதலைச் செய்ய, அதனை மறைத்து அங்ஙனஞ் செய்ததனை யான், "உண்ணுநீர் விக்கி வருகின்றான்" என்று ஒரு பொய்யைக் கூறினேனாக, அத்தாயுந் தன்னை முதுகைப் பலகால் நீவித் தடவப், பின்னை என்னைத் தன் கடைக்கண்ணாலே கொல்வான்போலே பார்த்துத், தன் மனமகிழ்ச்சியைத் தருங் கூட்டத்தை அக்கள்வனுடைய மகன் செய்தான்! இதுகாண் நிகழ்ந்தது.

இதனைக் கேட்டுழித் தலைவி இருவகைக் குறியும் பிழைத்தவிடத்து "காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினுந், தானகம் புகாஅன் பெயர்த லின்மையிற், காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி" * கையற்றாற்போலத் தலைவனும் இருவகைக் குறியும் பிழைத்தவிடத்துத் தலைவியைக் காணாக் காட்சியாசையிற் கலங்கி வேட்கையின் மயங்கினானாதலின், நம் மனைக்கண்ணே உண்டிக்காலத்து [illegible] வந்து தன் ஆற்றாமை மிகுதியான் இவளை முன்கைபற்றி நலிந்தான்;[1] இவளும் அதனை மறைத்து விட்டாள்; இனி நீயட்டும் அவனைக் கூடு[illegible]த்தக்கது; இனி, அவனைக் கூடுமென்றுந் தோழி கருதுமாறு [illegible] பொருள் முதலிவந்ததாயிற்று.

---

* [illegible]
(பாடம்) 1. [illegible]

'நோதக்க செய்யுஞ் சிறுபட்டி' யென்றதனான் ஒருநிலைமாயிற்று. 'கடைக் கணாற் கொல்வான்போ னோக்கி' யென்றதன்கட் கண்ணிற்குக் கொலைத் தொழில் கூறிற்று. அது வினையுவமத்தின் வகை.

இதனாற் றோழிக்கு நினைத்தல் பிறந்தது.

"ஒருபொரு ணுதலிய வெள்ளடியியலால்"* என்பதனுள் "இய" வென்றதனாற் பன்னீரடியின் இகந்து ஒருபொரு ணுதலிவருங் கலிவெண்பாட்டும் உளவென்று கோடலின், இது பன்னீரடியின் இகந்து ஒருபொருணுதலிவந்த கலிவெண்பாட்டு. (௧௫)

## ௫௨.

முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்ததன்
னிறஞ்சாடி முரண்டீர்ந்த நீண்மருப் பெழில்யானை
மல்லரை மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பட்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள் ;

தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே ;

ஈர்ந்த ணாடையை யெல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினாள் செய்குறி நீவரி
னொளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென வார்ப்பவ ரேனல்கா வலரே ;

ஆர மார்பினை யண்ணலை யளியை
யைதக லல்குலாள் செய்குறி நீவரிற்
கறிவளர் சிலம்பில் வழங்க லானாப்[1]
புலியென் றோர்க்குமிக் கலிகே[2] ழூரே ;

எனவாங்கு,

விலங்கோரார் மெய்யோர்ப்பி னிவள்வாழா ளிவளன்றிப்
புலம்புக ழொருவ யானும் வாழேன்

* தொல். பொருள்: ௪௧௫.

(பாடம்) 1. செறிதலானாப். 2. கலிகெ.

அதனாற், பொதியவிழ்[1] வைகறை வந்துநீ குறைகூறி
வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
உரு. வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே.

இஃது இரவுக்குறிவந்த தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி இரவுக்குறியது ஏதமும் ஏதத்தால் வருந் துன்பமுந் தன் உள்ளத்து விழைவுங் கூறி வரைவு கடாயது.

(க—சு) முறஞ்செவி . . . . நாடகேள் :—

(இ - ள்.) முறம்போலுஞ் செவியாகிய மறைப்பிடமாக வந்து பாய்ந்து மாறுபாடுசெய்த புலியைக் கோபித்து, மறத்தைத் தம்மிடத்தே கொண்ட நூற்றுவர்க்குத் தலைவனாகிய துரியோதனனைக் குறங்கில் உயிரைப் போக்குகின்ற பீமசேனனைப்போலே, தன்னுடைய நீண்ட கோட்டினுடைய[2] கூரிய முனையாலே குத்திப், புலியினது மருமத்தைத் திறந்து மாறுபாடு தீர்ந்த அழகினையுடைய யானை, மல்லரை மறத்தைக் கெடுத்த திருமால் போலே, கல்லுயர்ந்த அகற்சியையுடைய சாரலிற் றன் சுற்றத்திற்கு நடுவே கூடித்திரியும் நாடனே! யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக!

'முறஞ்செவி......செற்'றென்பது உறுப்பறைபற்றிய வெகுளி. 'மால்போ' லென்பது பெருமிதம்பற்றிய உவமம். செவிமறைப்பப் பாய்ந்த புலியைச் செற்ற தன்மை தமது களவொழுக்கமிடமாக அலர்கூறிய அயலாரைக் கோபித்ததாகவும், அதனைக் குத்தி மாறுபாடு தீர்ந்த யானை தலைவன் வரைந்துகொண்டால் அயலாரைத் தாம்வென்ற தன்மையாகவும், யானை கிளைநாப்பட் கலந்தியலுதல் இனித் தலைவன் சுற்றத்தாரிடைப் பொருந்தியிருந்து இல்லறம் நிகழ்த்துந் தன்மையாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது வினையுவமப்போலி.

'குறங்கறுத்திடுவான்போல்', 'மால்போ' லென்பன ஏனையுவமம். அவையும் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக்கொடுத்து உள்ளுறை யுவமம்போலத் திணையுணர்தலைத் தள்ளாவாய் நின்றன.

(எ-கo) தாமரைக் . . . . யோரே :—

(இ - ள்.) தாமரைப் பூவாற் செய்த கண்ணியையுடையையாய்த், தண்ணிய நறிய சந்தனத்தையுடையையாய், ஒத்த இதழாற் கட்டின கோதையையுடையாள் செய்த குறியிடத்தே நீ வருவையாயின், மணம் நாறுகின்ற நாற்றத்தையுடையவாய மலைக்கண்ணே நின்று பலியைக் கொள்ளும் அணங்குகளிலே ஓர் அணங்கென்று கருதிச் சிறுகுடியிலுள்ளோர் அஞ்சுவர்;

---

(பாடம்) 1. போதவிழ். 2. கோட்டினையுடைய.

தாமரைப்பூக் குறிஞ்சிக்கண் வந்தது.

(கக-கசு) ஈர்ந்த . . . . வலரே :—

(இ - ள்.) பகற்காலத்துத் தீர்த்தமாடுகின்ற நின் ஒழுக்கத்திற்கேற்ற ஈரத்தினுற் றண்ணிதாகிய ஆடையை யுடையையாய், இராக்காலத்துப் புணர்ச்சிக்கு உரியனவற்றை அணிகின்ற இயல்பினையுடையையாய், நீ வரைந்து கோடலைக் குலைந்து ஆயத்தார் விரும்புகின்ற மயிரினையுடையாள் செய்த குறியிலே வருவையாயின், நீ [1] கோடு முதலியவற்றைக் குறித்துச் செய்யுங் குறிகளாலே, ஒளி விளங்குகின்ற குறைக்கொள்ளியையுடையராய்க் கல்லெறியுங் கவணையுடையராய் வில்லினையுடையராய்க் களிறு வந்ததென்று கருதித் தினைப்புனத்தைக் காக்கின்றவர்கள் ஆரவாரிப்பார்கள்;

மாலை முதலியன பாரத்தாற் குலைந்து வீழ்கின்ற கதுப்புமாம்.

(கரு-கஅ) ஆர . . . . ழூரே :—

(இ - ள்.) ஆரம் அணிந்த மார்பினையுடையையாய்த், தலைமையையுடையையாய், அருளுடையையாய், மெல்லிதாயகன்ற வல்குலையுடையாள் செய்த குறியிலே நீ வருவையாயின், நின்னைக் கண்டு விலங்கு முதலியன வெருவி ஓடுகின்ற ஓசையாலே, மிளகு வளர்ந்த மலையிலே உலாவு தலை அமையாத புலியென்று இந்தச் செருக்குப் பொருந்தின ஊர் ஓரா நிற்கும்;

(கசு) என்வாங்கு :—

அசை.

(உ௦-உரு) விலங்கோரார் . . . . யானே :—

(இ - ள்.) யாவரும் அறிவைப் புகழப்படும் ஒப்பில்லாதவனே! அங்ஙனம் அவர் வேறாக ஓராராய், மெய்யாக ஓர்ப்பராயின் இக்களவொழுக்கம் அறிந்தாரென்று இவள் உயிர்கொண்டிராள்; இவளையொழிந்து யான் உயிர் வாழேன்; ஆகையினாலே நீ நின் காரியத்தினைப் பலர்க்குக் கூறி அவர் உடன்பட்ட பின்பு பூக்கள் அலர்கின்ற விடியற்காலத்திலே வந்து வரைந்து கொள்ளுதலை விரும்பாநின்றேன்; அதற்குக் காரணம் என்னெனில், அப்பொழுது நீ புதியாய்போல வரும் நின் வரவையும், இவள் கலியாணத்திற் றோன்றிய நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காண்பேனுதலா லென்றாள்.

ஏகாரம் பிரிநிலை.

இவர்கள் முன்னர்க் களவொழுக்கம் ஒழுகியவாறும், அக்காலத்து அவன் புதியனாக நடித்தவாறும், இவள் ஒடுங்கியிருந்தவாறும் பிறர் அறியா

(பாடம்) 1. இக்.

ராதலின், இத்தாழிசைகள் "பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்"* என்னும் பொருளியற் சூத்திரத்திற் கூறிய காப்பின் வழுவுணர்த்தியன.

இதனுற் றலைவர்க்குச் சூழ்ச்சி பிறந்தது.

"ஏவன் மரபி னேனோரும்" † என்னுஞ் சூத்திரத்தில் நால்வகை வருணத்தாருங் களவொழுக்கத்திற்கு உரியரென்றலின் அந்தணன் களவொழுக்கங் கூறினர்.

இது தரவுந் தாழிசைக்குஞ் சிறிதுபொருந்திய இடைநிலைப் பாட்டுந் தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௧௨)

## ௫௩.

வறனுறல் றியாத வழையமை நறுஞ்சாரல்
விறன்மலை வியலறை வீழ்பிடி யுழையதா
மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்தினாற்
புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல
வுயர்முகை நறுங்காந்த ணாடோறும் புதிதீன
வயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும்
பயமலை நலைஇய பாடுசால் விறல்வெற்ப;

மறையினின் மணந்தாங்கே மருவுறத் [1] துறந்தபி
னிறைவளை நெகிழ்போட வேற்பவு மொல்லுமா
னயலலர் தூற்றலி னாய்நல னிழந்தகண்
கயனுமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால்;

இனியசெய் தகன்றுநீ யின்னாதாத் துறத்தலிற்
பனியிவள் படரெனப் பரவாமை யொல்லுமா
னூரலர் தூற்றலி னொளியோடி நறுநுதல்
பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால்;

அஞ்சலென் றகன்றுநீ யருளாது துறத்தலி
னெஞ்சழி துயரட விறப்பவு மியையுமா
னனவினா னலம்வாட நலிதந்த நடுக்கநோய்
கனவினா லழிவுற்றுக் கங்குலு மாற்றாக்கால்;

எனவாங்கு,

---

* தொல். பொருள்: ௨௬0. | தொல். பொருள்: ௨௪.

(பாடம்) 1. மருவுறத்.

விளியாரோ யுழந்தாளு வென்றோழி நின்மலை
முளிவுற வருந்திய முளைமுதிர் சிறுதினை
தளிபெறத் தகைபெற் றாங்குநின்
னளிபெற நந்துமிவ ளாய்நுதற் கவினே.

இஃது ஒருவழித்தணந்து வந்த தலைவற்குத் தோழி தலைவியாற்றுமையும் ஆற்று வித்தலதருமையுஞ் சொல்லி வரைவுகடாயது.

(க—எ) வறனுற . . . . விறல்வெற்ப :—

(இ - ள்.) வற்கட முறுதலை அறியாத சுரபுன்னை நெருங்கின நறிய பக்கமலையினையும் விறலினையுமுடைய மலையிடத்து அகற்சியையுடைய பாறையிடத்தே உறையுந் தான் விரும்பின பிடி தன்னிடத்தேயாகையினாலே தனக்கு மாறாகிய யானையைத் தன் நெஞ்சிடத்துக்கொண்ட வலியினாலே அதன் புகரையுடைய நுதலைப் புண்ணாக்கின மறமிகுகின்ற வேழங் குத்திவாங்கின கொம்புபோல உயர்ந்த முகையினையுடைய நறிய காந்தள் நாடோறும் புதுமையையுண்டாக்கப் பள்ளங்களெல்லாம் நீர் நிறைந்து அழகுபெறும்படி அருவிகள் ஆரவாரித்துக் குதித்தற்குக் காரணமான பயனைத்தரும் மழையையிடத்தேகொண்ட பெருமையமைந்த வெற்றியை யுடைய வெற்பனே!

நறியகாந்தள், குத்திவாங்கின கொடிய கொம்புபோல, நாடோறும் அரும்பு ஈன என்றதற்கு, நற்குணமுடைய நீ வரையாதிருத்தலிற் கொடியையாய்த் தோன்றாநின்றாயென்றும்; அயல் நந்தி அணிபெறும்படி அருவி யார்த்து இழிதற்குக் காரணமான மழைதழீஇய வெற்பென்றதற்கு, அயலா ரிடத்தே நிலைபெறும்படி அலராகாநின்றது நீ இங்ஙனம் வந்து செய்கின்ற தலையளியென்றும் உள்ளுறையுவமங் கொள்க. இது பயவுவமப்போலி.

'கோடுபோல'வென்ற ஏனையுவமம் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக் கொடுத்து உள்ளுறையுவமம் போலத் திணையுணர்தலைத் தள்ளாதாகி நின் றது.

(அ—கக) மறையினின் . . . . கலுழ்பாக்கால்:—

(இ - ள்.) அயலிலுள்ளார் அலர் தூற்றுகையினாலே கண்கள் ஆய்ந்த தம் நலத்தை இழந்தன, அவ்வளவிலே நில்லாதே பின்னர்க் கண்கள் கயல் காலுகின்ற நீர்போல நீர்விழாத காலத்துக் களவிடத்துக் கூடி அக்கள வொழுக்கத்தை நிகழ்கின்றகாலத்தே மருவுதலாும்படி [1] நீ அருமைசெய் தயர்த்தபின்னர் இறையிற்கிடக்கின்ற வளைகள் நெகிழ்ந்து கழலாநிற்க அவ் வருத்தத்தை ஏற்றுக்கொண்டிருக்கவும் பொருந்தும்; அதனாற்பெற்றதென்? அக்கண்கள் அதற்கு இயைகின்றனவில்லையே;

(பாடம்) 1. மருவுதலுறும்படி.

'மன்': ஒழியிசை.

(௧௨-௧௫) இனியசெய் . . . . பிழவாக்கால் :—

(இ - ள்.) ஊரிலுள்ளார் அலர்தூற்றுகையினுலே நறியநுதல் ஒளி கெட்டுப் பீர்க்கம்பூவினது அழகைத் தான் கொண்டு பிறையினது அழகை இழவாதகாலத்து இயற்கைப்புணர்ச்சியிடத்துத் தெளிவகப்படுத்து இட்டுப் பிரிதலையுஞ் செய்து பின்னர் இன்னுதாம்படி நீ அருமைசெய்தயர்த்தபின்னர் இவள் வருத்தந் தெய்வத்தால் வந்ததோர் நடுக்கமென்று தெய்வத்திற்குப் பரவுக்கடன்பூணுமையும் பொருந்தும்; அதனுற் பெற்றதென்? அந்நறுநுதல் அதற்கு இயைகின்றதில்லையே;

அமர்ந்தென்பதும் பாடம்.

(௧௬-௧௯) அஞ்சலேன் . . . . மாற்றுக்கால்:—

(இ - ள்.) பகலிடத்தே அழகுகெடும்படி எம்மை நலிதலைத் தந்த நடுங்குதற்குக் காரணமான வருத்தம் கங்குலிற்[1] கனவின்கண்ணும் வந்து வருத்தமுறுத்தி* இவளாற்றுதகாலத்து இயற்கைப்புணர்ச்சிக்கண் தெளி வகப்படுத்தி இட்டுப்பிரிதலைச்செய்து பின்னர் நீ அருளாதே அருமைசெய் தயர்த்தபின்னர் இவள்நெஞ்சழிவதற்குக் காரணமான வருத்தம் இறந்து பாடெய்துவியாநிற்கவும் உயிரைப் போகாமல் நிறுத்தவும் பொருந்தும்; அதனுற் பெற்றதென்? அக்கனவின் ஆற்றல் அதற்கு இயைகின்றதில்லையே;

(௨0) எனவாங்கு :—

(இ - ள்.) என்று யான் கூறும்படியாக;

'ஆங்கு' : அசை.

(௨௧-௨௪) விளியாநோ . . . . கவினே :—

(இ - ள்.) கெடாதநோயாலே வருந்தி அமையாத என் தோழி மலையிடத்து முளிதலுறும்படி வருந்திய முளைத்தல் மிக்க சிறியதினை மழையைப்பெற அழகுபெற்றாற்போல இவள் ஆய்நுதற் கவின் நின் அளியைப் பெற அழகுபெறும்.

இட்டுப்பிரிவிரங்கலையும் அருமைசெய்தயர்த்தலையும் பின்பு நூல்செய்தோர் ஒருவழித்தணத்தலென்று பெயர்கூறியவாறு காண்க.

இதனுற் றலைவற்கு அசைவு பிறந்தது.

இது தரவுந் தாழிசையுந் தனிச்சொல்லுஞ் சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௧௭)

---

* கலி. ௪௯ : ௩ - ௪.

(பாடம்) 1. தங்குதலிற்.

## ௫௪.

கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளா
யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென்ன
நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரன்முறை சுற்றி மோக்கலு மோந்தனன்
நறாஅ வவிழ்ந் தன்னவென்மெல் விரற்போது கொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
றொய்யி லிளமுலை யினிய தைவந்து
தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன் ;
அதனால்,
அல்லல் களைந்தனன் றோழி நந்நக
ரருங்கடி நீவாமை கூறி னன்றென
நின்னொடு சூழ்வ றோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
மன்னா வுலகத்து மன்னுவது புரைமே.

இது கைப்பட்டுக்கலங்கிய வருத்தத்தைக் களைந்தனென உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண் தலைவி கூறியது. அது நொதுமலர்வரைவிற்கு மணமுரசு இயம்பியவழி ஆண்டானும் பிறவாண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக்கூறி, அதனை நமர் அறியக் கூறல்வேண்டுமென்றுந் தலைவற்கு நம்வருத்தம் அறியக் கூறல்வேண்டுமென்றுந் தலைவி கூறுதற்கண் நிகழ்வது.

(இ-ள்.) கொடியிலுள்ளனவுங் கோட்டிலுள்ளனவுமாகிய பூவாக நீரின்றாயிருக்க நிறம்பெறும்படி பொடியினையுடைய நெருப்பாற்பண்ணப்பட்ட பொற்பூவாற்செய்த கோதையினையுந், தொடிசெறிந்த கட்டுவடங்கள் அமைந்த அழகினையுடைய முன்கையினையும், அணைபோலும் மெல்லிய தோளையுமுடையாய்! நின் அடியிலே யான் உறைதற்கு நீ அருளாதிருத்தல் நினக்குப் பொருந்தினதொன்றோவென்று கூறிப் பொன்னாற்செய்த மகரவாயாகச் சமைந்த தலைக்கோலம் விழுங்கிக் கிடந்த நரந்தம்பூ நாறுங் கரிய

கூந்தலின் முடியை ஒழியாமல் மிகப்பிடித்து அதிலே நன்மைபெறும்படி கட்டின பற்றமைந்த ஒருமாலையை விரலாலே முறையாகச் சுற்றி அதனை மோந்துபார்த்தலையுஞ் செய்தான்; அதுவேயன்றி நறவம்பூ அலர்ந்தாற் போன்ற என்னுடைய மெல்லிய விரலையுடைய கையைத் தாங்கிக்கொண்டு அருளையுடைய தன் சிவந்த கண் மறையும்படி வைத்துக் கொல்லன் உலை மூக்கு வெவ்விதாய் உயிர்க்குமாறுபோல உயிர்த்தலையுஞ் செய்தான்; அதுவேயன்றித் தொய்யில் எழுதின இளையமுலையை இனியவாகத் தடவி அத் தொய்யிலைக் கொண்டுவந்த தடக்கையினாலே, தான் விரும்பின பிடியை அருள்செய்யும் மயக்கத்தையுடைய யானைபோல, மெய்ம்முழுதினையுந் தடவுதலையுஞ் செய்தான்; அச்செயலாலே யான் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைத் தோழி! போக்கினேன்; இனித், தோழீ! நீயும் யான் விரும்பிய விருப்பத்தின் மனம்புரிந்து நின்மகள் நங்குடிக்கு வடுவாகாமற் கற்புக்கடம்பூண்டாளென்று நம்முடைய மனைக்கண் நிகழ்கின்ற அரிய மணம் அவனைவிட்டு நீங்காமல் யாய்க்கு அறத்தொடுநிலைவகையாற் கூறின் அது நமக்கு நல்ல தொன்றென்று கருதி நின்னோடு உசாவுவேன்; நீ இங்ஙனங் கூறின் நிலைநில்லாத உலகத்திலே நிலைநிற்பதோர் புகழ் நமக்குப் பொருந்தும்;

இது தலைவி கைப்பட்டுக்கலங்கிப் புணர்ச்சிநிகழ்ந்தமை தோழிக்குக் கூறினள், அவள் அறத்தொடுநிற்றல் கருதி. இஃது "உண்மைசெப்ப" லென்னும் அறத்தொடுநிலையாம்.*

இதனாற் றலைவிக்குக் கைம்மிகல் பிறந்தது.

சுரிதகத்து இருகால் 'தோழி' யென்றல் நாணுத்தளையாக மறைகரந்தவாறு காத்த தோழிக்கு முகமனாக.

விரல் : ஆகுபெயர். பருஅக்குருகு : பறவாக்குருகு; வெளிப்படை; விகாரம். புரையும் ஈற்றும்மைசையுகரம் மெய்யொடுங் கெட்டது.

இஃது 'அதனால்'லெனத் தனிச்சொற் பெற்றும் அடக்கியலில்லாச் சுரிதகத்தோடு அடிநிமிர்ந்தோடிய பாநிலைவகைக் கொச்சகக் கலிப்பா. (கஅ)

## ருரு.

மின்னொளி ரவிரற விடைபோழும் பெயலேபோற்
பொன்னகை தகைவகிர்[1] வகைநெறி யயங்கிட்டுப்
போழிடை[2] யிட்ட கமழ்நறும் பூங்கோதை
யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
ரு. நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி;

* தொல். பொருள் : உOஎ.

(பாடம்) 1. பொன்னகைத் தைகவகிர். 2. பொழிலிடை.

நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று ;

எனவாங்கு,

அனையன பலபா ராட்டிப் பையென
வலையர்[1] போலச் சோர்பத னொற்றியென்[2]
னெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉப்[3]
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
றொழூஉந் தொடூஉமவன் றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழி.

இது "பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி, யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ, ளருமை சான்ற நாலிரண்டு வகையிற், பெருமை சான்ற வியல்பின்கண்"* தலைவி கூறியது. என்றது; "ஒருமைக்கேண்மையின் உறுகுறை = தான் அவளென்னும் வேற்றுமையில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய குறையை; பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கித் தெளிந்தோள் = முன்னர்த் தெய்வப் புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அது காரணத்தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி; அருமைசான்ற நாலிரண்டு வகையில் = தான் முன் அருமை யமைந்துநின்ற நிலையாற் றலைவன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப் பயிறன் முதலிய எட்டினாலே; பெருமைசான்ற இயல்பின் கண்ணும் = தனக்கு உளதாம் பெருமைகூறுதற்கு அமைந்ததோர் இயல்பின் கண்ணும் : எ-று." இதனாற் போந்த பொருள் தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன் பெருமை தோழிக்குக் கூறுதலாயிற்று.

---

* தொல். பொருள் : ககக.

(பாடம்) 1. வலைவர். 2. ஒற்றிப். 3. (இவ்வரி விடுபட்டுள்ளது.)

(க—௫) மின்னொளி . . . . கேளினி :—

(இ - ள்.) ஒளிர்கின்ற மின்னினது விளங்குகின்ற அறுதிகள் இடையே பிளந்தோடும் மேகங்கள்போலே பொன்னைக் கூறுபடுத்தின அழகினையுடைய வகிர்களை ஐந்துபகுதியையுடைய* நெறித்த மயிரிடத்தே விளங்க விட்டுப் பின்னால் தாழம்பூ வகிர்ந்தவற்றையும்[1] இடையிலேயிட்டு முடித்த மிகவும் நாறுகின்ற பூமாலையினையும் இனிய நகையினையும் இலங்குகின்ற எயிற்றினையும் இனிய மொழியினையும் இயல்பான சிவப்பாற் சிவந்த வாயினையுமுடைய நன்றாகிய நுதலினையுடையாய்! நினக்கு ஒரு வார்த்தை கூறுவேம்; அதனை இப்பொழுது கேள்!

'இட்டு'என்னுஞ் செய்தெனெச்சம் 'இட்ட'வென்னும் பெயரெச்சத்தோடு முடிந்து, அது 'நன்னுத'லென்னும் பெயரோடு முடிந்தது. 'கூறுவா'மென்றது உயர்த்துக் கூறல்;† உளப்பாடன்று. வயங்க: விகாரம்.

(சு—உ௩) நில்லெண . . . . தோழி :—

(இ - ள்.) "நீ போகாதே நில்"லென்று என்னை நிறுத்தினான்; நிறுத்தி அணுகவந்து நுதலையும் முகத்தையுந் தோளையுங் கண்ணையுஞ் சாயலையுஞ் சொல்லையும் நோக்காநின்று உவமையைக் கூறநினைந்து, "நுதல் வியப்பையுடைத்தாய்த் தேய்ந்தது, ஆயினும் பிறையுமன்று; முகம் மறுவற்றது, ஆயினும் மதியுமன்று; தோள் வேயின்றன்மை நெருங்கிற்று, அது பிறக்கும் இடமன்று; கண் பூவின்றன்மை நெருங்கிற்று, அது பிறக்கும் இடமன்று; சாயலிருந்தபடி மெத்தென நடக்கும், மயிலுமன்று; சொல்லுச்சொல்லத் தளரும், ஆயினுங் கிளியுமன்று" என்று அவ்விடத்து அந்தன்மையவாகிய உறுப்புக்கள் பலவற்றையும் பொய்பாராட்டி, வலையர் அம்மாக்களின் சோர்வைப் பார்க்குமாறுபோல என் நெஞ்சநெகிழ்ந்த செவ்வியைப் பார்த்துப், புலையர் நோக்குமாறுபோல வருத்தமுண்டாக நோக்கித் தொழுதலைச் செய்தான்; தீண்டுதலையுஞ் செய்தான்; மதத்தான் அறிவிழந்து பரிக்கோலெல்லையில் நில்லாத கடிய களிற்றை‡ யொப்பான் பலகாலுந் தொழுவதுஞ் செய்யும்; தீண்டுவதுஞ் செய்யும்; ஆதலால், தோழி! அவன் குணத்தில் அறியாமையாகிய குணமோ இல்லை;

இவன் இங்ஙனமாகவும், யான் நாணும் மடனும் நீங்காமை நின்றேனெனத் தலைவி தன் பெருமைசான்ற இயல்பு கூறினாள்.

இதனுட் 'பாராட்டி'யெனப் பொய் பாராட்டலுஞ், 'சோர்பதனொற்றி'யென நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கூறினமையிற் கூடுதலுறுதலும், 'புலையர்

---

* சுருள், குரல், அளகம், துஞ்சுகுழல், கொண்டை.

† தொல். சொல்; உ௭.    ‡ கலி. உ; உ௪

(பாடம்) 1. உதிர்ந்தவற்றையும்.

போல...நோக்கி' யென நீடு நினைந்திரங்கலுந், 'தொழலுந் தொழுதா'னென இடம்பெற்றுத் தழாலுந், 'தொடலுந் தொட்டா'னென மெய்தொட்டுப் பயிறலுங், களிறுபோல அறிவினெல்லையி னில்லாதவனெனத் தீராத் தோற்றமும் ஒருவாற்றாற் கூறியவாறு காண்க.

இதனாற் றோழிக்கு நினைத்தல் பிறந்தது.

"உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை"* என்னுஞ் சூத்திரத்து "உள்ளுங்காலை" யென்றதனாற், 'பிறையுமன்று', 'மதியுமன்று', 'மயிலுமன்று', 'கிளியுமன்' றென்பன மறுத்தனவென்று கொண்ட வுவமம். "முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு, நுதலிய மரபி னுரியவை யுரிய"† என்னுஞ் சூத்திரத்தில் "நுதலிய மரபி" னென்றதனான் 'மலையுமன்று' 'சுனையுமன்' றென்பன மலையோடுஞ் சுனையோடும் உவமைகருதாது மலையுள் வேயெழும் இடத்தையுஞ் சுனையுட் பூவெழும் இடத்தையும் நோக்கி வேயையும் பூவையும் மறுத்துநிற்றலின், தோளையுங் கண்ணையும் உணர்த்தி நின்ற வென்று கொண்ட உவமம்.

இது தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்றுப் "பாநிலைவகையே"‡ என்பதனால் அகப்பொருளின்கண்வந்த தரவிணைக் கொச்சகம். (கக)

ரு௬.

ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொ னல்லா
ருறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்
கடியிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர்[1]
நல்கூர்ந்தார் செல்வ மகள் ;

இவளைச், சொல்லாடிக் காண்பேன் றகைத்து ;

* தொல். பொருள் : உஎஅ.

† தொல். பொருள் ; உஅக.  ‡ தொல். பொருள் : ச௯எ.

(பாடம்) 1. ளிங்கிதோர்.

நல்லாய் கேள்,

ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்
மாதர்கொண் மாணோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ ;

நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்
கணங்காகு மென்பதை யறிதியோ வறியாயோ ;

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பை [யெனப்
பெயறுளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டா
ருயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ வுணராயோ;

எனவாங்கு,

பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியா
யாதொன்றும் வாய்வாளா திறந்திவாய் கேளினி

நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
விறையே தவறுடை யான்.

இது "காமஞ் சாலா விளமை யோள்வயி, னேமஞ் சாலா விடும்பை யெய்தி, நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற், றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச், சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல், புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே"* என்பதனாற் றருக்கிச்சொல்லிச் சொல்லெதிர்பெறான் இன்புற்றது.

(க—கஉ) ஊர்க்கா . . . . மகளிர்:—

(இ - ள்.) ஊரிடத்தே வளர்ந்த இளமரக்காவினுள்[1] நீர் ஓடுகின்ற காவிடத்தே நின்ற கொழுவிய நிழலையுடைய ஞாழலினது முதிர்ந்த கொத்துக்களைப் பறித்துக்கொண்டு, பூவும் மயிருந் தம்முண் மயங்கும்படி முடித்து,

* தொல். பொருள் : ருO.

(பாடம்) 1. இணர்க்காவினுள்.

(க-௧௭) உரைசேல . . . . நோய் :—

(இ - ள்.) அரசன் தனக்குப் புகழ் உயர்ந்து நடக்கும்படியாகத் தம் மறிவான் மிக்குச் சேர்ந்த அமைச்சரை முன்னர் நடுக்கமான மொழிகளைக் கூறிப் பின்னர் ஒருபடியிலே எல்லையில்லாத இடும்பைகளை உறுவித்துக் கொல்லுதலை இயல்பாகவுடைய கொடுங்கோல் அரசனிலுங்காட்டிற், கணவர்க்கு மகளிர்க்குண்டாகிய காமத்தாலும் அவர்மேல் நிகழும் அன்பில்லையாமாயிருந்தது; எங்ஙனேயென்னில் அவ்வாயிழை தன்றலைவன் அன்னத் தூவியாற் செய்த மெல்லிதாகிய சேக்கையிலே அளித்து இராக்காலத்தே வந்து துன்னிக் கூரிய எயிற்றினீரை நுகர்ந்து குற்றந் தீரத் தலையளி செய்து நீங்குகையினாலே அத்தலையளியால் ஆராமல் தன்னை நீங்கின அணிகளையுடையளாய்த் தனக்கியல்பாகிய நாணையும் நிறையென்னுங் குணத்தையுந் தாங்குதல் வேண்டுமென்று அறியாளாய்த் தன்தோள் மெலிந்து பெரிய அமர்த்த உண்கண் நீர் நிறைகையினாலே அந்நீர் தன் குவிந்த முலைமேலே வடியாநிற்க அவனைத் தேடுவதோர் கூற்றிலே நின்று மனஞ் சுழலாநிற்கும்; இனி யாம் இவளிடத்தே சென்று இவள் கூறுவனவற்றைக் கேளாது இருப்பேமோ? கேட்கக்கடவேமென்று நம்மிலே கூறி என்னிடத்தே வந்து எல்லிழாயென்று என்னை விளித்துப், பிரியேன் என்று பிரிதலை வரைந்தவனைப் பிரியானெனத் துணிந்து அவன் பிரிதலின் நாணையும் மறந்தாள் என்று கூறி எனக்கு அன்புற்றீர்போல நீ என்னுற்றனை என்று வினவுகின்றவர்களே! பின்னை இவ்வருத்தத்தை எல்லீருங் கேட்பீராக என்று கூறுகின்றவள், எனக்குச் சிறந்தவன் என்வலியறும்படி என்னைக் கைவிடுகையினாலே பெருகிவந்து என்மேல் நிலைபெற்ற இக் காமநோய், கோடை* உலகத்தைச் சுடும்படியாகப் பெய்யாமற் போன மேகம் வருந்துமாற்றையும்போலும்; பெருகி என்னுயிரைப் போக்குவதோர் நீர் வெள்ளம் வருத்துமாற்றையும் போலும்; என்று கூறினாள்;

(க௮-உச) நக்கு . . . . . ணினைந்து :—

(இ - ள்.) அங்ஙனங் கூறி, அவன் அன்பிலனாதலை அறியாதே அவனோடே புணர்ந்து தன் அழகினையும் நாணினையும் உள்ளத்தினையும் இவள் இழந்தாள் என்னுந் தகுதிப்பாட்டினையுடையீர்போலே இருந்தீர்; அவன் அன்பிலனல்லன்; அஃதென்னையெனில், அவன் இந்த உடம்பினின்று போகின்ற உயிர்க்கு உறுதியாம்படி, சிவந்த நிறத்தினையும் புள்ளிகளையுமுடைய தேருருள் போன்ற ஆண்பால் அலவன் பெண்பால் அலவனோடே நிகழ்த்துகின்ற பல மாட்சிமைகளையும் யான் நின்னிடத்தே நிகழ்த்தும்படி நின்னெஞ்சாலே நினைந்து அவை நிகழ்த்துகின்றவற்றையும் அவ்விடத்தே

* குறள். ௬௰; கலி. உரு; ௨௭-௨௯.

பாராய் என்றான்; அதனால் அவன் அன்புடைமை அறிந்தே யான் அவனோடு நக்கது ;* அக்காலத்தே என்னாணும் என்னலமும் என்னுள்ளமும் புணர்ச்சி யான் மிகுதியைப் பெற்றன; அவை அவன் நீங்கிய அப்பொழுதே அவ னிடத்தே நின்றுவிட்டன; ஆதலாற்றான் நோயும் மிகவுறும்; அவற்றை இகந்த தன்மையுடையேனல்லேன், என்று கூறினாள்;

(உ0-௲க) கரைகாணு . . . மற்று :—

(இ - ள்.) அங்ஙனங் கூறி என்னைப்போல ஓர் எல்லைகாணாத காம நோயிலே மூழ்காதவனை உயர்ச்சி கெடும்படி அவன் பிரிந்து நாண்முதலிய வற்றைத் தாராத கொடுமையை நாடி அவன் வந்த காலத்தன்றே நீ இவை பெறுவது என்று கூறுகின்றவர்களே! யான் நிரைத்த கதிர்களையுடைய ஞாயிற்றை நோக்கித் திரையைத் தருகின்ற கடல்சூழ்ந்த உலகமெல்லாந் தேடி அவனைக் கொண்டு வா என்றுஞ் சொல்லிவிட்டேன்; அதுவேயன்றி யானும் அவன் இவ்விடத்தான் என்னும் வார்த்தை கேட்கலாம் இடமெல் லாஞ் சென்று தேடுவேன்; இங்ஙனந் தேடுமளவின் உயர்ச்சிதீர்ந்தவன் பின்னை எவ்விடத்தே ஒளித்திருப்பான்? அவனை அகப்படுத்திக் கொண்டு அந்நாண் முதலியன வாங்கியே விடுவேன்; என்னை நெஞ்சாலே வரைந்திருக் கின்றவன் என்னிடத்தினின்று நீங்கான்; என்றுங் கூறினாள்;

'கொல்'லும் 'ஓ'வும், அசை.

(௲உ—௲எ) மருள்கூர் . . . . மன் :—

(இ - ள்.) அங்ஙனங் கூறிய அளவிலே மாலையும் இரவும் வருகின் றதனை உணர்ந்து, மயக்கமிக்க மானம்பிணைபோல யான் மயங்கும்படி வெவ்விய காமநோயை உண்டாக்கும் மாலைக் காலமும் வந்து, அதனோடே மயங்கி எரியின் கொழுந்துபோற் கொடிய இராக்காலமும் அவ்விடத்தே வந்ததாயின், அதனிடத்தே யான் பட்ட வருத்தத்தை என்னைப்போல வருந்தும் பலமகளிருக்குள்ளே சென்று கூறுவேன்; நினக்கு முறைப் பட்டுக் கூறிற், பலரையுந் துயிலப்பண்ணும் இராக்காலமே! நீ தானும் மிகவும் வருந்தித் துயில்கொள்ளாய்; ஆதலால் என்றேனை நினக்குச் சொல்லேனென்றே னென்றுங் கொடுமை நுவல்கின்றவர்களை[1] நோக்கிக் கூறினாள்;

(௲அ—சுக) எதிர்கொள்ளூஉ . . . . மன் :—

(இ - ள்.) அங்ஙனங் கூறியபின்னர்த் திங்கள் வருத்தும் என் றுணர்ந்து ஞாலத்திலுள்ளாரால் அவ்விசும்பிடத்தே பிறையான பருவத்தே

* நக்கது - புணர்ந்தது.

(பாடம்) 1. அகர்கின்றவர்களை.

பருவத்தே* எதிர்கொள்ளப்பட்டுப் பின்பு முதிர்ந்து யான் துயிலாராமல் என்மேல் வந்து விளைத்த மதியும் யானுற்ற வெவ்வியநோயை முறைப்பட்டுக் கூறின் தன்கதிர்கள் ஒளிமழுங்கி நடுங்குவதுபோலே ஓடி மிகவுஞ் சுழன்று திரியும்; ஆதலான் நமக்கன்றி அதற்கும் என்னேயைக் கூறே னென்றுங் கூறினுள்;

(௪௨—௪௫) பேநூர் . . . நோய்:—

(இ - ள்.) அங்ஙனங் கூறிப் பெரிய ஊரில் தெருவிலே யான் உறுகின்ற வருத்தத்திற்குப் பரிகாரஞ் செய்யாமற் பெரிய உறக்கத்தைக் கொள்ளக் கருதிய சான்றீரே! என் மெய்க்கண் நின்று எரியுங் காமநோய் மழையெல்லாம் என்னிடத்தே நின்று பெய்யினும்† ஆறுவதுபோல இருக்கின்றதில்லை; இது தணியும்படி உலகத்துள்ள நீரை‡ என்னிடத்தே நிறையும்படி அடைத்துவைத்து என்னுயிரைப் பாதுகாப்பீராக என்றுங் கூறினுள்;

(௪௬—௫0) இநப்பினு . . . . முழந்து:—

(இ - ள்.) அங்ஙனங் கூறிப் பின்னர்த் தன் நோயின் செய்தி கூறுகின்றவள் அவன் என்னெஞ்சிடத்தே விடாமலிருப்பினும் அதனுல் அமையாது தான் காந்தாநிற்கும்; அவன் ஒருகாற்போகின் தான் அதற்கு வருத்த முறாநிற்கும்; அங்ஙனம் என்னெஞ்சு வருந்துதலை ஆற்றேனுய்ப் பலவுறுப்புக்களையுங் கூட்டி§ இயங்குவதோர் பொறியாகச் செய்த புனைந்த பாவை போல இடும்பையிலே அழுந்தி மயங்கிய யாக்கையோடே சிறிது செல்வேன்; அதனுல் தணியாத என்னிடத்து உண்டாகிய எவ்வமானது பிறரால் அழித்தற்கு அரிய அரணின் தன்மையையுடைத்து; இவ்வரணை அழிக்கலாவதோர் உபாயம் நாடுவீராக; என்றுங் கூறினுள்.

(௫௧—௫௫) எனவாங்குப் . . . . பண்பே:—

(இ - ள்.) என்று அவ்விடத்தே சொல்லாநிற்கக், கோடைக்கால மிக்க வானத்திடத்தே மேகத்தினது வளவிய துளியைப் பெறுதற்குச் சுழன்றுதிரியும் வானம்பாடிக்கு அம்மேகம் பெய்தாற்போலத் தன்னுடைய நல்ல அழகையுடைய மார்பன் அருளுதலுற்று வந்து முயங்குகையினுலே ஆயிழையுடைய அல்லலாகியகுணம் போயிற்று; என்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டுகூறிற்றுக உரைக்க.

இது கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'என்மே னிலைஇய நோய்' என்னுந் துணையுங் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறும், 'இழந்திலேன்மன்னே' என வருத்தந் தோன்றாமற்

---

* அகம். உகக: க-௧0; புறம். க: க-௧0.

† கலி. க௪௫: ௫௫-௫௮. ‡ நாலடி. உ௨௨. § சீவக. உ௩௫.

கூறலின் வருத்தமிறந்தவாறும், 'ஞாயிற்றை நாடென்றேன்' என்றதனைத் தான்வியவாமையின் மருட்கையிறந்தவாறும், 'என்னுணு நலனு' மென்றும் மான்பிணைபோன்ற யான் இப்பொழுது 'மருள்கூர் பிணைபோன் மயங்க' என்றும் வனப்புமிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடிவந்ததரவும் ஐஞ்சீரடுக்கிய இடைநிலைப்பாட்டும் 'எனவாங்குப் பாட வருளுற்று' என முச்சீரான் வந்த சொற்சீரடியும் வந்து ஆசிரியச்சுரிதகத்தால் இற்ற கலிவெண்பாட்டு. (௨௧)

௧௪௭.

ஆறல்ல மொழிதோற்றி யறவினை கலக்கிய
தேறுக ணறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேறொருபாற் றூணது கொல்லோ சீறடிச்
சிலம்பார்ப்ப வியலியா ளிவண்மன்னோ வினிமன்னும்
புலம்பூரப் புல்லென்ற வனப்பினுள் விலங்காக
வேனுதி யுறநோக்கி வெயிலுற வுருகுந்தன்
றோணலமுண்டானைக் கெடுத்தாள்போற் றெருவிற்பட்
டூண்யாது மிலளாகி யுயிரினுஞ் சிறந்ததன்
னாண்யாது மிலளாகி நகுதலு நகூஉ மாங்கே
பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉந் தோழியோ
ரொண்ணுத லுற்ற துழைச்சென்று கேளாமோ;

இவர்யாவ ரேமுற்றீர் கண்டீரோ யோஒ
வலையுந் தவறிலீர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப வம்மா
புதுநலம் பூவாடி யற்றுத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை;

என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து;

கலையிய கண்புருவந் தோணுசுப் பேளர்[1]
சிலமழைபோ லாழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவளை மாற வறியா தொருவன்
வலையகப் பட்டதென் னெஞ்சு;

வாழிய கேளிர்;[2]

(பாடம்) 1. தோணுசுபுப். 2. கேளீர்.

பலவுஞ்சூ டேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
கொலைவனைக் காணேன்கொல் யான் ;

காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
யாங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டீமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ ;

ஆரிரு ணீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு ;

நல்கா வொருவனை நாடியான் கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்டீமோ
செல்கதிர் ஞாயிறே நீ ;

அறாஅ[1] வின்றரி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கட் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ வெருமைய காடிறந்தான் கொல்லோ
வுறாஅத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
செறாஅ துளனாயிற் கொள்வே னவனைப்
பெறாஅதியா னேவே னவனையெற் காட்டி
சுறாஅக் கொடியான் கொடுமையை நீயு
முறாஅ வரைசநின் னோலைக்கட் கொண்டீ
மறாஅ வரைசநின் மாலையும் வந்தன்
றறாஅ தணிகவிந் நோய் ;

தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கு
மன்னவோ காமநின் னம்பு ;

கையாறு செய்தானைக் காணிற் கலுழ்கண்ணாற்
பையென நோக்குவேன் றாழ்தானை பற்றுவே
னையங்கொண் டென்னை யறியான் விடுவனே[2]
லொய்யெனப் பூச விடுவேன்மன் யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று ;

(பாடம்) 1. உறாஅ. 2. விடுவானே,

வினவன்மி னூரவி[1] ரென்னையெஞ் ஞான்று
மடாஅ நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் றொடர்பு ;

கனவினுற் காணிய கண்படா வாயி
னனவினுன் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்
பனையீன்ற மாவூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு ;

எனவாங்கு,
கண்ணிணைபு கலுழ்பேங்கின
டோணெகிழ்பு வளைநெகிழ்ந்தன
என்னையோ வெல்லீருங் காண்மின் மடவரன்
மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த
வன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொண்ணுதல்
காதலன் மன்ற வவனை வரக்கண்டாங்
காழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப விறைஞ்சித்
தகையாகத்[2] தையலாள் சேர்ந்தா ணகையாக
நல்லெழின் மார்ப னகத்து.

இதுவும் அது. இதற்கும் முன்னங்* கூறிய உரையைக் கூறிக்கொள்க.

(௧-௧௭) ஆறல்ல . . . . வந்து :—

(இ - ள்.) தோழீ ! அறநெறியல்லாத தீமொழிகளைத் தம்மிடத்தே தோற்றுவித்து அறமாகிய தொழில்களைத் தம்மிடத்துத் தோன்றாமற் கலக்கவேண்டித் தெளியுங் கள்ளையும் நறவையும் உண்டவர்களுடைய† உலகியல் கெட்ட மயக்கம்போல நன்மக்கள் ஆற்றுகின்ற காமம் உலகியல் தப்பி வேறோர் பகுதியாய் விட்டதோ ? அதற்குக் காரணமென்னெனில் இப்பொழுது மிகவுந் தன் கணவனில்லாத தனிமை பரக்கையினாலே பொலிவழிந்த அழகினையுடையளாகிய இவள் வேனுதி செய்யுங் கொடுமையையுறும்படி எதிரேநோக்காதே விலங்குதல் உண்டாக நோக்குகையினாலே நெஞ்சுருகுங் கணவனைக் கெடுத்தாள்போலே தெருவிலே புறப்பட்டு வெயில் தன்மேலே உறும்படி தன் சிறிய அடியிற் சிலம்பு ஒலிப்ப எங்குந்

* ௪௩௧ - ௪௪௦ - ஆம் பக்கம் பார்க்க. † குறள். ௯௨௫.

(பாடம்.) 1. னூரீ. 2. தகையாகந்.

திரிதரும் நிலைமையளாயினள்; அதுவேயன்றி ஊண் சிறிதுமிலளாய் மேனி மெலிந்து உயிரினுஞ் சிறந்த நாணுஞ்* சிறிதுமிலளாய் நகுதலையுஞ் செய்யா நிற்கும்; அப்பொழுதே பெண்டன்மையுமிலளாய் அழுதலையுஞ் செய்யா நிற்கும்; இதனை நெஞ்சாலே ஓர்ந்துபார்; அங்ஙனம் ஓர்ந்து பார்த்து இவளுற்ற வருத்தத்தை யாம் இவ்விடத்தே சென்று கேளாமோ? கேட்போம் என்று கூறி மொய்த்துக் கடுகவந்து என்னைப் பாராதே கொள்ளுங்கோள்; நமக்கு முன்னே வந்து என்னைச் சூழ்ந்துநின்ற இவரைக் கண்டீரே; ஓஓ! இவரே சூழ்ந்துநிற்க அமையும்; நீர்தாம் இதற்கு முன்பு மிகவும் யானுற்ற தவறுடையீரல்லீர்போலேயிருந்தது, நமக்கும் ஒருகாலத்தே உண்டாம்; இனி யான் கூறுவதனைக் கேட்பீராக; தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமும் ஒருகாமம் என்று† நூல்களிலே கூறுவர்கள்; ஆதலால் அதனையுற்று நின்ற என்னை இகழாதே கொள்ளுங்கோள்; ஈண்டு எமுற்றுரியார் யாரீதேமுற்றதென்று தாம் விரும்பப்பட்ட ஆடவர் தம்மதி மயங்கும்படி கைவிட்ட விடத்து அவர்பெற்ற நலங் கெடுகின்ற தன்மை பூ வண்டு நுகர்ந்து தன் புதிய நலஞ் சிறிது கெட்ட நிலைமைத்து, காணுங்கோள்; என்று கூறினள்;

'நறவு': தேனுற் சமைத்தமைத்தது. ஆற்றுதல் - நடத்துதல்.

'நோக்கி' என்ற எச்சங் காரணகாரியப்பொருட்டு. தோள் நலத்தைப் புணர்ந்தவன், ஒருபெயர் மாத்திரையாய் நின்றது. இவரை என்னும் இரண்டாவது "ஒழியாது வருதலும்"‡ என்பதனுன் ஒழிந்து நின்றது. 'ஓஓ' இரக்கக்குறிப்பு.

(௧௮-௩௫) கலைஇய . . . . நீ:—

(இ - ள்.) அங்ஙனங் கூறி, அவனோடே கலந்தகண் புருவம் தோள் நுசுப்புச் சில மழைபோலே நீண்டிருண்ட கூந்தல் என்கின்றவற்றின் அழகைப்பெறும் விலையின் வளப்பத்தை அறிந்து கொடுத்தவனிடத்து உள்ளவற்றைக் கொள்ளுதல் அறியாதே ஒருவன் கூறிய பொய்யாகிய வலையிலே§ என் நெஞ்சு அகப்பட்டுவிட்டது; என்று கூறிப், பின்னுங் கேளிர்! வாழ்வீராக! என அவர்க்கு முகமன்கூறி அவன் இயற்கைப் புணர்ச்சியிலும் பல சூளுறவாலும் என்மனத்தைத் தேற்றிப் பின்னுந் தெளிவித்தவன் என்னை அணைத்து முலையிடத்தே முயங்கினன்; அங்ஙனம் முயங்கிப் பின்னர்த் தெளிவு பொய்யாம்படி கைவிட்ட கொலைத்தொழிலை வல்லவனை யான் தேடிக் காணேனோ? அவன் என்னைக் கண்டானுயினும் அவனால் யான் பெறும் பொலிவை அறியமாட்டீர்; என அவரை நோக்கிக் கூறி, அவர் மறு

* நற். ௧௭; ௮.
† தொல். பொருள்: ௫௧.
‡ தொல். எழுத்து: ௧௫௭.
§ ஐங். ௨௮௩.

மொழி கொடாமையின், ஞாயிற்றை நோக்கி, ஞாயிறே! போக்கற்கு அரிய இருளைப்போக்கும் விசும்பிடத்து மதி தோன்றுமாறுபோல நீயும் நீருள்ளே யுந் தோன்றுவை; அங்ஙனந் தோன்றினவிடத்து ஆண்டு வாழுந் தேரை இரை என்று தின்னப்படுதலைப் பரிகரித்துக்கொள்; என அதற்கு முகமன் கூறி, ஞாயிற்றை வானிடத்தே இருந்து எவ்விடமுங் காண்கின்ற நீ எனக்கு என்ன காரியஞ்செய்வை? ஒன்றுஞ் செய்யாயாயினும் இப்பொழுது எங்கேள்வன் யாதோரிடத்தே இருந்தானாயினும் எனக்குக் கொண்டுவந்து காட்டுவாய்; நீ காட்டாயாயின், யான் நின் கதிர்களைப் பிடித்துக்கொண்டு அவ்விசும்பிலே ஏறி அவனைப் பார்ப்பேன்; அதற்கு நீ செய்யுங்காரியம் எனக்கு அருளாத ஒப்பிலாதானை நாடி யான் பிடித்துக் கொள்ளுமளவும் ஞாயிறே! நீ குவிந்துசெல்லும் பலகதிர் பகற்காலத்தோடே இவ்விடத்தே நிற்கச் சிலகதிரோடே படுவாயாக; என்று கூறினாள்;

'அறிதிர்' என்றது அறியமாட்டீர் என்ற இகழ்ச்சிக்குறிப்பு.

(கக–சஎ) அறஅ . . . . னம்பு :—

(இ - ள்.) உலகத்தார் வேண்டிக்கொண்ட காரியங்களை மறாத ஞாயிறே! என் கையினின்று நீங்குதலின்றாய் ஐதாகிய மயிரினையுடைய என் முன்கையிலே கிடந்து சுழலும் வளையிடத்தைப் பிடித்துத் தெளிவித்துக் கூடினவன், பாற்பயன் கோடற்குச் சிலகாட்டிக் கறக்கப்படாத காட்டெருமைகளையுடையவாகிய காட்டைக் கடந்துபோயினனோ? அன்றியே என்னோடு அன்புறுதலோர் தகைமையை எனக்குச் செய்து இவ்வூரிடத்தே இருந்தானோ? இரண்டும் அறிகின்றிலேன்; அவனைக் கூடப்பெறாதே நோவா நின்றேன்; அதற்குமேலே நீ உண்டாக்கும் மாலைக்காலமும் வந்தது; இனி இந்நோய் என்னிடத்தினின்று நீங்காது; அவன் இவ்விடத்துளனாயின் அவனை எனக்குக் காட்டுவாய்; காட்டினால் அவனைக் கோபியாதே மனத்தாலே கைக்கொள்வேன் என்றாள்; அது காட்டாமற்படுதலின் அதனைக் கைவிட்டு நடுவுநிலைமை செய்தலன்றி ஒருபாலுறாத கூற்றமே! சுறாக் கொடியையுடைய இக்காமன் செய்கின்ற கொடுமைகளை நீயும் நின் ஓலையிடத்தே எழுதிவைத்துக்கொண்டு தண்டிப்பை; அவன் நமக்கு வழிபடு தெய்வமாதலின்* அவனைத் தண்டியாமற் றணிவாயாக என்று கூறினாள்; அங்ஙனங் கூறிக், காமனை எதிர்பெய்துகொண்டு, காமா! நின்னுடைய அம்புகள் தனக்கு உரியவாகிய நெஞ்சினைத் தம்மேல் அன்பிலாதான் ஒருவன்பொருட்டு வருத்துவித்தல் சிலர்க்கேயன்றி எல்லார்க்குமாந் தன்மையையுடையவோ அல்லவோ? என்றுங் கூறினாள்;

ஓகாரம் எதிர்மறை. 'பறாப்பருந்து' ஈண்டுக் குருகு† என்பதனை உணர்த்திநின்றது. 'மறாவரைசன்' வரோதயன் என்னும்பொருட்டு.

---

* சிலப். கூ: சுO-சுக. † குருகு - வளையல்.

(௬௮-௫௨) கையாறு . . . . வேன்று :—

(இ - ள்.) அங்ஙனங் கூறி, இனி வருகின்ற இராக்காலத்து நின் அம்புகள் இறந்துபடுவியாமல் யான் உயிர்கொண்டு இருக்கும்படி அருளுமாயின், அவசத்தாற் சிறிது துயிலேற்றுக் கலங்கின கண்ணாலே எனக்குக் கையாற்றைச் செய்தவனைக் கனவிலே கண்டேனாயின், அக்கண்ணைக் கடுக விழித்துப் பாராதே மெத்தெனப் பார்ப்பேன்; பார்த்தபின் தப்பிப்போகாதபடி தாழ்ந்து கிடந்த துகிலைப்* பிடித்துக்கொள்வேன்; பிடித்துக்கொண்டு என் மேனி வேறுபாட்டினைக் கண்டு இவள் நந்தலைவியோ அல்லளோ என்று ஐயத்தை நெஞ்சிடத்தே கொண்டு† என்னை அறியாதே கைவிடுவனாயின் என் நாண்முதலிய குணங்களையும் மேனி நலத்தினையும் மெய்யாகக் கைக்கொண்டு போன கள்வனென்று எல்லாருங் கேட்கும்படி விரையக் கூப்பிடுவேன் என்று காமனை நோக்கிக் கூறினாள்;

'ஓ' : அசை.

(௫௩-௫௬) வினவன்மி . . . . றேடீர்பு :—

(இ - ள்.) அங்ஙனங் கூறி, ஊரிலுள்ளீர்! எங்களை நோக்கிக் கூறுகின்ற நீர் ஞாயிற்றையுங் காமனையும் நோக்கிக் கூறியதற்கு அவை என்செய்யுமென்று என்னைக் கேளன்மின்: எந்நாளும் என்கண் துயிலாமையைச் செய்தவன் தந்த நட்பின் உண்டான நோய் மடாநறவை யுண்டாரைப்போல மயங்கும்படி விடாதே உயிரைப்பொருந்துந் தன்மையோடே கூடிவிட்டது; இனி இவ்வுயிரைக் காக்கும்வழி உண்டாயிற் காப்பீராக என்றுங் கூறினாள்;

(௫௭-௬௦) கனவினுற் . . . . கோண்டு :—

(இ - ள்.) அதற்கு அவர் மறுமொழி கொடாதுநிற்றலின், முற்கூறிய ஞாயிற்றையுங் காமனையுமே பின்னும் நினைந்து, வருகின்ற இராக்காலத்துக் கனவின்கண்ணே‡ அவனைக் கண்டு ஆற்றுதற்குக் காமன்கணை செய்கின்ற கொடுமையாலே கண் துயிலாவாயின், ஞாயிறே! எப்பொருளையுங் காட்டுகின்ற நீ கனவின்கண் வந்தாகிலும் அவனைக் காட்டாயாயில், இவ்வாறே வருத்தமுற்றுப் பனையீன்ற குதிரையையேறி அவன் என்பால் தானே வரும்படியாக அக்காமன்காலைக் கட்டிக்கொண்டு நின் அம்புகளை எனக்குத் தரவேண்டும் என்று காமனை இன்னும் இரந்துகொள்வேன்; என்றுங் கூறினாள்;

(௬௧) எனவாங்கு :—

(இ - ள்.) எனச் சொல்லி;

'ஆங்கு'; அசை.

* அகம். உ௭௬ : அ - ௯. † நற். ௫௬ : ௫-௬௦

‡ குறள். ௧௨௧௧, ௧௨௧௪.

(௬௨—௭௧) கண்ணினைபு . . . . னகத்து :—

(இ - ள்.) இவ்வொண்ணுதல் அன்னையோ !! என்று இனைந்து கண் கலங்கி அழுதாள் ; தோண்மெலிந்து வளைநெகிழ்ந்தாள் ; இப்பேதை, மடப்பம் வருதலினையும் மெல்லிய நடையினையுமுடைய அன்னப்பெடை விரைந்து செல்ல, அதனைச் சேர்ந்த அன்னச் சேவலின் கூட்டம்போலே, பின் தன் காதலன்வர அங்கே அவனைக்கண்டு தான் அழுந்தின துயரமெல்லாம் அறுதியாக மறந்தாள் ; மறந்து இத்தையலாள் பின்னர் ஊரிலுள்ளார் நகைத்த நகையையும் போக்கிப், போன நாணமுந் தன் மெய்யிடத்தே வந்து நிற்கையாலே தலையிறைஞ்சித், தன் மெய்யிடத்தே அழகுண்டாக மனத்திடத்தே நகையுண்டாக அந்நல்லெழின் மார்பனிடத்தே சேர்ந்தாள் ; இம் மகிழ்ச்சியையும் எல்லீருங் காண்பீராக எனக் கண்டார் வியந்து தம்மிற் கொண்டு கூறிற்றாக உரைக்க.

இது கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'கொலைவனைக் காணேன்கொல் யான்' என்னுந் துணையுங் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறுஞ், 'செறாஅ துளனாயிற் கொள்வேன்' என்றதனால் தன் வருத்தந் தோன்றாமற் கூறலின் வருத்தமிறந்தவாறுங், 'காமன் கணையிரப்பேன்' என்றதனால் அவனை வருத்துவேன் என்று அவனை வியவாமையின் மருட்கையிறந்தவாறுங், 'கலைஇய கண்புருவம்' என்று உறுப்பான் வனப்புமிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடி வந்த தரவும் நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரான் வந்த ஓரடியானொன்றும் நெடுவெண்பாட்டும் இருசீரானொன்றுங் குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டும் இரண்டுகுறுவெண் பாட்டும் நெடுவெண்பாட்டுங் குறுவெண்பாட்டும் மூன்றுநெடுவெண்பாட்டுந் தனிச்சொல்லும் வஞ்சியடியிரண்டு முன்னர்விரவி யாப்பின்வேறுபட்ட கொச்சகவெண்பாவும் பெற்ற கொச்சகக்கலி. (௫0)

௧௪௮.

தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிருன்றிக் கண்பயங் கெடப்பெயர
வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
மல்லனீர்த் திரையூர்பு மாவிருண் மதிசேப்ப
வில்லவ ரொழுக்கம்போ லிருங்கழி மலர்கூம்பச்
செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை ;
மாலைநீ,
இன்புற்றார்க் கிறைச்சியா யியைவதே செய்தாய்ம

௧0. னன்புற்று ரழநீத்த வல்லலுட் கலங்கிய
துன்புற்றூர்த் துயர்செய்த றக்கதோ நினக்கு ;
மாலைநீ,
கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்ம
னலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்க
௧௫. ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு ;
மாலைநீ,
எங்கேள்வற் றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு ;
௨0. எனவாங்கு,
ஆயிழை மடவர லவல மகலப்
பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் மண்வெளவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

இது "வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு, ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக, வரையாது பிரிதல் கிழவோற் கில்லை"* என்பதனான் அரசன் மண்கோடற்கு ஏவுதலின் வாளாணெதிரும் பிரிவின்கண், தலைவன் வரைவிடைவைத்து வேந்தற்குற்றுழிப் பிரிந்துழி அவள் வருத்தமிகுதி கண்டார் கூறியது.

(௧—எ) தோல்லியன் . . . . மருண்மாலை :—

(இ - ள்.) ஞாயிறு தன் கதிர்களாலே ஞாலத்திடத்துப் பழைய இயல்பினையுடைத்தாய்த் தான்செய்துபோதும் பொருள்களை விளக்குந் தொழிலிலே ஊன்றி நடத்திப், பின்னர்க் காமன் தனக்கு யான் பிரிந்திருந்தாரை வருத்துதற்கு நீ போவாயாக என்று கூறியகாரியத்தினைத் தன்றலையிலே ஏறட்டுக்கொண்டுபோவான்போலே அத்தகிரியைச் சேர்ந்து, பல்லுயிருந் தங்கண்களாற் கொள்ளும் பயன்கெடும்படி போகத், தீவினையைப் போக்குகின்றவனுடைய அருளைக்கொண்ட முகம்போலத்† திங்கள் வளப்பத்தையுடைய கடலிற் றிரைமேலேதோன்றி அம்மயக்கத்தையுடைய இருளைப் போக்கப், பொருளில்லாதார் நிகழ்த்தும் இல்லறம்போலக் கரிய கழியின் மலர்கள் ஒழுகக் குவியத், தேய்கின்ற என்னுயிரின் புறத்தே வந்துவிட்ட மாலாய்! நீ அறிவு மயங்குதலையுடைய மாலையாய் இருந்தாய் ; என்றுங் கூறினாள் ;

* தொல். பொருள் : ௧௭௪. † சிலப். ௨அ : ௩எ - ௩௯.

(௮—௧௧) மாலைநீ . . . . நினக்கு :—

(இ - ள்.) அங்ஙனங் கூறியவள், அதற்குக் காரணமென்னெனின், கூடி இன்பமுற்றவர்களுக்கு நேயமாய் அவர்கள் தம்மிற் கூடும் நிலைமையையோ மிகவும் முன்பு செய்துபோந்தாய்; இப்பொழுது ஆடவர் தம்மேல் அன்புற்ற மகளிர் அழும்படி தம்மைக் கைவிட்டதனால் உண்டான அல்லலிடத்தே நின்று கலங்கிய துன்பமுற்ற மகளிரை வருத்தஞ் செய்தல் நினக்குத் தக்கதன்றே.* என்றாள்;

மேல் வருகின்றவற்றிற்கும் இங்ஙனங் கூட்டி உரைக்க.

(௧௨—௧௫) மாலைநீ . . . . நினக்கு :—

(இ - ள்.) மகளிரைக் கூடிய கணவருடைய மனவேட்கையை அம்மகளிர்க்குத் துணையாய் நின்று அவர் மனத்தினின்று நீங்காது கனன்றெரியுந் தன்மையையோ முன்பு மிகவுஞ் செய்தாய்; இப்பொழுது அம்மகளிர் நலத்தைக் கைக்கொண்டு பின்பு அவர்க்குக் கொடாத ஆடவராலே தந்நலம் போன தனிமையிடத்தே நின்று அலந்த மகளிர்க்குத் துணையாகாதே வருத்தமாகல் நினக்குத் தக்கதன்றே, என்றாள்;

(௧௬—௧௯) மாலைநீ . . . . நினக்கு :—

(இ - ள்.) எம்முடைய கேள்வரை முன்புபோல மனத்தைக் கனலப் பண்ணி ஈண்டுத் தருதலுஞ் செய்திலை; ஆதலால் நீ எமக்குத் துணையில்லை; தான் பிரிந்திருந்த மகளிர்க்கு அப்பிரிவாற் றோன்றிய நோயின்வடிவு நீ தானேயாய்க், கூடியவர்களுக்கு அவர் பெறும் இன்பத்திற்கோர் தெப்பமாய், இங்ஙனம் நன்மையாகாத காரியங்களைச் செய்தொழுகுமதல்லது நினக்கு நன்மையாகச் செய்யுங் காரியங்கள் இல்லையோ? என்றாள்;

இது கலக்கம் என்னும் மெய்ப்பாடு.

(௨௦) எனவாங்கு :—

(இ - ள்.) என்று சொல்லி;

'ஆங்கு' அசை.

(௨௧—௨௪) ஆயிழை . . . . முடிந்தே :—

(இ - ள்.) திருந்தின இழையினையுடைய மடப்பம் வருதலையுடையவள் வருந்தியவிடத்தே தூரிய [illegible]த்தே உறைகின்ற காதலர் பகைவரிடத்துச் செய்யும் போர்த் தொழில் [illegible]ப் போய் முடிந்து அவர்மன்னனைக் கைக்கொண்டு பார்த்த இருட்பாப்பினை ஞாயிறு போக்கினாற்போல அவள் வருத்தம் நீங்கவந்தார்; இஃது என்ன வியப்போ! எனக் கண்டார் கூறியதாக உரைக்க.

---

* கலி. ௧௧௮ : ௯-௧௨.

இது கண்டார்க்கு அவர் ஆக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

"தானே சேறலுந் தன்னொடு சிவணிய, ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே"* என்பதனான் முடியுடைவேந்தன் தன் பகைமேற் சென்று மண்கோடல் உரித்து என்றதனானும், வாளாணை திரும் பிரிவு முடியுடை வேந்தர்க்குச் சிறுபான்மையென்றும் அவர் ஏவப்பிரியும் அரசர்க்குப் பெரும்பான்மையென்றுங் கூறலானும், "வெளிப்படை தானே கற்பினொடொப்பினு, ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக, வரையாது பிரிதல் கிழவோற்கில்லை"† என்றதனான் வரைவிடைவைத்து மண்கோடற்குப் பிரிதலில்லையென்று அதனை விலக்கினமையானும், கண்டார் களவிற் கூறுதலின்மையானும், இப்பாட்டும் அவள் மிகவும் வருத்தம் எய்தின நிலைமையைக் கண்டு வருந்தினோர் அவன் வந்து கூட வருத்தம் நீங்கினமை கண்டு வியந்து கூறிய பெருந்திணையாம்.

இதுவும் இடையிடை சொற்சீரடி வந்து எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகம். (௩௧)

௧௪௯.

நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினந் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள்;

கற்பித்தா னெஞ்சழுங்கப்[1] பகர்ந்துண்ணான் விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
லொற்கத்து ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினுமஃ தெறியாது விடாதேகாண்;

கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
டாளிலான்[2] குடியேபோற் றமியவே தேயுமாற்
சூள்வாய்த்த[3] மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்;

ஆங்கு,
அனைத்தினிப் பெரும வதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்த னெயிற்புறத் திறுத்த

---

* தொல். பொருள்: ௨௭. † தொல். பொருள்: ௧௮௧.

(பாடம்) 1. கற்பித்தார் நெஞ்சழுங்கப். 2. ஏளிலான். 3. சூள்பொய்த்த மனத்தவன் வினைவாய்ப்பின்.

௧௫. வினைவரு பருவரல் போலத்
துணைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

இது வரைவு நீட்டித்தவழித் தலைவியது ஆற்றாமைகூறித் தலைவனை வரைவு கடாயது.

(௧—௩) நிரைதிமில் . . . . சேர்ப்பகேள் :—

(இ - ள்.) நிரைத்த திமில்கள் களிறாகத் திரையொலிக்கின்ற ஓசை பறையாக* இனத்தினையும் அழகிய சிறகினையுமுடைய கரையைச் சேர்ந்த புட்கள்† காலாட்படையாகப் பாண்டியன் பகைவர்மேற் படையெழுச்சியாய்ச்‡ சென்றாலொத்த செலவினையுடைத்தாகிய வலியினையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தையுடையவனே! யான் கூறுகின்றதனைக் கேள்;

தான் பாதுகாக்கின்ற கரையை அரசனைப்போலே சென்று அழிக்கின்ற கடற்சேர்ப்பனென்றதனால் தான் பாதுகாக்கப்படுகின்ற நம்மை வரைந்துகொண்டு பாதுகாவாமல் அழிக்கின்றானென உள்ளுறையுவமந் தந்தவாறுணர்க. இனிப் பகையின்றி இருக்கின்ற கடல் பகைபோற்றோன்றினாற் போல அயலார் பகைபோல அலர்கூறி வருத்துகின்றார் என்றலும் ஒன்று.

(௪—௭) கற்பித்தா . . . . விடாதேகாண் :—

(இ - ள்.) தனக்கோர் வருத்தமுற்றவிடத்து உதவினவர்கட்கு ஓர் வருத்தம் வந்தால் உதவாதவன், தன்னை நூன்முதலிய கற்பித்த ஆசிரியன் தன்பால் ஒன்று பெறாமல் மனம்வருந்தத், தன் கைப்பொருளை அக்கல்விப் பொருட்குக் கைம்மாறாகக் கொடுத்து உண்ணானாய்த், தான்கற்ற விச்சையிடத்தே தப்புப் பண்ணிக்கொண்டவனுடைய கல்விப் பொருள் நாடோறுந் தேயுமாறுபோலத், தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றிப் பின்பு அச்செய்ந்நன்றிக் கேடாகிய§ அது தன்னுடம்பினை ஒழித்து உயிர் போனவிடத்தே யாயினும் நுகர்வியாமற் போகாதுகாண்;

(௮—௧௧) கேளிர்க . . . . விடாதேகாண் :—

(இ - ள்.) தான் சூளுறுகின்ற சூளுறவினைக் காண்கின்றவர் மனங்கொள்ளும்படி சூளுற்ற மனத்தையுடையவன் தான் சூளுற்ற காரியத்தினை முடிவு போக்காது பொய்த்துவிடுவானாயின், தன்னைச்சேர்ந்து வாழுஞ் சுற்றத்தாருடைய நெஞ்சு தான் ஒன்றை அறியாமையால் வருந்தும்படி தன்னோடே கெழுமுதலுற்ற செல்வத்திடத்தே தானின்று அச்செல்வத்தை மேலே மேலே வளர்க்கும் முயற்சிதானும் இல்லாதவனுடைய குடி நாடோறுந் தேயுமாறுபோலத்¶ தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றிப்

* சீவகசிந். ௨௨௨௨. † சிலப். ௧௦ : ௧௧௪-௧௧௬. ‡ சீவகசிந். ௨௨௨௬.
§ குறள் ௧௧௦; புறம். ௩௪ : ௫-௭. ¶ குறள் ௬௦௧-௬௦௪.

பின்னர் அச்சூளுறவினைப் பொய்த்த தீவினை மறுமையில் விரவின் அது வாளின் வாய்கூரிதாய்ச் சுவர்க்கம் பெற்றானாயினும் நுகர்வியாமற் போகாது காண் ;*

இது வரைந்துகொள்வல் எனச் சூளுற்றதனைப் பொய்த்தாய் என்றாள்.

(௧௨) ஆங்கு :—

அசை.

(௧௩–௧௬) அனைத்தினிப் . . . . பெரிதே :—

(இ - ள்.) பெருமா ! செய்ந்நன்றிக்கேடு பொய்ச்சூளுறவாகிய தீவினையின் தன்மை யாம் முற்கூறிய அத்தன்மைத்து ; இனி நீதான் அத்தன்மைத்தாதலை நின் மனத்தால் நினைந்துபார் ; இவள் தான் தன் பகைவனோடு சினந்த அரசன் அவன் எயிற்புறத்தே சென்றுவிட்டவினையால் உழிஞையானுக்கு வந்த வருத்தம்போலே வரைவு கடிதின் முடிதற்கு விரைதல் வரும் நெஞ்சத்தாலே பெரிதும் வருந்தினாள் ; இனி அவ்வருத்தம் நீங்கும் படி கடிதின் வரைவாயாக என வரைவுகடாயினாள்.

இதனாற் றலைவற்கு அசைவு பிறந்தது.

இது சிறுமைக்கு எல்லைகூறிய நான்கடியாயின்றி மூன்றடியான்வந்ததாவும் நான்கடித்தாழிசை இரண்டும் ஆசிரியச்சுரிதகமும் வந்தமையால் யாப்பின் வேறுபட்ட பாநிலைவகைக் கொச்சகம். (௩௨)

## ௧௫0.

அயந்திகழ்[1] நறுங்கொன்றை யலங்கலந் தெரியலா
னியங்கெயி[2] லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
கனைகதிர் தெறுதலிற் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம் ;

இறந்துதா மெண்ணிய வெய்துதல் வேட்கையா
லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினையையாய் நீத்தலு[3] நீப்பவோ ;

*குறள் : ௨0௭.

(பாடம்) 1. அலர்ந்திகழ். 2. னிலங்கெயி. 3. நீக்கலு.

கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றார்நியா னெள்ளணிநக் கன்னநின்[1]
னுருவிழந் தினையையா யுள்ளலு முள்ளுபவோ;
கொதித்துராய்க் குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னா ரொண்பொருட் ககன்றவர்
புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ;
ஆங்கு,
அரும்பெற லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தன
மையீ ரோதி மடமொழி யோயே.

இது பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

(க—சு) அயந்திகழ் . . . . வெஞ்சுரம் :—

(இ - ள்.) நீர்நிலைக்கருகே விளங்குகின்ற அலங்கலையுடைய கொன்றை* மாலையையுடைய இறைவன் திரிபுரத்தை எய்கையினாலே தோன்றின முழங்கும் வெம்மையையுடைய நெருப்பு† விசும்புற நிவந்து அழலுமாறுபோலச் செறிந்த கிரணங்களையுடைய ஞாயிறு எவ்வாயுஞ் சுடுகையினாலே முளிந்த மூங்கில் தம்மிலே இழைதலைக்கொண்டதாக அதனிடத்தே கடுத்தெழுந்த முழங்கிய காட்டுத்தீ‡ அவ்விடத்தைக் கைக்கொண்டு விசும்பிலே உற ஓங்கி வெம்மையைச்செய்யும், விலங்குகள் பலகாலுந் திரிகையினாலே மயங்கின அதரையுடைய, மலைகள் பார்த்து குறுக்கிட்டுக் கிடக்கும் போதற்கு அரிய சுரத்தை;

செய்யுஞ்சுரம், அதரையுடையசுரம், போதற்கரியசுரம், எனக.

விலங்கு, வருவிக்க. அலங்கலையுடைய கொன்றை என்றார், தாராகப் பூத்தலின். அலங்கல், அசைவுமாம்.

(எ—க0) இறந்துதா . . . . நீப்பவோ :—

(இ - ள்.) ஆயிழாய்! தாம் எண்ணிய காரியங்களைப் பெறுதலானுள்ள விருப்பத்தாலே அறத்தினைக் கைவிட்டு வெஞ்சுரத்தையிறந்து

* அகம் கடவுள். † பெரும். (க) சஅ : ககரு-கஉக. ‡ ஐங். கூகரு.
(பாடம்) 1. னெண்ணக்க வலையநின்.

பிறங்குகின்ற நீரைச் சடையிலே மறைத்தவனை ஒத்த பொருளாக்கத்திலே பிரிந்தவர் அழகினையுடைய நின்னிறம் பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுதலுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண்;

இறைவனை ஒத்தபொருள் என்றார், பொருள் நின்றுழி நில்லாது பலரிடத்துஞ் சென்றதேனும் ஒன்றானுந் தனக்குக் கேடின்றி இருத்தலின். 'அணி': அழகு.

(௧௧—௧௪) கரிகாய்ந்த . . . . முள்ளுபவோ:—

(இ - ள்.) வெந்த கரியினையுடைய பல வழியினையுடைத்தாய்க் கற்கள் காய்ந்த காட்டகத்தை வெருவுதல் வந்த வழியென்று கருதாராய் வடிவையுடைய ஏறுகிய ஊர்தியையுடையானை ஒத்த விழுப்பொருட்கு அகன்றவர் நக்கு ஒள்ளிதாகிய அணியினையுடைய[1] நின்னுருவை இழந்து நீ இத்தன்மையையாக அப்பொருளையே நினைத்தலையுஞ் செய்வாரோ? அங்ஙனஞ் செய்யார்காண்;

'நக்கு' என்னும் எச்சம் ஒள்ளிதாகிய என்னும் வினைகொண்டது.

(௧௫—௧௮) கோதித்துராய்க் . . . . காண்பவோ:—

(இ - ள்.) ஞாயிறு கீழ்த்திசையிடத்து உதயகிரியிலே வந்து தோன்றிப் பின்பு கொதித்துப் பரந்து தான்கொண்ட கோடைக்காலத்தாலே போதற்கு அரிய வழியென்று கருதாராய்ப் புதிய திங்களாகிய* கண்ணியையுடையானை யொத்த ஒள்ளிய பொருட்கு அகன்றவர் பொன்னாற் செய்த தலைக்கோலங்கள் தாழ்ந்து விளங்கின நின்மயிர் அவ்வாறன்றிக் காய்கின்ற அழகை நீ யுடையையாக அப்பொருள் வேட்கையை மனத்தாற் காணுதலையுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண்;

(௧௯) ஆங்கு:—

அசை.

(௨௦—௨௩) அரும்பெற . . . . யோயே:—

(இ - ள்.) கருமையினையும் நெய்ப்பினையுமுடைய ஓதியினையும் மடப்பத்தையுடைய மொழியினையுமுடையாய்! பெறுதற்கு அரிய ஆதிரைநாளையுடைய இறைவன் திருமேனி அழகைப் பெறும்படி மலர்ந்த பெரிய குளிர்ந்த இச்சண்பகம் பருவம்பொய்யாதவாறுபோல அவர் தாங் கூறிய பருவத்தைப் பொய்யாராய் வருதலை அவர் கூறிய கூற்றால் நீயும் யானும் ஒருங்கு தெளிந்தேம்; அங்ஙனந் தெளிந்த பருவங் கழிவதற்கு முன்னே வருவர்; அவர் மொழியைத் தெளிவாயாக என ஆற்றுவித்தாள்.

---

* சீவகசிந். ௨௦௮.

(பாடம்) 1. வனையினையுடைய.

இது கைம்மிகலென்னும் மெய்ப்பாடு எய்திநின்ற தலைவிக்குப் பின்னர்ச் சூழ்ச்சி பிறந்தது.

இஃது இளவேனிற் பருவங் குறித்து வற்புறுத்திப் பிரிய ஆற்றியிருந்து அப்பருவம் வந்தபின்னர் ஆற்றாளாய் இரங்குகின்ற தலைவியைத் தோழி ஆற்றுவித்தலான் இரக்கமாகிய உரிப்பொருள் சிறத்தலின், அவ்வுரிப்பொருள் முதலிலுங் கருவிலுஞ் சிறந்ததென்று இரக்கத்திற்கு உரிய நெய்தலிற் கோத்தார்; "முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே, நுவலுங்காலை முறை சிறந்தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை"* என்றாகலின். இதுபாலைக்கு உரிய முதலுங் கருவும் வந்து அதற்கு உரிய உரிப்பொருள் சிறவாமல் நெய்தற்கு உரிய உரிப்பொருள் சிறந்ததாயிற்று.

இது தரவியல் ஒவ்வாது அதனகப்பட்டுவந்த சுரிதகத்தான் இற்ற ஒத்தாழிசைக்கலி. (கரு)

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"† என்புழிச் சொல்லாதமுறையாற் சொல்லவும்படுமென்றலின் இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென இம்முறையே கோத்தார் நல்லந்துவனர்.

நெய்தற்கலி முற்றும்.

கலித்தொகை முற்றும்.

---

* தொல். பொருள்: க. † தொல். பொருள்: ரு.

(பாடம்) 1. நல்லந்துவனர்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி னுணர்ந்து
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த வழக்கினொல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணாக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்
ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு முணர்பவர்க் கெல்லா
முரையற முழுதும் புரைபட வுரைத்தும்,
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து இணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்

சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்,
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்,
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாச
னன்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
ஆழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

---

தொல்காப் பியத்திற் றெருக்க பொருளனைத்து
மெல்லார்க்கு மொப்ப விரித்துரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

---

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வச்சிறுற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுரா வெச்சின்
மெச்சினா ரெரும் விண்ணோர் மிசைகுவர் வேதபோத
னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்,

---

# கலித்தொகை

## செய்யுண் முதற் குறிப்பகராதி

# செய்யுண் முதற் குறிப்பகராதி

# கலித்தொகை - உரை விளக்கம்

## கடவுள் வாழ்த்து

(க - ச) 'ஆறு அறி......பகர்ந்து' என்பதற்கு, 'வீட்டு நெறியை அறிகின்ற அந்தணரென்னும் அருட்சான்றோர்க்கு அரிய நுண் கருத்துகள் பல புலப்படுத்தி' யென்பது நேருரை. மறை - நுட்பம்; பருப்பொருளறிவினோர்க்கு எளிதின் விளங்காததென்பது பொருள். மறை பல - பல நுட்பங்கள்; அவை "செங்கண் ஆயிரந் திருக்குறிப் பருளவும்" (சிலப். உஅ : ககூ) என்றாற் போல்வன. 'ஆறு' என்பதற்கு ஆறங்கமென்று நச். உரைத்தமையால், 'அந்தண' ரென்பதற்கு அந் நூன்முறையிலேயே வைத்து 'வேதத்தின் அந்தத்தை அணவுவா' ரெனச் சொற்பொருள் விரிக்குங் கட்டாயம் நேர்ந்தது. "பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்," "அந்தணரென்போர்......செந்தண்மை பூண்டொழுகலான்," "அந்தண்மைபூண்ட.... அந்தணர்" முதலிய சான்றோர் வழக்கும், 'அந்தண்' "அந்தண்மை' 'அந்தணாளன்' 'அந்தணி' முதலான சொற்பிறப்பாட்சியும் ஒழுக்கம் ஏதுவாக அவர்க்குப் பெயரமைந்த மாட்சிமை விளக்குதலின், அதற்கு மாறாகவும் சொற்சிதைவாகவும் நச். நூற்போக்கில் உரைக்கும் உரை கொள்ளற்பாலதன்று. அம் - அழகு; தண் - குளிர்ச்சி; குளிர்ச்சியில் அழகிய குளிர்ச்சியாவது அருள்; எனவே 'அந்தண'ரென்பதற்கு 'அருளொழுக்கமுடையா' ரென்பது இனிய செம்பொருள். 'பகர்ந்து', பாகுபடக் காட்டி யென்னும் பொருட்டு. 'தேறு நீர்': தெளிந்த நீர்; வான் நீராகலின். 'செல்லும் போர்' என்று கொள்க. வாய் பேசாமல் தான் குறித்த கருத்தின்மேற் செல்லும் போரென்பது கருத்து. இறைவன் திருநடச் சிறப்பியல்பு ஈதேயாம். நச். இவற்றிற்குக் கூறும் உரை நுட்பமாயிருப்பினும், நேருரையாகாவென்க. "கடுங்கூளி மாறுப் போ' ரென்பதிற் கடுமை போர்க்குக் கொள்க, இதனை விளக்கும்பொருட்டுக் கூளியினின்றும் அது பிரிந்திசைக்குமாறு 'கடிநாகிய' என்று நச். திறமாக உரைவகுக்கும் முறை பெரிதும் பின்பற்றற்பாலது. இறைவனது அழிக்குந் திருநடம் பேய்ச் செயல்போற் காணப்படுதலின், அது 'கூளிப்போர்' என உருவகிக்கப் பட்டது. 'எண் கை' என்பதிற் கை: தோள்; "எண்டோள் வீசி நின்றாடும்," என்பது காண்க. 'போரும் மிடறும் கையு' முடையாயென்று எண்ணும்மை விரித்துரைக்க. 'வீட்டுநெறி அறியவல்ல அருளொழுக்கச் சான்றோர்க்கு அதற்கான நுண்பொருள்கள் பல தெளிவித்து, அந்நெறியறியாத

மருளொழுக்க மாக்கட்கு இறைவன் எண்டிசைகளிலும் எண்டோளாற் போர்தொடுக்குங்கால், தனது குளிர்ந்த அருளியல்பை மறைத்து வெம்மைச் சின வியல்பை வெளிப்படுத்தி வாய் பேசாமல் தான் குறித்ததன்மேற் சென்று அப் போர் செய்யும் பெருமானே' என்பது கருத்து.

(ஞ - எ) 'படுபறை பல இயம்ப' என்பதிற் 'பறை' வாச்சியங்கள்: அவை, உலகுயிர்களை இயக்கவல்ல இசை வகைகளை யுணர்த்தும். அப் பெயர் இசைக்கருவிகளை யுணர்த்தும்போது ஆகுபெயராம்.

(அ - கச) 'அமர் பல கடந்து', பல போர்கள் கடந்து; இறுதியாக முப்புர மெரித்தலின், இத் திருக்கூத்துகள் முப்புர மெரித்தபோது ஆடியவையென உரைக்கப்படும். முப்புரமாவது, மும்மல காரியம். அணை, மெத்தை.

'எனவாங்கு' என்னுந் தனிச் சொல்லில், என என்று சொல்லும்படி யாக எனவும், ஆங்கு அசையெனவுங் கொள்க.

சிவபிரான் திருநடம்புரிந்து எல்லாவற்றையும் அழிக்கும்போது அவன் கைகொட்டி ஆடுங் கூத்துக் 'கொடு கொட்டி' யெனவும், அங்ஙனம் அழிந் தவற்றின் சாம்பலைப் பூசி ஆடுங் கூத்துப் 'பாண்டரங்க' மெனவும், தலை ஓடு முதலிய எலும்புகளைத் தாங்கி நின்று ஆடுங் கூத்துக் 'காபால' மெனவுங் கூறப்படும். 'பாண்டு அரங்கம்' - வெள்ளையரங்கம்; அது சாம்பல் நிறைந்த இடுகாடு. சாம்பற் பூசி அங்கு ஆடுங் கூத்துக்கு அதுவே பெயராயிற்று. 'பாண்டு' வெண்மைப் பொருளில் வருதல் "பாண்டு கம்பளந் துலக்கிய தாகலின்" (மணிமே, கச : உக) என்பதிற் காண்க. காபாலம் - தலை யோடு.

இங்ஙனமாக இறைவன் எல்லாவற்றையும் அழிக்குங்கால் அவன்றன் அருளியல்பு மேலே விளங்கித் தோன்றுதாகலின், அம்மை அசையாமலிருக்க ஐயன் நடம்புரிவானென்ப. அருளியல்பாகிய அம்மை இவ் அழிக்குஞ் செயலிற் கலந்துகொள்வளென்பது முறையாகாமையின், நின் ஆட்டத் துக்கு அவள் தாளந்தருவாளோ ? தரமாட்டாளோ என்னும் எதிர்மறைப் பொருளிற் 'கொண்ட சீர்த் தருவாளோ' 'வளர் தூக்குத் தருவாளோ' 'முற்பாணி தருவாளோ' என வந்தன.

(கரு - கள) ஆயினும் இறைவனும் அம்மையுந் தவிர ஏனையெல்லாம் அழிந் தொழிதலால் அந்நிலையில் வேறுயாருந் தாளந் தருதற்கில்லாமையா லும், அழிக்குந் தொழிலும் அருளேதுவாகவே நிகழ்தலாலும் எப்படியும் அம்மையே நின் ஆட்டத்துக்குத் தாளந் தர வேண்டுவது கட்டாயமாயிருக் கின்றதென்பார், 'பாணியுந் தூக்குஞ் சீருமென்றிவை மாணிழையரிவை காப்ப நீ ஆடி அமர்ந்தனை' என்று இறுதியில் முடித்தார். 'காப்ப', நடத்

றுக்குத் தக்கவாறு தாளம் ஒத்திட்டுத் தர என்றவாறு. தாளத்தின் முதற் கூறு 'பாணி'; இடைக்கூறு 'தூக்கு'; இறுதிக்கூறு 'சீர்' என்று கொள்க. இவ்வுண்மை 'முற்பாணி' 'வளர் தூக்கு' 'கொண்ட சீர்' என்னும் அவற்றின் அடை மொழிகளாலும் விளங்குதல் காண்க. மதுரைக் காஞ்சி யுரையிற் (கசுஎ) 'சீர்' என்பதற்கு இவ்வுரையாசிரியரே 'தாள அறுதி' என்றுரைத் தமையும் இங்கு நினைவு கூரற்பாலது.

மருட்கை - வியப்பு. தேவ பாணி - கடவுளைப் பரவும் பாட்டு.

## பாலைக்கலி

### க

(க - க0) தன்னாற் படைக்கப்படும் பொருளுக்குத் தான் முந்தியவனாக லின், நான்முகனை 'முதியவன்' என்றார். ஆயினும் அவனும் இறைவனால் ஒருகாற் படைக்கப்படுவோனே யென்றற்குத் 'தோன்றி' என்றார். மிடல் - மிடுக்கு. அமரரென்பார் அடங்கியவர். அடக்கமுள்ளவரை அமரிக்கையுள்ள வரென்ப. 'மடங்கல்' திரும்பாதவனென்னும் பொருளிற் கூற்றுவனுக்கு வந்தது; "மாற்றருங் கூற்றம்" (தொல், புறத், உ௪) என்பது காண்க. 'கடந்து அடு' என்பதற்கு, 'வஞ்சியாது எதிர் நின்று அடுகின்ற' என நச். உரைப்பது நல்ல உரை. முன்பு: வலிமை. கணிச்சி: துண்டிக்குங் கருவி; இங்கு மழு. கணிச்சியோன் என்பது முக்கண்ணனைச் சுட்டிவந்த மையாற், சுட்டுப் பெயராய் நின்றதென்றார். 'ஆர் இடை' என்பதற்குத் தொலையாத வழியிடையே என நச். உரைத்தது நுட்பமாயிருக்கின்றது.

(கக - உஉ) 'இரந்தோர்க்கு ஒன்று ஈத'லென்பது, இல்லறம்; அவ்வில் லறம் தலைவியோடன்றிக் கூடாது. பொருள் தேடச் செல்லும் நின் பிரிவாற்றாமையால் தலைவி இறந்துபட்டாளாயின் பின் நீ தேடிக் கொணர்ந்த பொருளால் இல்லறம் எங்ஙனம் நிகழும்? ஆதலின் நின் தலைவியைப் பிரியாமையே பொருளாவதல்லது பிரிந்து போய்த் தேடுவது பொருளாகாது' என்று வல்லமையாய்த் தோழி கூறுவாளாயினாள். (தொல். மெய்ப். உ௪-ன் உரையிற் காண்க.) இளமைச் செவ்வி முதிர்வினாலும், கற்பினாலும் பிரிவு காரணமாக இறத்தலுங் கூடுமென்பதும், இத்தகைய உணர்வின் விழுப்பத்தினாலேயே மகளிர் வடமீன்போல் தொழுதேத்தப்படுகின்றன ரென்பதும் அறியற்பாலன. இத்தாழிசைகளில் 'இரத்தல்' மூவகையாய் நிகழுமுறைமை நன்கு காட்டப்பட்டிருக்கின்றது. 'இடன்': செல்வம்; "இடனில் பருவத்தும்" (குறள் - உஉஅ) என்பதிற் போல.

(உ௩ - உக) இவள் என்றது, தலைவியை. 'கூற அன்புற்றுத் தாழ்பு அஞ்சித் தங்கின' ரென்று கொள்க. கூறவென்பதனைத் தொலைதலோடுங்

கூட்டுக வென்னும் நச். உரை நேர்மையாகாது. 'புன்கண் கொண்டு இனையவு' மென்பதற்குப் பொலிவழிவினைத் தன்னிடத்தே கொண்டு வருந் தவுமென்று இவரே யுரைத்தமையின், அப்பகுதியிலேயே தலைவியின் தொல் கவின் தொலைதலுந் தோழி கூறினளாக அடங்கும். மேலுங் கவின்றொலைத லஞ்சிச் செலவழுங்கினனெனின், அஃது அருமையன்று மெய்ப்பாடாகாதாம். ஆதலின், 'அன்புற்றுக் கவின்றொலைதலும் அஞ்சி' என வருமாறு எச்ச வும்மை விரித்துரைக்க. 'காழ்,' இங்குக் குத்துங்கோல்; "நெடுங்காழ்" (முல்லைப்: ௪௪) என்பது காண்க. களிற்று ஒருத்தல்: யானையின் ஆண்; களிறு என்பதும் யானையின் ஆண் ஆயினும் இன்னோன்ன இடங்களில் அச்சொல் யானையென்னுஞ் சாதிப் பெயராய் நிற்க, அதனை அடுத்துவந்த ஒருத்தலென்பது அதன் ஆணைக் குறிக்கும். இதனை 'விதந்து' என்றமை யாற் (தொல். மரபு, ௩௪) கொள்க.

## ௨

(௧ - ௫) அம்பல், அலருக்குமுன் நிகழ்வது; அது குறிப்பாகத் தூற்று வது; 'வெளியாகக் கூறு' மென்று நச். உரைத்ததற்கு அக்குறிப்பு வெளி யாகக் கூறுதலென்று கொள்க. 'இதழ் சோர்பு பனி மல்க' என்பதன் உரை அழகானது. இத்தகைய இடங்களில் நச். தம் ஆற்றலை நன்கு காட்டி யிருக்கின்றார். புன்மையாவது இங்கே பொலிவழிதல். நினைப்பவும் இழப் பவும் என்பதற்கேற்ப நாணவும் எனக் கொள்க.

(௬ - ௯) 'இடைகொண்டு' செவ்வி தெரிந்து; "தளர் இடை அறியுந் தன்மையள்கொல்லோ" (௪ : ௯௮) என்பது மணிமேகலை. 'எம்': அறமன் பன்மை. 'மலர்' தலைவியெனவும், 'அடை' சுற்றமெனவுங் கொள்வது சிறப்பு.

(௧௦ - ௧௩) வைகை, ஆகுபெயர். 'ஒல்லாங்கு' என்பதில் ஆங்கு என்ப தற்கு நச். உரைக்கும் உரைவன்மை கண்டுகொள்க. புல்லு - புல்லுதல். இறைஞ்சிய, தாழ்ந்தாற்போல் வீழ்ந்து கிடந்தவென்க.

(௧௪ - ௧௭) பிணிபு, தொழிற் பெயராகக் கூறலுமாம்.

இத்தாழிசைகளில் வந்தவை இறைச்சிப் பொருள்கள். இறைச்சி யென்பதற்குத் தங்கியதென்பது பொருள்; கருப்பொருள்களில் தங்கிய கருத்துகளெனக் கொள்க; அவை, சொல்லுவார் கருத்துக்கு ஓரளவு உவமைபோற் பயன்படினும் படும்.

(௧௮ - ௨௨) 'அருள் வந்தவை காட்டி' யென்றதனால், பாலைத்திணை காதலற்கு அருளுணர்ச்சி தருமென்பது பெறுதும். "மேல் நின்று மெய்கூறுங் கேளிர்", இஃதொரு பழமொழி. 'தகைப்ப'வென்பது அஃறிணை வினையாகலின், பகரவீறாகக் கூறாது அகரவீறாகக் கூறினர்.

இதனை "மூன்றேபலவறிசொல்" (தொல், சொல், ௯) என்னும் பிரி நிலையாற் கொள்க.

௫

(க - அ) மறவர்நிலை இதன் முதலடிகளில் ஓவியம்போற் காட்டப்பட்டிருக்கின்றது. 'சுரிவளர் பித்தையர்': நுனி சுரிந்து வளர்கின்ற தலைமயிரினை யுடையவர். அல்குதல் - தங்கியிருத்தல்; வழி வருவோர்க்குக் குற்றஞ் செய்தலைப் பார்த்துத் தொலைவிலே தங்கியிருத்தல்; 'புலம்பு': இங்கே வருத்தம். செடி கொடிகளில்லா வெறு வெளியாதலின் 'புள்ளும் வழங்கா ஆரிடை' யென்றார்.

(௯ - கஉ) காழ், உறுதிமுத்து; 'காழ் விரி கவையாரம்' என்பது ஒரு விலையுயர்ந்த அணிகலன். அவர், அத்தகையவரென்று கொள்க. நாணல் முளை, கூர்மைக்கு உவமை. "நாணற் கிழங்கு மணற்கீன்ற முளையோரன்ன முள் எயிறு" என்னும் அகநானூறு (உகஉ : ௬-௫) காண்க. அன்னவென் கிளவி எல்லா உவமங்கட்கும் வருமாகலின் (உவம, க௬) இங்கு மெய்யுவமத்துக்கும் வந்தது.

(க௩ - க௬) தீ, இனிமைப் பொருட்டு. மகிழ், இங்குக் கிளர்ச்சி.

(கஎ - உ0) 'நுண்ணெழில்' லென்றது, கூர்ந்து நோக்கநோக்க இன்பந்தரும் எழில்; இச்சொல் தமிழ்நாட்டவரது நுட்பவுணர்வை விளக்கும். சுணங்கு - தேமல். மகளிர்க்கு ஒளி பொருந்திய நுதல் கூறப்படுதலின், அவருடைய அறிவு அன்பு முதலான நல்லியல்புகளின் மாட்சிமை பெறுதும்; அகத்தின் நல்லியல்புகள் புறத்தே நெற்றியில் ஒளி காட்டுமாகலின் என்க.

(உக - உ௫) 'கழிபெரு நல்கல்': ஒரு குறியீட்டுச் சொல்; இஞ்ஞான்றும் வழங்கலாம். 'ஒருநாள் ஒருபொழுது இடைப்பட நீப்பின்' என்றமையால், முற்காலத்தில் ஆடவர்களோடு மகளிர் அறங்கேட்டல், ஆராய்தல், அரசுபுரிதல், வளங்காண்டல் முதலிய எச்செயல்களினும் கலந்துகொண்டு இணை பிரியாமல் உலகியல் நடத்துவரென்னும் தமிழ்நாகரிக உண்மையும் விளக்கமாம். 'ஒழிக இனி' என்பது 'ஒழிகினி' யென ஈறு குறைந்தது.

"செய் பொருள் அச்சமும்......" (தொல். பொருள்: ௬அ) என்பதற்கு இப்பாட்டு இலக்கியமாதல் கண்டுகொள்க.

௬

(க - ௯) 'அஞ்செவி' 'பணைத்தாள்', யானைக்குச் சிறத்தலின் அதனொடு கூட்டினார். 'யானையொடு மாநிரை மறவர் மயங்கி' யெனக் கொள்க.

'அதர்பட்ட அருஞ்சுர'மென்க. 'சிறந்தன' மென்பதிற் சிறப்பு இன்றி யமையாமைப் பொருளது. 'கலன் வௌவலின் ஆள்வினைக்கு அழிந்தோர் போறல்' ஒரு பழமொழி. தமிழ்நூல்களில் இது மிகுதியாகப் பயின்று வருதலால், அவர்கள் அயல் நாடுகளுக்கு வாணிகங் காரணமாக அடிக்கடி கலத்திற் செல்லுவரென்பது பெறுதும். 'கேள் பெருந்தகை': காதலனை பெருந்தகை; 'கேள்' இப்பொருட்டாதல் "அவனுந் தன் கேட்குச் சொன்னாள்" (குணமா, உ௱உ) என்றுஞ் சிந்தாமணியிலுங் காண்க. 'மொழிகுவம்' எனப் பிரிக்க. 'நாளுங் கோண்மீன்' என்பதற்கு 'நாண்மீனுங் கோண்மீனு' மென்றுரைப்பது நேருரை; அவை, நாளுங் கோளுமென்க. நச். உரைப்பது இயல்பாயில்லை. யானை முதலியன குறிஞ்சிக்குரிய கருப்பொருளாதலால் நச். 'குறிஞ்சிக்குரிய இறைச்சியா' லென்றனர். இங்கே இறைச்சியென்றது வாளா கருப்பொருளை; "இறைச்சிப் பொருள்வயின்" (தொல், பொய, சஉ) என்பதிற்போல.

(கo - கக) 'ஆற்றுப்படுத்த': ஒழுங்காக நடத்தியவென்னும் பொருட்டு.

(கச - கரு) நீர் நீத்த தாமரை ஓர் இராப்பொழுதேனும் வாடாம லிருக்கும்; நீ நீத்த தலைவி அதுதானும் உயிர்வாழாள் என்றபடி.

இவை அகநிலை ஒத்தாழிசைகளாதலின், சிறுபான்மை இங்ஙனம் இடப் பொருளோடும் இடத்தியல் பொருளோடும், ஒத்துப்பொருள் முடியாமையுங் கொள்க. (தொல். செய் : கசஉ. உரை - வி.) மீண்டும் பெற முடியாத இழப்பினை நச். கையாறு என்றமை கருத்திருத்துதற்குரியது. இத்தாழிசைகளிற் கூறிய உவமைகளால், காதலன் திரும்பி வருவதாகக் கூறிப் பிரியும் பிரிவிலேயே அக்காலத்துத் தமிழ்மகளிர் எத்துணை வருந்துவரென்பதும் அதனால் அவரது அன்பின்நிலை எத்துணை யுயர்ந்ததென்பதும் இனிது விளங்கும்.

(கசு - கக) 'பொய்ந் நல்கல்' ஒரு குறியீட்டுச் சொல். இனைய சொற்கள் மீண்டும் எடுத்து வழங்குதற் குரியன. 'புறந்தரல்': பாது காத்தலென்னும் பொருட்டு; உயிர்க்குப் புறமாயுள்ள உடம்புவசதிகள் உலகியல்வசதிகள் முதலியன உண்டுபண்ணித் தருதலைப் 'பாதுகாத்த' லென்பவாகலின், அப்பெயராயிற்று.

௫

(க - கo) 'மரல்', அரலையென்னும் பெயருள்ளதொரு புதர்; (பிங். மரப்: உஉ௰). அது மரைக்குரிய உணவுச் செடியன்று. மாரி வறந்தலால் அதனை அது கவர்கின்றதென்க. 'வரையோங்கு அருஞ்சுரம்' என்றமையால், இது

குறிஞ்சி நிலத்தின்கண் வெயிலின் உறைப்பால் வெதும்பிய பாலையாம்; இதனாலுந் தனியாகப் பாலைநிலமொன்றின்மை பெறப்படும். 'புரையோர் தம் சுரையம்பு' என்க; 'புரை' குற்றத்தை யுணர்த்தும்போது, 'உள் தொளை' யென்னும் பொருளடியாகப் பிறந்த சொல்லாம்; அறிவு அறை போனதென்பது கருத்து; இனி, உயர்வையுணர்த்தும்போது, தெய்வ வியல்போடு ஒத்ததென்னும் ஒப்புப் பொருளடியாகத் தோன்றிய சொல்லாம். 'உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்கு' என்பதனால், 'உடம்பி லிருக்கும் நீர் சுண்டினால் நாவுலர்ந்து நீர் வேட்கையெழும்' என்னுங் கருத்து வெளிப்படுகின்றது. பசியினும் நீர் வேட்கை கடுமையான தென்பது இதனாற் கண்டுகொள்ளப்படும். 'வழிச்செல்வோர் நீர் வேட்கையை அவர் வருத்தக்கண்ணீரே நாவில் வீழ்ந்து ஒருவாறு தணிக் கும்' என்பது நல்ல பாட்டோவியமாகும். 'துணையாக நாடின்' என்ப தற்குத் 'துணையாகும்படி நாடின்' என்றுரைத்தலேபோதும். 'அது வல்லது இன்பமும் உண்டோ எமக்கு' என்பது கற்பின் பொற்பு.

சா

(க - ச) 'வறிது' சிறிதென்னும் பொருட்டு; நச். இதற்கு உடல் சிறி தாக என உரைக்கும் உரை வல்லமைப்பாடானது. 'ஒய் களிறு', உள்ளக் கிளர்ச்சி சுருங்கிய களிறு எனக் கொள்க; ஒய்தலை நுணுகுதற் பொருளிற் கருதியே பேராசிரியர் இவ்வடிகளை உரியியலில் (ருச) மேற்கோள் காட்டு வர். 'வைப்பு', இங்குப் பாலைநிலத்தூர்கள். மறவர் மறச்செயலால் வான் நீங்குவதாயிற்றென்க. மறச் செயல்களால் மழை வறங் கூரும் உண்மை, "அன்று தொட்டுப் பாண்டியனாடு மழை வறங் கூர்ந்து வறுமை யெய்தி வெப்பு நோயுங் குருவுந் தொடர", என்னுஞ் சிலப்பதிகாரத்தாற் காண்க. 'நல்லுணர்ச்சிகளால் நாட்டில் மழை முதலாம் நலங்களுண்டாகு' மென்று தமிழ் மேன்மக்கள் கருதிவந்தமை தெரிதலின், இதனால் அவர் தம் மெய்யுணர்வுப்பேறும் அறச்செயல் நோக்கமும் நன்கு விளக்கமாம்.

(ரு - சு) 'அயர்ந்து' விரும்பியென்னும் பொருட்டு; "தழை அயருந்துறை வன்" (ஐங். கரு : எ) என்பதிற்போல. 'மனத்தான் நிகழ்த்துகையினாலே' என்று நச். அதனை விளக்கமாக உரைத்துக்கொண்டார், மேல் 'கை புனை' யென வருதலின். 'எழுதி வழித்த' என நச். உரைப்பதற்குப் 'பண்ணி மழமழப் பாக்கிய' என்று கொள்வது நல்லது. 'எழுதுதல்,' பண்ணுதற் பொருளில் வருதல், "எழுதிய பாவை" என்னும் மணிமேகலை (உக : ககசு) யிற் காண்க.

(கூ - கஉ) 'காழகம்', இங்கே போர்க்கோலத்திற் கட்டப்படும் ஒருவகைக் கைக் கச்சு. 'புனைமாண் மரீஇய அம்பு' என்பதற்குப்

புனைதன் மாட்சிமை பொருந்திய அம்பு எனவே உரைக்கலாம். 'நீல மலர் நீர் சொரிந்து மழை வரவை எதிர்நோக்கும்' என்பதோர் இயற்கை யுண்மை, "நீலம்.........இல்லாவே" என்பதனால் வெளிப்படுகின்றது. மேல், குறிஞ்சிக் கலியிலும் (சஅ : கரு) இது வரும்.

(ஙள - உக) 'அரவம்', இங்கு ஆரவாரம்; 'கடை', இறந்து படுங் கடைசி காலம் என்பது நச். கருத்து. தலைவன் திரும்பி வருதலை எதிர்பார்த்திராமல் தலைவி தன் உயிர்நீத்துத் துன்பம் ஆற்றிக்கொள்ளுத லின், அவள் அக்கடைசி காலத்தில் தன்னலங் கொள்வானாயினள் என்னுங் கருத்தில் நச். உரைத்தார்.

இச்செய்யுளில் வருந் தலைவியின் செய்கைகள் "உடன் சேறல் செய்கை" (தொல். கற்: ரு) என்பதன்கண் அடங்கும்.

எ

(க - அ) 'காய்' என்பதைக் 'கடுகுபு' என்பதனோடு கூட்டினார் நச். இருந்தவாறே உரைக்கலாம். 'சினை' மென்பது, கொதிப்பு; "ஞாயிறு சினை வின்" (புறம், கூய) என்பதன் உரை காண்க. மலைக்கு வெற்றியாவது இதுகாறுமாயினும் பசுமையும் நீரு நிழலுங் கெடாது தண்ணென்றிருந் தமை; கலி. உய : கூ-ரு அடிகள் காண்க. 'வெம்பிய' வென்றது, அத் தகைய மலை இப்போது புறங் கரிந்தும் புகைந்தும் வெடித்துந் தன் நிலை குலைந்தவென்றற்கு. 'துணிந்தனிர்க்கு ஐய' என்பது போல்வதை நச். முன் (கலி. உ) ஒருமைப்பன்மை மயக்க மென்றனர். "வாரன்மின் ஐய" என்னுந் திணைமொழிமாயம்பதும் (ரு) நினைவு கூர்க.

(கூ - கக) இசைக்குங் கோலி யமைந்த யாழ் நரம்புபோலும் என்றுவமைத் தலே சிறந்தது. இடைநின்ற ஏதாவும் ஒரு நரம்பு கெட்டால் ஏனையெல்லா நரம்புகளுந் தம் பயன் கெடுமென்பது கருத்து. பொருள் நிலைகளும் அங்ஙனந்தாம். ஒன்று நிலைகுலைந்தால் ஏனையெல்லாமும் அது காரண மாகப் பயன் கெடும். இசையின்பம் முறுகி நிற்கு நேரத்தில் திடுமென நரம்பறுந்து அவ்வின்பங் கெடுமாறுபோலப், பொருளும் நல்லவா நுகர்ந்து வரு நேரத்தில் திடுமெனக் கெட்டு இன்னல் தருமாகலின் இரண்டின் நிலை யாமையிலும் ஒப்புமை கொள்ளப்படும். இடைநேரம் வரையிலேனும் நரம்பறாமலிருக்கும் யாழ்போலவன்றிப் பொருள் தொடக்கத்திலேயுங் கெட்டு அதனினு நிலையாமை தெரிவித்தலின், 'யாழினு நிலையில்லாப் பொருள்' என்றார்.

(கஉ - கச) 'கொண்டக்காற் போலாது' என்பதற்கு நச். உரைக் கும் விளக்கம் இப்பகுதிக்கு முதன்மையானது. 'பீடு,' இங்கு பவிமை.

திருமகளின் தலைமை தோன்ற நச். 'புறமாறு' மென்பதற்கு உரைக்கும் உரையைக் கூர்ந்துணர்ந்து கொள்க. 'திரு' வென்றது, பொருட்கு ஏதுவாயுள்ள நற்பேறு. இத்திருமகள் ஒருவரை அடைந்தபின்பே அவருக்குப் பொருள்தேடும் எண்ணமும் வாயிலுந் தோன்றிப் பொருளுண்டாம். உண்டான பொருள் இடையே இல்லாமற்போயினும் சிலர்க்கு அந்நற்பேறு இருக்குங்காறும் பொருளுடையார்போல நுகர்ச்சியிருத்தலும் உண்டு. இங்ஙனம் பொருள், திருவுக்குப்பின் வந்து முன் கெடுதலின் அதனைத் 'திருவினு நிலையில்லாப் பொரு' ளென்றார்.

(௧௫ - ௧௭) 'பயனுேக்கார்', எச்சம். கொடுங்கோன் மன்னன் உயிர்விடு முன் அவன்பொருள் பிறரால் பற்றப்படுதலின், 'கண்ணோடாது உயிர் வௌவும் அரசினு நிலையில்லாப் பொரு' ளென்றார்.

நிடுமெனக் கெடுதற்குரிய யாழும் திருவும் கொடுங்கோலும் எடுத்துக் காட்டிப் பொருளது நிலையாமை அறிவுறுத்தமையின், அந்நிலையாமையின் விரைவை உள்ளத்துணர்ச்சியாய் ஆசிரியர் நன்கு புலப்படுத்தினாராயிற்று.

(௧௮ - ௨௫) 'நகர்' இல்லத்துக்காகி இல்லாட்காயிற்று; 'நகர்' இல்லம் உணர்த்துதல் "அருங்கடி வியன் நகர்" என்னுஞ் சிறுபாணாற்றுப்படையிற் (௧௮௭) காண்க.

இப்பாட்டில் நல்ல அறவுரைகள் வந்தன. இடர் வந்தபோது யானை, கலப்பைத் தோற்றம்போலத், தன் கையை மேலே தூக்கி நிலத்தில் மருப் பூன்றிக் கிடக்குமென்பது, தமிழ்மக்களின் உற்றுநோக்கறிவை வெளிப் படுத்தும்.

## ௮.

(௩ - ௪) 'எறித்தரு கதிர்', உறைத்தலைச் செய்கின்ற கதிர். குடை, வெண்குடை; பகலவன் வெயிலைத் தெறிக்கச் செய்வது வெண்ணிறமே யெனத் தெரிந்து தமிழ்மேன்மக்கள் அந்நிறமுள்ள குடையைப் பண்டு பயன்படுத்தி வந்தனர். "வெயில் மறைக்கொண்ட உருகெழு சிறப்பின் மாலை வெண்குடை" என்னும் பழைய புறநானூற்றடியை (௬௰:௧௧-௨) நினைவு கூர்க. முக்கோல் முத்தீயை உணர்த்துவதென்பது சிறப்பு; அதுவே பழைய பெருநூல்களில் உரைசான்றது. "கொடிநிலை கந்தழி வள்ளி" (தொல். புறத்-௩௩) யென்னும் முத்தீவணக்கநூற்பா இங்கே கருதுதற்குரியது. வேறு ஓரா நெஞ்சம், தவறு நினையாத நெஞ்சமென்று கொள்க. 'குறிப்பு' என்னுஞ் சொல் இங்கே ஐம்பொறியை உணர்த்துமெனக் கொண்டார் நச்.; ஐம்பொறியுந் தமக்கென ஒவ்வொரு குறிப்புள்ளமையின் என்க. "குறிப்பே, குறித்தது கொள்ளுமாயின்" (தொல். ௧௭ - ௬) என்பது கருதுக. 'கொளை', கொள்கை; 'நடை', ஒழுக்கம். சிறந்த கொள்கைகளும்

அவைதமக்கேற்ற நடைமுறைகளும் வாழ்க்கையில் உடையோரே சான்றோரென்றபடியாம். இத்தகைய சான்றோர் பண்டு தமிழகத்தில் எங்கும் நிலவியிருந்து அறங்காத்து வந்தனரென்க. 'வெவ்விடைச் செலன்மாலை ஒழுக்கத்தீ' ரென்றமையால், இவர்கள் மலைக்கானங்களிலும் கானகங்களிலும் வெளிகளிலும் அடிக்கடி போதலை ஓர் ஒழுக்கமாகக் கொண்டு இயற்கையுணர்விற் சிறந்து இறையருளிற் படிந்திருப்பரென்பது பெறுதும். இடை, இடம்; 'தாம் அறி புணர்ச்சிய' ரென்பதற்குத் தமக்குமட்டுந் தெரிந்த கூட்டமுடையரென்றுரைப்பதே இயல்பான உரை; இன்றும் அவர் எல்லார்க்குந் தெரியு நிலையில் இல்லாமையின் என்க. 'காமனமல்லைம் கண்டனம்' என்பதற்கு நச். உரைக்கும் நயம் அறிந்து இன்புறுக. 'அருஞ்சுரம் முன்னிய' என்றமையால், தலைவியின் மிக்க கற்பு புலப்படுத்தினராயிற்று. இதன் அடக்கியலில் 'இறந்த கற்பு' என்றதற்கு இஃது ஏதுவாம். கலி. கூ: கக-உ அடிகள் நினைவு கூர்க.

(கஉ - கச) சந்தனத்தோடு வேறு பல நறுமணப் பண்டங்களுங் கலப்பதுண்டாகலின், 'பல வுறு' என்றார்.

(கரு - கஎ) சீர், தலைமை.

கலிப்பாட்டுகளில் 'ஒத்தாழிசைக் கலி' யென வகுத்து, ஒரு கருத்தை மூன்று வகையாக அதன் தாழிசைகளில் தமிழ்ச் சான்றோர் விளக்கும் அருமையால், அவர்கட்குத் தெளிவின் மேலும் இனிமையின் மேலும் இருந்த விருப்பமும், அதற்காக அவர்கள் கையாண்ட கல்விமுறையும், கற்பாருணர்வை இன்புறுத்திச் செல்லு நோக்கமுந் திறமும் நன்கு விளங்குகின்றன. அவ்வருமைப்பாட்டை இத்தாழிசைகள் நன்கு புலப்படுத்தும்.

(உக) எனவாங்கு, முற்றும் அசை.

(உஉ - உச) 'படர்தல்' ஒன்று செய்யப் பலவாறுங் கருதுதல். 'சிறந்தான்' என்பதற்கு நச். உரை சிறந்தது. 'பிரியா ஆறு' என்றமையால், இறந்த பின்னுந் தலைவன் தலைவியர் பிரியாமைக்கு ஏதுவுண்டென்பது பெறுதும்.

௯.

(க - எ) 'சிறியவன்' என்பதற்குப் பொதுவாகக் 'குணத்தாற் சிறியவன்' என்பது சிறப்பு. 'கொடுத்தற்கு மனஞ் சிறியன்' என நச். உரைப்பர். கொடுத்தற்கு மனஞ்சிறியானிடம் முன் நல்வினையாற் செல்வம் மேன்மேல் திரண்டிருப்பினும் இருக்கும். ஆனால், இங்கே மரங்களில் நிழல் தரும் இலைகள் தழைத்திராமல் தீய்ந்துபோய் விடுதல் கருதுக. 'இலை தீந்த உலவையால்' என்று மேல் (கக) வருதலுங் காண்க. 'குணத்தாற் சிறிய'

னெனின், பல குணக் குறைகளால் அவன் செல்வம் விரைந்து கெட்டுச் சேர்ந்தார்க்கு நிழலின்றாகுமென்பது பெறப்படும். 'இகந்து செய்து' என்பதற்குப் பொதுவாக 'மீறி யொழுகி' யென்பது எளிய இனிய உரையாம். 'இசை கெட்டா'னென்றார், முன்னிருந்த புகழுங் கெட்டானென்பது தோன்ற. 'வேர்' என்பதற்கேற்ப 'இறுதி' கூறினார். வினைவர், காரியம் பார்ப்பவர்; என்றது செயலாளரை; இங்கு அமைச்சர்.

மூன்று தாழிசைகளிலும் முறையே 'இடைகொண்டு' 'நனிகொண்ட' 'பொருள் நோக்கி' என்பவற்றிற்கு நச். உரைக்கும் உரைத்திறம் அறிந்துகொள்ளுதற்குரியது.

(கஉ - கரு) முனிவின்றி யென்பதற்குப், பொருள்மேல் முனிவின்றி யென்றுரைப்பது நேர்மையானது. "முனிவிலராகி முயல்க." (பழமொழி-கஙக) என்பதுங் காண்க.

## கo.

(க - ௫) அறம் பொருளின்பம் மூன்றும் இதன் முதன்மூன்றடிகளில் வந்தன. ஒவ்வோரடியிலும் ஒவ்வொரு பொருள் முடிந்தது. இங்ஙனம் பிறிதோரடியிற் றொடராதவாறு முடிவதை 'யாப்பு' என்னும் உறுப்பாகக் கூறுவர் ஆசிரியர். (தொல். செய். எஅ). சான்றோர்க்கு அளிக்கும் அறத்தால் வெற்றியும் பொருளும் வாய்த்து இன்பமுண்டாமென்னுங் கருத்துத் தமிழகத்தின் நாகரிகத்தை வெளிப்படுத்தும். "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" என்பது புறநானூறு (௫௫). புறம் ௨௭-ன் உரையும் இதனை விளக்கும். 'புரிபு,' பொருந்துதல்; பல பிறவிகளிற் பொருந்துதலமர்ந்த காதலினால், இப்பிறப்பில் அதன் கூட்டமுந் தருமென்று இயல்பின் உரைக்கலாம். காதல் பிறவிதோறும் பொருந்தி வருதலாற், 'கிழவன்' 'கிழத்தி' என்னும் உரிமைப் பெயரும் இவர்க்கு அமைந்ததென்பது (தொல். கள, உ-ன் உரை) நச். கருத்து. மணிமேகலை உக : உகூ-ஙஉ அடிகளும் இங்கு நினைவுகூர்க. கொல், ஐயம்; அன்றேல் அது தலைவி கூற்றாகாது போம்.

(ரு - கூ) 'துடி', உடுக்கை; அதன் வாய்போன்ற அடியென்க. 'கயந்தலை', யானைக்கன்று; கன்றுகளிற் பெரிய தலையுள்ளதென்பது பொருள்.

(கo - கங) 'உறாஉம்': "வளி சுழற்றுறாஅ" (அகம், ஙக : அ) என்பதிற் போல, இங்கே பிறவினை.

## கக.

முள்வேலி வளர்ந்துமிருக்கும், அணுகுவாரைத் தன் முட்களாற் றைத்தும் வதைக்கும்; அதுபோல வில் வளர்ந்துமிருக்கும், வழிச் செல்வா

ரைத் தன் அம்புகளாற் றைத்துங் கொல்லுமென்க. இது மெய்யும் வினையும் பற்றிய உவமம். 'நிரைத்த', வரிசைப்படக் கிடந்த; 'அறுசுனை' என்பதற்கு நச். விளக்கம் அழகானது. 'கடுந்தாம் பதிபு ஆங்கு' என்பதிற் 'கடும்' என்பதைப் பிரித்து நச். 'சுனை' என்பதனோடு கூட்டுகின்றார். இது நேர்மையாகாது. 'பதிபு' என்பதற்கு இறந்தகாலப் பொருளும் 'ஆங்கு' என்பதற்கு இடப்பொருளும் உரைக்க வேண்டுவதுமில்லை. 'கடிதாகத் தாம் பதிகின்றபொழுது' என இருந்தவாறே உரைக்கலாம். 'கடும்' என்பது இங்கு விரைவின் பொருட்டு. இச்சொல் இங்ஙனம் வினையெச்சப் பொருளில் வருதல் "கடுந் தேறு" என்றும் பதிற்றுப்பத்தடிக்கு (எக : சு) அதனுரையாசிரியர் 'கடிதாகத் தெறுதலையுடைய' என உரை யெழுதியிருத்தலாற் கண்டுகொள்க. 'நிரம்பா நீடு அத்தம்' என்பதில், 'நிரம்பா' என்பதற்கு, 'நெறி மயக்குற்றமையால் வழிக்குரிய இயல்புகள் நிரம்பாத' என்றுரைப்பது சிறப்பு. 'சிறு நனி நீ துஞ்சி எற்பினும்,' சிறிது மிகுதியாக நீ உறங்கி யெழுந்திருப்பினும் எனின், நல்ல உரையாம். இதிற் 'சிறு' என்பது குறிப்பு வினையெச்சம்; வேறு சுற்றுன் வந்தது. 'உரன்' என்றார், வன்னெஞ்சென்றற்கு ; இதனால் தலைவனுக்கு இழிவு பிறந்தது. பண்ணுங் கருவி யென்னுங் கருத்திற் கையை யுணர்த்தும் 'பாணி' யென்னுஞ் சொல் தமிழ்ச் சொல்லேயாயினும், இங்கே, 'நின்பாணி நில்லா' என்பதற்கு 'நின்னளவில் நில்லா' வென உரைத்தலே பொருந்துவதாம். நின் சொல்லளவில் நில்லா வென்பது பொருள். "என் பாணி நில்லில்" (அ : ௫சு) "ஆர்த்தும் பாணியில்" (உம : ௫எ) என்றும் பழைய பரிபாடலடிகளுரையில் இப்பொருள் காண்க. இழிந்த காம மயக்கில் ஆழ்ந்து கூற்றமும் மூப்பும் மறந்தொழிவார்போல லன்றி, அறிவிற் சிறியார்க்கு ஒத்த முறையிற் றோன்றுமாயினும் உண்மையில் அதனினும் மாறுபாடுடையதான உயர்ந்த காதலின்பத்தில், நீ சிறந்து, கூற்றமும் மூப்பும் உண்டென்று கருதிக், காலத்தில் அதன் பயனுகர்தலை முறையாகப் போற்றுவாயாக வென்பது இறுதியடிகளின் கருத்து.

## கஉ.

(க - கூ) 'தேர்,' பேய்த்தேர். 'அறல்,' நீர்; 'அறுதியையுடைய நீர்' என்பர் நச். (கலி. கூ௫ : சு). இதற்கு மணவினின்றும் பிரிந்தொழுகுதலையுடைய நீரென்று கொள்க ; ஊற்று நீரும் இல்லையாயிற்றென்று வெம்மையின் மிகுதி காட்டுதற்கு 'ஊறுநீ ரடங்கலின்' என்றார்.

(கO - கரு) 'அல்லி' யென்றது, இங்குத் தாமரை மலரின் நடுவிலுள்ள கொட்டையைச் சூழ்ந்திருக்கும் பூந்தாதுகள் (சீந். ம: உகம). அவை சேர்ந்த ஆயிதழ்களாவன கடைசி உள்ளிதழ்கள். அவை மிகு மென்மையாயும் மிகச்

செந்நிறமாயும் சிறியவாயுமிருக்குமாகலின், எல்லாந் தோன்ற, ஆய் இதழ்க ளென்பதற்கு அழகிய இதழ்களென்று நச். உரைத்தார். கறுத்தல், தன் னியல்பில் முறுகிக் காட்டுதல்; ஆவது மிகச் சிவத்தலென்க.

(கச - கஎ) 'துலங்கு மான்மேல் ஊர்தி' யென்பதனால் அக்காலத்துக் கட்டில் அமைப்பு அறிந்து இன்புறுதற்குரியது. "துளங்குமான் ஊர்தி" யென்பது (கஅ : சஅ) மணிமேகலை.

(கஅ - உக) 'முழங்கு அழ'லென்றார், 'தெறு தெறு' வென ஒலித்து எரிதலின்.

(உஉ - உஎ) 'கடுங்குரை அருமைய காடு' என்பதிற் 'குரை' இசை நிறை; "பல்குரைத் துன்பங்கள்" (குறள், ௱௫ : ௫) என்னுமிடத்தும் பரிமேலழகர் இங்ஙனமுரைத்தார்.

'நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே' யென்பது, தோழி தானே படைத்துக்கொண்டு கூறியது. "அவருறும் அல்லல் நோய் காண்கஞ் சிறிது" (குறள், புலவி, க) என்று இங்ஙனந் தலைவிக்கும் அவள் நகையாடல் நேர்வித்தலும் நினைவுகூர்தற்குரியது.

கரு.

(க - ௯) 'நீலத்து' என்பதில் 'அத்து' உவமச்சொல். இதனை "அன்ன பிறவும்" (தொல். உவம, கக) என்பதனாற் கொள்க. 'மா', வண்டு; கருமை நிறமுள்ளதென்பது பொருள். 'வார்', நேர்மை; "மாரி வீழ்" என்பதில் வீழ் உவமவுருபு. 'மாரி' யென்றது, சடைத்த கருமுகில். இன்னுங்கு, வருத்தம்; ஒரு சொல்; 'இனிய சொல்லி இன்னுங்குப் பெயர்ப்பது,' ஒரு வழக்குச் சொல்.

(க0 - கக) 'பொருளல்லாற் பொருளுமுண்டோ' வென்பதைச் 'செல் வத்தினும் மதிக்கத்தக்க பிறிதொரு பொருளுமுண்டோ' வெனக் கொள் ளின் இங்குப்பெரிது பொருந்தும்; எளிதாகவுமிருக்கும். மருடல் 'மருளி' யென நின்றதென்பர் பேராசிரியர் (திருச்சிற். கடுக-உரை); மருடல், வெருடல், மீடல் என்பவை மருளி வெருளி மீளி என நிற்குமென்பது அவர் கருத்து.

(கஉ - கரு) 'காதலாரவன் செய்ப பொருளிலாதார்க்கு' என்பதுமோர் வழக்குச் சொல்.

(கச - கரு) 'செம்மையின் இகந்தொரீஇப்......அறியாயோ' என்பது ஓர் அறவுரை. 'செம்மை', இங்கு முறைமை.

(கசு - கக) கவவு, முயக்கம்; கைவிடப் பெறும் என்று பிரித்துக் கொள்க. நிலா, நிலவு என வந்தது போல, அவா 'அவவு' என வந்தது. 'குறி

யதன் இறுதிச் சினை கெட்டுநின்ற' தென்றது (தொல். உயிர்மயங், ௬௨), இறுதி யெழுத்து ஆகாரம் தன் மாத்திரை குறைந்து நின்ற தென்றற்கு.

### ௧௪.

(௧ - ௯) 'சிலை' என்பது ஒரு மரத்தின் பெயர். "வில், மலை, ஓர்மரம், சிராவணமும் (கல்) சிலை" (ஒரு சொற், ௪௯௮) என்பது பிங்கலந்தை. வில் அம் மரத்தாற் செய்யப்படுதலின் அப்பெயர் பெற்றது. புடை, ஒலி; 'இணைப்படை' யென்பதற்கு நச். வல்லமைப்பாடாக உரைத்தார்.

(௧௪ - ௧௭) 'படர்ந்து அற்ற படிவத்தான்' என இருந்தவாறே உரைக்க.

(௨௫-௨௬) 'வளமையோ வைகலுஞ் செயலாகும்' என்பது வழக்குச் சொல்.

'பெருகிய செல்வத்தான்' 'மையற்ற படிவத்தான்' 'மன்னிய புணர்ச்சி யான்' என்பவற்றை முறையே பொருள்வயிற் பிரிவும், ஓதற் பிரிவும், பகைவயிற் பிரிவுங் கருதிக் கூறியதாக உரைப்பின், ஆசிரியர் தொல்காப் பியர் வகுத்த பொருளிலக்கண மரபோடொத்துச் சொற்பொருட் போக் குக்கும் இணக்கமாயிருக்குமென்று கொள்க. கழிந்த நலம் திரும்பத் தாக் கூடுமோ வென்பதே இத் தாழிசைகட்கு ஒத்த பொருள். வினை யொவ் வாமை இவை அகநிலை யொத்தாழிசைகளாகலிற் கொள்க. தொல். செய், ௧௪௨-ன் பே. உரைவிளக்கம் இங்கு நினைவுகூர்தற்குரியது. 'புணர்ச் சியான்' என்பதற்குப் பிறர்நாட்டுப் படர்ந்து நீ பொருந்திய அந்நாட்டுச் சேர்க்கையான் என்பது உரை. அந்நாட்டை வென்று நீ அதற்கு அரசு கூடினமையான் என்க.

### ௧௫.

(௧ - ௪) 'பாடு', படுதல்; கண்படுதலென்க. நச். அதனைத் துயிலென்றார். 'வணங்கு இறை', சிறிது வளைவாயமைந்த முன் கை; இறைகோடு அமைப் பழகு. துன்பத்தை மாற்றி உள்ளக்கிளர்ச்சி தரும் வெற்றியுடையதாகலின், 'ஆடு எழில்' என்றார். நாடுங்கால் அதுவுந்தான் (௪) நுமையவதோ (௮) எனச் செய்யுட்டொடர் கொண்டே இயைத்துரைக்கலாம்.

(௫ - ௮) 'தொல் நலம்', இயற்கை யழகென்றது இனிய உரை. 'துறந் துள்ளார் துன்னி நம் காதலர் துறந்தேகும்' என்பதில் நச். வல்லமையாய்ச் சென்றிருக்கின்றார். எழிலிக்கு இன்னிசை கூறினமையால் அதனை மழை மேகமென்று கொள்க. மழை மேகங்களின் குமுற லொலியிலிருந்து தமிழ் முன்னோர் ஓர் இசை நயம் உணர்தல் அறிந்துகொள்ளுதற்குரியது. 'எழிலி' இங்கு, மழை வழங்கும் ஞாயிறு.

(கூ - கஉ) 'முனை' யென்றமையாற் பகைப்புலஞ் சென்று பொருள் தேடுதலும் பெறப்படும்.

(கங - கரு) 'முதல்', தூறு; அதிலிருந்து வரும் வெப்பத்தை மாற்றித் தருமாறு ஞாயிறு காற்றுத் தரவேண்டுமென்பது கருத்து. 'தீர்ந்து உறுக' என இரு சொற்களாகக் கொள்க.

மழையும் வெயிலும் வளியும் தரும் பொருளென்று ஞாயிற்றைக் குறித்த லின், அம் மூன்றுக்கும் ஏது அதுவாதலை முன்னோர் அறிந்திருந்தமை பெறுதும். 'இரப்பவும், காமுறல், வாழ்த்தவும்' என வருதலால், பிறர் பால் ஒன்று இரத்தலும் விரும்புதலும் ஒன்றுக்காக வாழ்த்தலும் முறை யல்லவென்னும் மிக உயர்ந்த உள்ளப்பான்மை வெளிப்படும். இது சிறந்த நாகரிகமாம்.

(கஎ-உஉ) 'தெருமரல்', எதிர்மறை; 'வறன் ஓடின்' என்பதற்கு வற்கடம் பரவினால் என்பது எளிதான இனிய உரை. 'ஓடுதல்,' விரைந்து பரவுதல்; 'வான் தருங் கற்பினாள்' என்றார், நினது கற்பே மழைதரு மாகலின் அதன் பொருட்டு மழைதரு ஞாயிற்றை வேண்ட வேண்டா என்றற்கு. 'நினக்கு ஒளி கெட்டுப் பசப்பூர்தல் உளதாதல் போல, நின் கற்பின் அறமே, நின் கணவன் ஆள்வினைத் திறமாகிய வழிச்செலவில், அவற்கு இன்னாங்கு செய் யும் பகலவன் வெயிலொளியை விலக்கிற்று (என்றது, அவ் வெயிலொளி யைக் கெடுத்து ஆங்குக் குளிர்ச்சியை ஊரச் செய்யுமாகலின் நீ வருந்த வேண்டுவதின்று; பிற தெய்வம் தொழ வேண்டுவது மின்று) எனத் தோழி தலைவியை ஆற்றினளாக இறுதியடிகட்கு ஓராற்றான் அமைவுதோன்ற உரைப் பினும் ஆம். இதனால் முன்னோரது உள்ளச் செம்மையும், அவரதன் ஆற் றலை உணர்ந்தொழுகியவாறும் விளங்கும். 'அறன்,' கற்பு.

இப்பாட்டுக் கற்பின் சிறப்புக்கு நல்ல இலக்கியமாய் அமைந்துள்ளது.

கிசா.

(க - ௪) புனையவும் ஒடுங்கவும் உயிர்ப்பவும் என்பவை தலைவன் செய லாகக் கொள்க. தனது பிரிவால் தலைவி எவ்வளவு ஊறுகொள்வளென்று தலைவன் அளந்துணர்ந்து நெட்டுயிர்ப்புக் கொண்டமையால், அவனை 'ஊறளந்தவ' ரென்றார். 'நடை செல்லாய்' என்றது, அவன் சொல் வழியே ஒழுகுதல் செய்யாமையை. அஃது இத்துணைக்காலம் இருவென்று விதித்த சொல்.

(கூ - கஉ) 'தொகு பொரு' ளென்பதற்குத் 'திரளும் பொரு' ளென்று தன் வினையிற் பொருளுரைத்தார், தலைவனது காவற்றலைமை தோன்ற. தாம ரையின் இலை, நீர்மேற் படிந்திருக்க அதன் முகை அதனை விட்டு மேற்

கிளம்பி முதிர்தலின், 'இலையைவிட்டு முதிர்ந்த தாமரை முகைக்கு' என நச். உரைத்தார். களவொழுக்கத்தால் இதுகாறும் முதிர்ந்து வந்த காதன்முகை இப்போது திருமணமென்னும் மலர்ச்சி கொள்வதாயிற்று. இது கற்பு; பிரிவுகள் இக் கற்பொழுக்கத்தில் நிகழும். தலைவன் பிரிவும் அப் பிரிவின் ஆற்றாமையால் தலைவிக்கு வாழ்நாட்கேடும் இத் திருமண மலர்ச்சியின் பின் நிகழ்தலால் அம்மலர்ச்சியே அவட்குக் கூற்றும்போலு மென்பது 'முதிர் முகையிற்குக் கூற்று ஊழ்போல்' என்னும் உவமத்தாற் கொள்ளப்படும் பொருள். ஊழ், அலர்ச்சி.

(கரு - கசு) 'வகை,' 'எழில்,' 'வனப்பு' என்னுஞ் சொற்களுக்கு நச். கூறும் உரைமுறை அறிந்து இன்புறற்பாலது. தடம் தலைவியெனவும் அதன் நீர் அவள் இளமையெனவும் முகை அவள் காமமெனவுங் கொள்க. இத்தாழி சையிற் 'பகையறு பயவினை' யெனக் காவற்றொழில் விளக்கமாகக் காட்டப்படுதலால், மேல் இரண்டு தாழிசைகளிலும் வரும் 'வல்வினை வயக்குதல்' 'தோற்றஞ்சால் தொகு பொருள்' என்பனவும் அதுவாகக் கொண்டது உரை. 'வல்வினை' 'தோற்றஞ்சால்' என்னுஞ் சொல்லாற்றல்களும் அவ்வாற்றல்கள் தோன்ற நச். திறமாக விரிக்கும் உரையழகுகளுங் காண்க.

(கள-உக) 'திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய மருந்துபோல்' என்பது ஒரு வழக்குச் சொல். யாக்கையின் நிலைக்கு ஏற்றபடியே மருந்தும் பயன்படுமென்றும், அதுபோற் கேட்பார் உள்ள நிலைக்கு ஏற்பத் திறந் தெரிந்து அளந்து சொல்லுஞ் சொற்கள் அவருள்ளத்திற் சென்று ஆற்றலோடு பயன்பட்டு அவரைத் திருத்தி மகிழ்விக்குமென்றும், நம் முன்னோர் அறிந்திருந்த நாகரிக நுண்ணுணர்வுகள் இப்பகுதியினுற் பெறப்படும். 'மீளி' தலைவன் என்னும் பொருட்டு; இச்சொல்லுக்குத் தலைமைப் பொருளுண்மை புறப்-வெ-மாலையிற் காண்க.

கஎ.

'சூழாது' முன்னிலைக் கிளவி; 'சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது' என்பது ஒரு வழக்குச் சொல்; நச். நல்ல உலகியற் பழக்கத் தோடு இதற்கு உரை விரிக்கின்றார். அது பொருள் வேட்கையுடையோரை நல்ல நெறியில் உய்க்கும். 'ஓராங்கு', சேர. 'உள்நாள்...வாழ்க்கை' யென்னும் அடிகளில் உயர்ந்த காதலன்பை ஆசிரியர் மிகச் சிறந்த ஓவியமாக எழுதிக் காட்டுகின்றார். "உடன் கழிக்கில் இளமை இனிது" என்னும் ஐங்குறுநூற்று (சஉ:கூ) அறிவுரை இங்கு நினைவுகூரற்பாலது. உரையிறுதியில் 'நீ மறந்தாயென்பது, யாம் உணரக் கூறுகின்றனிவனென்பதுபட நின்றமையின் ஒரு பொருணுதலிற்றாயிற்று' என நச். உரைப்பது செய்யுளில் 'நினைத்துக்காண்' என வருதலை நினைந்து.

## கஅ.

(க - சு) 'முதலிற் செவ்விய தீவிய சொல்லி வயமாக்கிப் பின் முயங்கும் போதும் அச்சொற்களோடு பைய முயங்கிய அஞ்ஞான்று' என இருந்த வாறே உரைக்கலாம். 'தலைதந்து' என்பதில் "தலைவந்த இளவேனில்" (சிந். ரு: கஙஎ) என்புழிப்போல உருபுமட்டும் நின்றுணர்த்து மரபு கண்டு கொள்க. பகலவன் முனிதலால் வெஞ்சுரமாதலின், 'பகல் முனி வெஞ்சுர' மென்றார். முனிதலாவது, கடியவெம்மை காட்டுதல். 'மன்ற', அறுதியாக; என்றது தீர்ந்தபடி; தெளிவாக என்னும் பொருட்டு. "வல்லை மன்ற நீ நயந்தளித்தல்" (கூசு) என்பது புறம்.

(எ - கரு) 'பகலின் விளங்கும் செம்மல்' ஒரு வழக்குச்சொல். சிறந்த தலைமைக்கு இதைவிடப் பொருத்தமான உவமை கிடைப்பது அருமை. தலைவனை எதிர்நின்று உரமாக மறுத்தமையால், தோழிக்கு அச்சம் பிறந்த தென்றார்; "உரியதாகுந் தோழிகண் உரனே" (தொல். பொருளி, சஉ) என்பதனாற் கொள்க.

## கக.

(க - சு) பயனுள நிலம் தன்னிடத்துண்டாகும் பல உணவுவளங்களுந் தன் விளையுள்களால் உலகத்தார்க்கு எடுத்துக்காட்டி அவரையுண்பிக்கு மென்று கருத்துக்கொள்க. அத்தகைய நிலத்தின் கொடைச் செயலுக்குக் காரணம் அதன் ஈர நிலைமையாம். அந்த ஈரம் அற, ஞாயிறு சினஞ்சொரி தல் கொடுமையென்க. இயற்கைப் பொருள்களை இருந்தவாறேயும் உரைத்து அங்ஙனம் உரைப்பதிலேயே கேட்பார்க்கு அறிவும் இன்பமும் பெறப்படுமாறு செய்து, அம்முகத்தால் அவரது வாழ்க்கைநெறிக்கு முதன் மையாக ஆவதோர் அறவுரையுங் கொள்ளவைத்தல் எவ்வளவு மாட்சிமை யானது! இவையெல்லாம் பண்டைக் காலத்துச் செந்நாப் புலவர்தம் செவ் வறிவுத் திறமாம். இவ்வளவும் 'பகர்ந்து' என்பதன் ஆற்றலாற் பிறந்தது. நல்ல இலக்கிய அழகுக்கு இத்தொடர்கள் போல்வன சிறந்த எடுத்துக்காட்டு களென்க. வெங்கோடையிலும் பெருங்களிற்றினந் தாங்குதல், மலைக்கு விறல்.

(எ - கக) என் வாழுநாள் நும் ஆகத்து அளியைப் பொருத்ததெனவும், எவ்விளமை நும் நெஞ்சென்னுந் தேறுநீரைப் பொருத்ததெனவுங் கருத்துக் கொள்க. வளி இன்ன இடத்தில் இவ்வளவு காலம் இன்ன ஆற்றலில் இருக்குமென்னும் வரை நில்லாது; அதுபோல் வாழுநாளாதலின், 'வளியி னும் வரை நில்லா வாழுநா' ளென்றார். நலிந்த நிலையாமைக்கு இது நல்ல உவமம். தமிழ்நல்லோரின் ஆழ்ந்த மெய்யுணர்வினை இது காட்டும்.

'இல்லத்தில் மழையுண்டு நீருண்டு நிழலுண்டு; சுரத்தில் அவையில்லை' யென்ற தலைவற்குத் தலைவி, எனக்கு இல்லத்திலிருக்கும் அவையெல்லாம் உண்மையில் மழையும் நீரு நிழலுமாகா. இல்லத்தேயாகட்டும் அல்லது சுரத்தேயாகட்டும் யாண்டும் 'நும் ஆகத்து அளியே அளி, நும் நெஞ்சென்னுந் தேறு நீர்மையே நீர், நும் தாள் நிழலே நிழல்; அவையே என் நிலையா வாழ் நாட்கும் இளமைக்கும் அழகுக்கும் அரண்' என்று கற்பின் பொற்புத் தோன்றக் கூறும் அழகு இத்தாழிசைகளில் நன்கெடுத்துக் காட்டப்படுகின்றது.

(உ0 - உரு) 'களைகழிகல்லாத கல் பிறங்கு' என்றமையால், தமிழகத்தின் செறிந்த மலையடுக்குகள் பெறப்படும். 'பிணையுங் காணிரோ' என்றவின், தலைவி கடைசிவரையில் ஏற்ற விடைகள் கூறிய விரகு கண்டு மகிழ்தற்குரியது.

## உ௰.

'பால்', மருப்பின் நிறத்துக்கு உவமம். பகைப் புலமாதலின் யானைப்படை, வழியைக் காவல் கொண்டு நிற்பதாயிற்று. 'பொருள் வயிற் பிரிதல் வேண்டும்' என்னுந் தொடர்க்கு நச். இடத்துக்கேற்றபடி பொருளுரைக்கும் ஆற்றலை நன்கு புலப்படுத்தியிருக்கின்றார். 'யாவோ வாயின' என்பதைப் பன்மையொருமை மயங்கிற்றாகக் கொள்ளாது, 'அவற்றுள் எவ்வகைச் சொற்கள் உண்மையிடத்தன' எனவே கொள்ளலாம். 'வாய்' உருபன்று; உண்மையென்னும் பொருளில் வருஞ் சொல். "வாயே யாகுதல்" (மணிமே. கூ : கக) என்பதிற் காண்க. 'கிழவர்,' உரியோர். அறிவுங் குணமுமுடைய நல்லோரே உலகத்திற் பொருள் பெறுவதற்குரியராயிருந்தும், அப்பொருள் அதனைக் கருதாத நல்லவரோ அல்லது பொல்லாதவரோ எவரேயாயினும் அவரவர் பழவினைப்படியே மேலு மேலுஞ் சென்று சேருமென்று ஆசிரியர் பொருளின் இயற்கையை இதன்கண் நன்றாய் விளக்கிக் காட்டுகின்றார். சிக்கலில்லாத இத்தெளிந்த கருத்தால், பொருளுக்காக நல்லொழுக்கத்தினின்று வழுவிச் செல்ல வேண்டுவதுமின்று; வழுவாது ஆன நன்மைகள் செய்துகொண்டிருந்தால் மேற்பிறப்புகளிலேனும் அதன் நலன் உண்டாகுமென்பது உணர்த்தியவாறும் என்க.

## உக.

(க - அ) 'முகனும் முகனும் வேறுருதல் பண்டும் இவ்வுலகத்தியற்கை' என இருந்தவாறே உம்மைகள் அமையலாம். 'மாந்திர்' ஒருமை. 'தாய் உயிர்' என்பதில், 'தாய்' தாவியென்னும் பொருட்டு. 'விருப்பத்தோடு உயிர் பெய்த பாவைபோல' என்பது கருத்து. நச். உரைத்ததுபோற் பிரித்துக் கூட்டவேண்டுவதின்று. இவ்வுவமை, தமிழாசிரியரின் மிகக் கூர்ந்த மெய்யுணர்வினை விளங்கக் காட்டும் அழியா அடையாளமாம். 'தாம்

தம் நலம் தாதுதேர் பறவையின் அருந்தி இறல் கொடுக்குங்கால், அதற்கு ஏதுவாயிருக்கும் நின் பொருள்வேட்கையைப்பற்றி ஏதிலார் கூறுவது எவனோ' என ஒரே முடிவாகவே உரைத்துக்கொள்க. தெளிவுக்காக முயன்ற நச். உரைமுயற்சி அதற்கு மாறுவதே பயவாநின்றது.

(கூ - கஎ) திருமண நேரத்து இளமை இல்லறத்தைப் பாராட்டினையே யல்லது அதற்குச் சிறிதுதானும் பிந்திய, இளமை தளர் இல்லறத்தைப் பாராட்டினையோ என்பதே தாழிசைகளின் பொருள். 'நீ நின் தலைவியின் பாற், காமச் செவ்வியை விரும்பினையேயல்லாமல் அவளோடு ஒருங்கிருந்து நடாத்தும் இல்லற விருப்பத்தை விரும்பினையல்லையே' யென்பது கருத்து. மணியன்ன இவ்வழகிய கருத்தே "காமஞ் சான்ற" (தொல். கற், ருக) என் னும் நூற்பாவிற் பெறப்படுவதாம். நச். தாம் வேறு கூறி, அதற்கு இந் நூற்பாவினை எடுத்துக் காட்டப்புகுந்தது, பொருத்தமின்றாயிற்று.

(கஅ - உஉ) 'படர்கூற' 'தொடர்கூர' என்னுஞ் சொல்லழகுகளும், அவற்றை முயற்சியின்றி இயல்பாக நேருமிடங்களில் அமைக்கும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் நோக்கமுந் திறமுங் கண்டுமகிழ்க.

## உஉ.

(க - எ) 'விலங்குகின்ற', குறுக்கிட்டுக் கிடக்கின்ற; இதனால் மலைக் கும் 'விலங்கு' என்பது ஒரு பெயர். 'உண்ணேன்' 'வாழேன்' என்ப வற்றிற்கு இங்கே 'செய்யேன்' என்பது கருத்து. முன்னே 'உண்ணலும்' 'வாழலும்' என்று வந்தமையாலென்க. இங்ஙனம் வாளா செய்கைப் பொருளில் வருவது ஒரோவோரிடத்து அருகியே வரும். "வினையே செய் வது" என்னு நூற்பாவில் (வேற்றுமைமயங். உகூ) 'அன்ன மரபின் இரண் டொடும்' என்பதனால் இது கொள்ளற்பாலது.

(அ - கூ) 'வேள் நீர்' என்பதில் 'வேள்,' வேட்கை; வேட்கையால் நீருண்ட வென்பது. 'குடை,' உள்வளைவாகச் செய்யப்படுங் கருவி; வழிச் செல்வோர், தாம் உண்பதற்குப் பனையோலையால் உள்வளைவாகச் செய்து கொள்ளும் உண்கலத்துக்கும் அது பெயராயிற்று; ஏழைமக்கள் தாம் உண்ணு முன் வெயிலுக்கு அதனைத் தம் தலைமேற் கவித்துக்கொள்ளுதலும் உண்டு. "ஆறு சென்மாக்கள் சோறுபொதி வெண்குடை" (அகம். கஉக) "இரும் பனங் குடையின் மிசையும்" (புறம். களஎ) என்பவை நினைவு கூர்க. 'குடையோர்' முதலியவற்றில் 'ஓர்' ஆராய்ந்து பார் என்னும் பொருட்டு.

(கo - கக) குடியாக ஊரிலிருப்பவ ரென்னும் பொருளில் 'அல்குநர்' என்றார். "புள் அல்குந் துறைவ" (கலி. கஙூ : ரு) என்புழிப்போலத் 'தங்குதல்' என்பது இதன் பொருள்.

(கஉ - கரு) 'குணனுணப் பட்டார்' என்றமையால், மகளிர்பால் அவர் தம் பெண்மைக் குணனே ஆடவரால் நுகரவேண்டுவதென்னும் அழகிய கருத்து வெளிப்படும். மகளிர் தம் உருநலனுங் குணநலனால் அமைவதேயாம் என்பது "குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்" (திருச்சிற். க) என்பதனால் விளக்கமாம். இக்குணநலன் அறிவான் இயன்று என்றும் அழியாததாய்ப் புதுமை காட்டுவதாகலின், இதனாலேயே 'புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும் போகமா' மென்பது. தமிழ் மேன்மக்களின் நுண்ணிய தெளிந்த அழகுணர்வுகள் இவற்றால் 'ஏரியனைய நீர்' போல் தேங்குற்றுத் தெரிதல் கண்டுகொள்க.

உள்ளம் ஊறிநுகர்தலால் தலைவியின் பயன்படு குணங்கள் தலைவனோடு பிணிப்புண்டு தொடர்தலின், பின்னர் வேறு நிலையிற் பயன்படாமை நோக்கித் தாழிசை யுவமைகள் எழுந்தன. இதனானுங் குணனுகர்வு கொள்ளப் படும். 'குடை,' தலைவனியல்பு தலைவியின் நலனோடு பிணிப்புண்டமைக் கும், 'ஊர்,' தலைவியின் குணங்கொண்டு தலைவன் பிரிந்துவிட்ட மைக்கும், 'பூ' அவ்வாற்றால் அவள் பொலிவழிந்தமைக்கும் உவமமாம்.

(கசு - கக) 'கொலைவெங் கொள்கையொடு நாய்' என்று தலைவி தன் னைக் கூறிக்கொண்டது, தலைவனிடமிருந்து தனது நெஞ்சைப் பிரித்தல் 'தீது' என்பது கருதி. 'நின்னாங்கு', நின்னிடம்.

## உங.

'என்னுஞ் சொல்' என்றமையாற் கனவு பொய்யாகாதென்னும் வழக்குப் பெறப்படும். 'இன் தீங் கிளவியாய்' என்பதன் நச். விளக்கம் அழகிது. 'நின் கேள்' என்றது, கிழமை கருதி; (பொருளி. உஎ). நச். கையாறு என்பதற்கு உரைக்கும் விளக்கம் சிறந்தது. 'வெஞ்சுரம் போகி அதன் நடு நின்று தான் தேடும் பொருள் முடிவுபெறும் வரையில்' என இருந்தவாறே உரைத்து இதனை வாளா பொருள்வயிற் பிரிவாகக் கொள்ளு தலே சிறப்பு. 'காத்தோம்ப வல்லுவள்கொல்லோ செய்பொருள் முற்று மளவு என்றார்' எனக் கிடந்தவாறே இயைப்பது ஆற்றலாயிருக்கும். 'துறந் தாரவர்', ஒரு சொல்.

## உச.

(க - கஉ) 'வடமொழிப் பெய' ரென்றது 'திருதராஷ்டிரன்' என் னும் வடமொழிப் பெயரையே எனின் எளிதாயிருக்கும். 'முழங்கு அழலை உயப்போகுவான் போல எழில்வேழம், அம் மலையமுவஞ் சூழ்ந்த புகையழ லாலேயே அதர்பட மிதித்துப் புணர்ந்துபோம், அழலும் வெஞ்சுரம்' என இருந்தபடியே இயைத்துரைத்தால் உரை மிகச் சிறக்கும். 'அம் மலைப்

பரப்பைச் சூழ்ந்த புகையழலால் முன் வழியில்லாத பக்கங்களில் அவை எரிந்து வழியுண்டாக அவ்வாற்றால் அதனை மிதித்துக்கொண்டு போம்' என்பது 'அழுவஞ்சூழ் புகையழல் அதர்பட மிதித்து' என்பதன் உரையாகக் கொள்க. 'எழு' வென்பது இங்கே 'கணைய மரம்' என்னும் ஒரு கருவி. தோற்றமானது, திரட்சியானது என்பவை முறையே இவற்றின் பொருள்; பிற்காலத்தார் 'தண்டாயுதம்' என்பது இதனையே போலும். இறத்திர் ஆயில், இறத்திரால்.

(கரு - கசு) 'புறக்கொடை', புறங்கொடுத்தல்; என்பது புறங்காட்டிப் போதல்; முதுகு பின்காட்டித் திரும்பிப் போதல் என்க; இங்கே எழுந்து போதலென்னும் பொருட்டு; சிலப் ௫: கரு௯ அடியார்க். உரை இங்கு நினைவுகூர்தற்குரியது.

(கஎ - உ0) 'சோர்ந்து அவர் வளன்' என்று பிரித்துக் கொள்க. 'ஒல்கிடத்து', சுருங்குமிடத்து. 'உலப்பு இலா,' தம்மிடத்துள்ளதையும் அவர்க்கு உதவித் தாமும் உடன் சுருங்குதலில்லாத வென்னும் பொருட்டு. 'உலப்பு,' தாமும் உடன் கெடுதல்; அங்ஙனமாயின், "உலந்துழியுலக்கும் நெஞ்சறி துணையாவர்" (புறம். ௬உ௪ : க௪).

'கண், வளை, நுதல் என்பனவே நம்மை அலர் தூற்றுவனவாயிருக்கின்றன வென்று யாநிற் கூறுவதெவனுண்டு? எம்மினு நீ நற்கறிந்தனை' யென்று கொள்க.

## உ௫.

(க - கஉ) மிஞிறு, ஞிமிறென்பதன் நிலைமாறல். ஆனேற்றுக் கொடியோனை இறுதியாக இருத்தியதும், அவனை மட்டும் நச். 'இறைவன்' என்றதும் அவன்றன் முழுமுதற் றலைமையைக் காட்டின. ஞாயிறும் காமனும் சாமனும் சிவபிரானும் செந்நிறத்தின் பல வேறுபாடுகட்கு உவமம். 'மேதக', மேன்மைதக வென்பதன்றிரிபு. வழங்குவார்க்கு எளிமை கருதி இங்ஙனமெல்லாம் அருளோடு ஆசிரியன்மார் சொற்களை ஆக்கிக் கொண்டனரென்க. 'இளவேனில் மேன்மை பொருந்த வந்தது' என்றலே சிறப்பு; கலி. உகூ-ன் தரவு இறுதியிற்போல. 'கூடியிருந்தார்க்கு' என்றொன்றுரைத்து மேன்மையை அவர்க்கேற்றுவது வலித்துரைத்தலாம்.

(கங - கசு) 'திருமருத முன்றுறை' வையை யாற்றின்கண்ணது; மருதமரங்களோங்கிய விரிமலர்ச் சோலையும் அகன்ற மணற்றிட்டும் அமைந்த இனிய துறை. நீர் விளையாட்டு, பொழில் விளையாட்டு, மணல் விளையாட்டு முதலிய இன்ப விளையாட்டுகட்குரியது. "வருபுனல் வையை வார்மணல் அகன்றுறைத் திருமருது ஓங்கிய விரிமலர்க்காவின் நறுமலர்க் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு வதுவை அயர்ந்தனை என்ப" என வரும் அகநானூற்

றடிகள் (ருசு : கூ-கஉ) இதனை நன்கு விளக்கும். 'நசை,' நச்சுதலால் வந்த பெயர்.

(கஎ - உ0) 'பொழுதொடு' என்பதில் மூன்றுவதனுருபு ஏழாவதனோடு மயங்கிற்று.

(உக - உச) 'வாய்மொழித் தூது' என்றது இளவேனிற் காலத்தை; இக்காலத்தில் வருவேன் என்று தலைவன் கூறிய மெய்ம்மொழியை யுடையதாகலின் என்க.

உ௲.

(க - அ) 'குறை' 'அறல்' 'நீது' 'நீம்' முதலிய சொற்களுக்கு இடத்துக்கேற்றபடி நச். உரைக்கும் உரைமுறை அறிந்து இன்புறுக. 'நந்த,' தழைக்க; இச்சொல் பழைய இலக்கியங்களில், விளங்குதல், தழைத்தல் அழகு பெறுதல், மிகுதல், நிறைதல் முதலான ஆக்கக் கருத்திலேயே பெரும்பான்மையும் பயின்றுவருகின்றன. இக் கலித்தொகையிலும் பல விடங்களில் இந் நற் பொருள்களில் வரும். "பெரும்புனல் பல நந்த, நலன் நந்த, நாடு அணி நந்த, புலன் நந்த, வந்தன்று வையைப் புனல்" என்னும் அழகிய பரிபாடலடிகளுக்கு (எ : அ-ம) உரையாசிரியர் பரிமேலழகர் இச்சொல்லின் பல்வேறு பொருள் வழக்குகளும் விளங்கும்படி, "சேரும் புனல் பலவற்றோடுங் கூடிப் பெருகுதலால், வையைப் புனல், உயிர்கட்கு நன்மை மிக, மென் புலங்கள் அழகுபெற, வன்புலங்கள் விளைய வந்தது" எனத் திறந்தோன்ற உரைத்து விளக்கினமை இங்குப் பெரிதும் நினைவுகூர்தற்குரியது. 'கழல்புகு' என்னும் பாடம் சிறந்தது. 'கழல்பு உகு' எனப் பிரித்து பொருள் தரும். நச். வேறு சொல் வருவிக்க வேண்டுவதில்லை.

(கூ - கஉ) குயிலுக்கு இளவேனில் மகிழ்ச்சியான காலமாதலின், அஞ்ஞான்று தலைவன் பிரிவாற்றாமையாற் பொலிவு குன்றி மகிழ்ச்சியின்றியிருந்த தலைவியை அஃது எள்ளுவதுபோற் கூறினர். 'புலம் பூத்துப் புகழ்த' லென்பது உயர்ந்த கருத்துவளமுள்ளது. கூடல் - மதுரை.

(கரு - கசு) முன்னும் பின்னும் பரத்தையர் கூறப்படுதலால், வென் வேலான் குன்றுக்கும் அவர், உரையில் எடுத்துக்காட்டப்பட்டனர்.

(கஎ - உ0) 'தைஇய' என்பதற்குக் கோலஞ் செய்தலையுடைய என நச். உரைப்பர். 'தையல்' எனப் பெண்களையுணர்த்திவருஞ் சொல்லுக்குங் 'கோலஞ் செயதலையுடையா' ரென்னும் அப்பொருளே பொருந்தும்.

'நம்மையோ மறக்கட்டும்; அவர் இளவேனிற் காலங்களிற் பரத்தையருடன் விளையாடும் நகர்விளையாட்டு மலைவிளையாட்டு துறைவிளையாட்டேனும் விரும்பி வாராகாதா?' எனத் தலைவி வருந்திக் கூறியதாகத் தாழிசைக் கருத்துகள் வந்தன.

(உக - உ௬) 'நாமில்லாப் புலம்பாயின்......கலங்குவள் பெரிது' என்பது தலைவன் நினைவு. 'கடுந் திண் தேர்' என்பதிற் 'கடுமை' விரைவுக்கு; "பாய் திண்டேர்" (கலி. ௩௧:௧௭) என்பது நினைவு கூர்க.

## உ௭.

(௧ - ௧௧) 'ஏனையிடங்களிலுள்ள சினைப்பூக்களையும் சுனைப்பூக்களையும் நீங்கள் நாடிச் சென்று கொயல்வேண்டாம்; நீங்களிருக்குமிடந் தாழ்ந்து நாங்களே இங்கு நயந்து கொடுப்போம் என்பனபோல், தம்மைத் தொடுத்துப் புனையும் மாதர்கட்குக் கமழ் கண்ணிகள் திரட்சியுறத் தாழ்ந்து துறை தொறுந் துறைதொறும் அழகுபெற' என இருந்தபடியே உரைப்பது நச். கருத்துகட்கும் மாறில்லை; மாட்சிமையாகவுமிருக்கும். 'கண்ணிகள் தாழ்ந்து துறைதுறை கவின்பெற' எனக் கொள்க. 'கண்ணி' கூறினமையான் அவையுள்ள மரங்கள் தாமே பெறப்படும். மேலும், "பிறங்கிணர்த் துருத்தி" (கலி, ௩௰:௧௬) யென மரமின்றி இணர்மட்டுங் கூறப்படுதல் காண்க. 'கண்ணி', இங்கே பூங்கொத்துகள்; 'திரட்சியுற' வென்னுங் கருத்துப் பூங்கொத்துகட்குக் கூறுதலே சிறக்கும். 'சினையவும்' 'சுனையவும்' என்னும் அமைப்பழகை நச். எப்படியோ மனம் வந்து சிதைக்கின்றார்; அஃதவர்க்கு நன்றாகாது. 'நயந்து தாமே தம்மைக் கொடுப்பபோல் தாழ்ந்து அழகுபெற' வென்க. தாமும் பாடல்சால் சிறப்பினவேயென்பது குறிப்பு. அறலுக்குக் கதுப்பும் துவர்மணலுக்குத் தொய்யகமும் உவமம்.

(௧உ - ௧௫) 'மதலை', பற்றுக்கோடு.

(௧௬ - ௧௧) 'பாயல் நோய்', துயில் தொடர்பான நோய்; என்றது, துயிலாமையான் ஆகும் நோய்.

இந்நேரத்துந் தலைவர் நினையாராயின் பின் நமக்கு அவர் செய்யும் அளி என்பதுதான் என்னையோவென்பது தாழிசைகளின் கருத்து. 'அளி', அன்பு.

## உ௮.

(௧ - ௬.) 'கிடக்கை' யென்றது, நிலையை; "கேள்விக் கிடக்கையின்" (சிலப். ௩:௮௬) என்பதிற்போல. தனது குடிக்கு மகவீன்று அதனால் தனது எழில் குலைந்தவள் தனது புனிறு தீர்ந்து மீண்டும் புதுநலம் பெறுகின்ற நிலைமைபோலக், குடிகட்கு உணவுப்பொருள்கள் விளைந்து கொடுத்து அதனால் தனது பசுமைச் சாயல் நிலைகுலைந்த ஞாலம் தனது புனிறு தீர்ந்து மீண்டும் இளவேனிற் புதுநலம் எழுச்சிபெற என்பது. உவமச் சிறப்புக்கு இன்புறுக. இளவேனிற் பருவம் நிலத்தின் எழில் காட்டுதலும் பனிப்பருவம் ஈன்றவள் கிடக்கைபோல் அவ்வெழில் குன்றிக் காட்டுதலுங் கருதுக. 'வளையவர்', சில்வளையலிடும் பருவத்தவர்; இன்னோரை ஆடல் முதலிய துறைக்

குரியாராகப் பதிற்றுப்பத்துரையுங் (ருஎ.சு) கூறுதல் காண்க. மாவின் மிக இளைய தளிர் வெண்ணிறமாகவேயிருத்தலின், அதன்மே லுதிரும் வெண்ணிறத் தாதுகள் விளங்கித் தெரியமாட்டாவென்று கருதிச் 'சிறிது முற்றின தளிரின்மேலே' யென்று நச். விழிப்பாய் உரைத்தது அறிந்து மகிழற்பாலது.

முன்னமே துறந்தாரானமையின் அச்சொல்லுக்கு 'மறந்தா' ரென்றார். 'கொண்ட', பயனிலையுவமத்துக்குச் சிறுபான்மை வருமென்பது பேரா சிரியர் கருத்து (உவம, சச-உரை).

(கஅ - உக) 'வடு நீங்கு கிளவி' யென்றுந் தமிழ்வழக்கு முன்னோர் மாட்சிமை காட்டும். 'வலிப்பென்', துணிவேன்; 'நெடு நிலா வாய்விட்ட' என்றியைக்க; வாய் விட்ட: வாய் விடுக்க, அலர்த்த.

(உரு - உசு) 'பொருட்பிணி,' பொருட்டொடர்பு; பிணித்துக் கொண் டமையின் வந்த பெயர்.

## உகூ.

(க - ச) 'தாது,' தேன்; "நுண்தாது உறைக்கும்" (பட். : கருஉ) என்பதிற் போல.

(ரு - அ) 'தொழுவை', மடு.

(கூ -கஉ ) 'பானாள்,' இராப்பொழுதின் நடுப் பகுதி; நள்ளிரா.

(கரு - கசு) 'உயர்ந்தவன்,' காமவின்பந்துக்கென்க. 'இணர்த் துருத்தி' யென்றமையாற் பொழில் கொள்க.

கூறுவாருளராயின், நமக்காக வாராதொழினும் நம்மை மறந்து, பரத்தை யருடனேனும் புனலும் நகரும் பொழிலும் விளையாடியமையாவென வருந் தியது, தாழிசைக் கருத்தென்க. இதனைப் "பகுதிகந்து நுகர்தலும்" (குற்பி. ருயி) என்பதனாற் கொள்க. தலைவன் காமக்கிழத்தியரோடு பகுதிகந்து நுகர்தலே பெரும்பான்மை என்னும் உரை. அதற்கு இப் பாட்டுகள் போல்வன இலக்கியமாம்.

## ௩௦.

(க - அ) 'ஈங்கை,' இதனை 'இண்டைக் கொடி' யெனவுங் கூறுப. அடர்ந்து புதலாயிருக்கும்; கொடி வெண்ணிறமாயிருக்கும்; "வெண் கொடி ஈங்கைப் பைம்புதல்" என்பது (சசு : சு) ஐங்குறுநூறு. 'வாடு' ஆகுபெயர். 'புதி தீனக் கலக்குறூஉம் பொழுது புணர்ந்தவருரைத்தது' என முடிப்பின் சிறக்கும். பனியும் வாடையும் இறந்துபாடு கூட்ட, நம்மை மேலுங் கலக்கி அவ்விறந்துபாட்டை விளைவித்துவிடும் இளவேனிற்

பொழுதென்பது கருத்து. பனி பின்பனி யெனவும், வாடை முன்பனிக் காலத்து வாடையெனவும் நச். உரைத்தார். ஆகவே, பின்பனிப் பருவத்துக்கு மேல் நின்ற முன்பனிப் பருவத்து வாடை யென்பதே 'மேனின்ற' வென்பதன் பொருளாகக் கொள்க. 'கூர்ந்த', வளர்ந்த. நிலவின் கதிர்கள் உணவுப் பொருள்களின் விளைவுக்குக் காரணமாயிருக்குமென்பது கருத்திருத்துதற்குரியது.

(கரு - கசு) 'தாள்,' முயற்சி; 'துவற்றல்', தூவல்; "துவலை துவற்றலின்" (மலைபடு. ௩சுௐ) காண்க.

தாழிசைகள் தலைவன் பகைவயிற் பிரிவை யுணர்த்தின. தலைவன் வரும் இளவேனிற் காலம் வரையில், இடையேயுள்ள இவ் வாடையும் சின்மழையும் கடும் பனியும் நம்மை உயிர் வாழவிடுமோ எனத் தலைவி கூறியவாறென்க. தலைவனது வெற்றியழகைத் தலைவி நுகரவிரும்பினமை தெரிதலின், ஆடவரின் வெற்றி யுள்ளத்துக்கும் மகளிரின் பெண்மையுணர்வுக்கும் உள்ள அவாவிய தொடர்பு நன்கு விளங்கும். இதனானன்றே எம்மொழியிலக்கியங்களும் போரையுங் காதலையுமே பொருளாகக் கொண்டன வென்பது. இவ்விரண்டும் முறையே மலப் போரின் சார்பாகவும் இறைவன் நேயத்தின் சார்பாகவும் உலகியலில் வெளிப்படுவன வெனவுங் கூறுப.

(உக - உரு) 'சொல்லிய பொய்யாதலன்றி முன்னமே புகுதந்தா'ரென்பதே இயல்பானது. குறித்த பருவத்துக்கு அணித்தாகச் சற்றுமுன் வந்தமையின், 'சொல்லிய பொய்யன்றி' யென்றார். 'உருவு வெளிப்படுதலின் இவளென்ற' னென்று உரையில் வந்தது நுட்பமானது. இதனால் தலைவன் தலைவியரின் திண்மையுணர்வுகளும் நன்கு வெளிப்படும்.

## ௩௧

(க-ரு) 'எஃகு இடை தொட்ட' என்றமையால், மிகப் பழைய காலத்திலிருந்தே மகளிர் தமது கூந்தல் நேரொக்க இருக்கும்பொருட்டுங், கடைகுழன்று வளரும்பொருட்டும் நுனிமயிர் கத்தரிக்கும் வழக்கமுண்டென்பது பெறுதும். 'இடை' யென்றது, இடைக்காலத்தை. கூந்தலைப் பலவாறும் போற்றி மகிழு நாகரிக முறைகள் இந்நூலிற் பலபடியாக விளக்கப்பட்டிருக்கின்றன. துவர் மணலது என முடித்து மேல் 'அது' வென்பதை 'அ' என்னும் சுட்டுப் பொருட்டாகக் கொண்டு 'அவ் ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீளம்பால்' என இருந்தவாறே இயைத்துக்கொள்க. அலரும் பூவும் வெறிகொள.

(சு - கரு) 'நகை,' ஒளி. 'ஈகை', பொன்; ஒருவர்க்கு ஒன்று கொடுத்தலென்றற் பொன் கொடுத்தலென்னுந் தமிழ்நாட்டுச் செழிப்பு நிலையிலிருந்து இதற்கு இப்பெயர் வந்தது. 'வெறிகொள, அணிபெறத் தளிர் முதலியவற்

றோடு வரும் இளவேனில்! எம்போல நயந்தார்க்கோ நல்லை' என இருந்த படியே தொடர்ந்து, 'வரும்' என இடையே ஒருசொல் கொடுத்து முடிக்க. அணிபெறல் இளவேனிற் பருவமெனக் கொள்க; இது சிறக்கும். நடக்கம், கூத்து.

(கசா - கக) 'எயிறேய்க்குங்...கமழ்குரற்கு' என்பது தலைவன் சொல்லி விட்ட சொல்லாகக்கொண்டு அதனை நமக்குச் சொல்லுந் தூது வந்தது என் றாளாகக் கொள்க. எனவே, 'காதலரது என்னுந் தூது' என இயல்பாகக் கூட்டலா மென்பது. நாம் துயரறு கிளவியோடு அதனை வரவேற்று விருந்து செய்வோ மென்பது இறுதியடியின் கருத்தாகக் கொள்வது நல்லது.

௩உ

(க - கூ) 'வயங்கல்', பளிங்கு. 'உண்கண்' என்பதற்கு 'மையுண்கண்' என உரைகளில் உரைக்கப்படுவதினும் 'கவருங் கண்' என உரைப்பது இன்னுஞ் சிறக்கும்; கண்டாருள்ளத்தைக் கவருங் கண்கள் என்பது கருத்து. வினையெல்லாவற்றினுங் கண்கட்கே அவ்வியல்பு சிறத்தலி னென்க.

(க௦ - கடு) 'உறழ' 'என' என்னும் உருபுகள் உருவுவமத்தின்கண் வருதல் சிறுவரவின. 'எள்ளரி முனிய' எனவே கொள்க. அங்ஙனங் கொண்டு 'போலும்' இரண்டையுமே வினையாக வைத்துரைப்பின் இயல்பா யிருக்கும்.

(உஉ - உடு) 'நோதக' வென்பது 'நோவுதக' வென உகரம் பெறாமல் வந்தது.

(உகூ - ௩க) 'பிணி,' பின்னல். 'துனே,' துனேதலை;

௩௩

(க - எ) 'ஏமுற', உயிர்வாழ; 'சின்னீர்' என்றது நீர்க்கால்களை. 'இறுதி' யென்பதற்கு நச். உரைத்த உரை மிகச் சிறந்தது. 'பெயர்த் தாற்றுதல்', திருப்பிச் செய்தல். 'பீடுடையாள' ரென்பதை ஒரு சொல் லாகவே கொள்க. நச். அதனைச் சிதைத்துரைத்தமையாற் பெரும்பய னொன்றுமில்லை.

(அ-கக) மரம் பாவத்திற் கஞ்சிக் கவின் வாடிற்றென்பதினும் பார்க்கக், கரி பொய்த்தானது கொடுமை அவன் நின்ற மரத்தையுஞ் சார அதனால் அது கவின் வாடிற்றென்றுரைப்பின் இயல்பாயிருக்கும். 'பொத்தி', மூண் டெரிந்து.

(கஉ - கடு) 'சிதர்', வண்டு; பூந்தாதுகளைச் சிதர்த்தலால் வந்த பெயர். சிதர்த்தல், சிந்துதல்.

(கசு - கக) 'கொளை', கோட்பாடு; ஐ, கொலை யென்பதிற்போல ஒரு தொழிற்பெயர் விகுதி. "கொளை நடை அந்தணிர்" (க : ச) என முன்னும் வந்தது.

'கரி பொய்த்தான்,' 'முறை தளர்ந்த மன்னவன்,' 'இளையழிய வாழ்ப வன்' என்பது பிரிந்த தலைமகனுக்கும் ஒக்கும்; களவில் தோழி சான்றாகப் பிரியே னென்றவன் அது பொய்த்தமையானும், இளமைச் செவ்வி கருதாது பிரிந்தமையானும், தலைவி வருந்தத் தலைவன் தனது செயலின் இன்புறுத லானுமென்க.

(உ0 - உச) 'பண்ணிய மா' ஆயத்தஞ் செய்யப்பட்ட குதிரை. "நுகம் பூட்டிப் புரவிபண்ணித் தேர்ப்பண் ணமைத்து" என்பது (உ : ருசு) சிந்தா மணி. இங்கே, தேரிற் பூட்டி முன்னமே ஆயத்தஞ் செய்யப்பட்டிருந்த எனக்கொள்க. 'கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கு', ஒரு வழக்குமொழி. 'பூசல்', துன்பம். "களையாப் பூசல்" (பதிற். சச : கஉ) என்பதிற்போல.

ருச

(க-அ) 'படி,' படிக்கட்டளை; அது, மேம்பாடு கருதி மனமுவர்ந்து ஏற் பாடு செய்யும் உணவுத் திட்டம் முதலாயின. 'தாய', பரந்த; 'மணி', பளிங்கு.

(கூ - கஉ) 'நிலா,' எச்சப்பொருட்டு. 'தாதுண்ணும் பொழுதன்றோ நமக்கவர் வருதுமென்றுரைத்தது' என்க.

(கரு - கசு) தலைவி கூற்றாதலின், 'மகிழ்துணை,' பரத்தையரை யுணர்த் திற்று.

தலைவன் வினைமேற் செல்லுங்காற் கிழத்தி, 'வலனுக வினை' யென்று வாழ்த்தி வணங்கி வழிவிடுவதென்பது, தலைவன் செயலில் தலைவிக்கு உள்ள கருத்தொருமையையும் அன்பையும் நன்கு காட்டும். அன்பில் அளைந்து வரும் அச்சொற்கள் தமது பயனை உறுதியாய்க் கூட்டுவிக்கு மென்பதில் அவற்கும் அவளுக்குமிருந்த நம்பிக்கையும் இதனால் நன்கு விளங்குமென்க.

(கஎ - உ0) 'நிலன்', ஆகுபெயர். 'புலன் நாவிற் பிறந்த சொற் புதி துண்ணும்பொழுது' என்பது, பண்டைக் காலத்துத் தமிழ்ப் பெருமக்கள், புலவர் பெருமக்களின் அறிவிலும் அன்பிலும் அருளிலுந் தோய்ந்தெழுந்த அழகிய பாட்டுகளின் அரும்பொருள்களும் நயங்களுங் கேட்டு நுகர்தலைக், கடமையோடு ஓர் இன்பச் செயலாக விரும்பி மேற்கொண்டிருந்தன ரென் பதும், அதற்காக இளவேனிற் காலத்தில் மதுரை முதலான திருப்பதிகளில் விழாப்பேரவைகள் கூட்டிக் கொண்டாட்டுகள் அயர்ந்து வந்தனரென்பதும் விளக்கும். 'புதிது', பாட்டுக்களின் புதுமை; என்றது, அச் சான்றோர்

களாற் புதிது புதிதாகக் கண்டுணரப்பட்டு அறிவுக்கு விருந்தாயுள்ள வியத்தற்குரிய கருத்துகளென்க.

(உ0 - உ௫) 'உயிர்ப்பாகி', நெட்டுயிர்ப்பெறிந்து; வருந்தி யென்க. வருத்த மிகுதியாற் களைதோன்றுதலின், நச். அச்சொல்லுக்கு 'இளைப்பாறுதலாகி' யென்றுரைத்தார். இயை, இயைதலை; பொருப்பன் வாய்மை, கேள்வி சான்றது. 'காதலர்' என்னும் வினைமுதல் வேறிருத்தலால், 'பொருப்பன்', பாண்டியனெனவே உரைக்கற்பாற்று.

௩௫

(க - கக) வெண்கடம்பு, நம்பி மூத்தபிரான் வெண்ணிற உடம்புக்கும், அக்கடம்பின் கிளைகளில் மாலைபோல் தங்கிநிற்கும் பசிய மயில்கள் அவன் மார்பின் பசிய துழாய்மாலைக்குங் கொள்க. 'சீரவாய்ப் பெருந்துறை கவின் பெற வேனில் எதிர்கொள்ளுஞ் செவ்வியும் வந்தன்று' என்க. சீரவாய் என்பதற்குப் பெருந்துறை, வினைமுதல். பாடுமுன் விரல்களாற்றடவிக் குரல் பொருந்த ஆராய்ந்துகொள்ளப்பட்ட நரம்பென்றற்கு 'வடிநரம்' பென்றார். வடித்தலாவது, ஆராய்தல். இசைச் செயல்கள் எட்டனுள் 'வடித்த' லென்பதும் ஒன்றெனவும், அது, 'சுட்டுவிரலும் பெரு விரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்த' லெனவும் சிலப்பதிகாரத்திலும் அதனுரையிலும் (கானல்வ. கஉ-டு) வருதல் இங்கு நினைவுகூர்தற்குரியது. வண்டொடு சுரும்பை யாழாகவும், தும்பியை விறலியாகவும், தேனினங்களை ஏனை வாச்சியங்களாகவுங் கொண்டு ஆசிரியர் இங்கே ஓர் இசையரங்கு அமைத்தமை அறிந்து மகிழ்க. அலர்தல், புன்னகை கொள்ளுதல்போல, அங்ஙனங் கொள்ளுதலே விளிப்பபோன்றது. 'குழவி', இளமைக்கு; "கொள்ளவும் அமையும்" (மாபி, உச) என்னும் உம்மையாற் கொள்க. 'செவ்வி', நல்ல நேரம்.

(கஉ - க௩) 'சாஅய்ச் சாஅய்' என்பதன் உரையில் 'ஒழுக' வென்றது, சிறிது சிறிதாக என்றற்கு; 'தொடர்பாக' என்பது பொருள்;

(கச - க௫) 'வெய்ய', விரைவாக.

(க௬ - கஎ) 'வரல் நசைஇ' யெனக்கொண்டு, வருதலை விரும்புதலால் என உரைப்பதே உரை. "வரனசைஇ இன்னுமுளேன்" (குறள், கஉஎ : ௩) என்றார் பிறரும். இதன் கண்ணும் எச்சம் காரணப்பொருளில் வந்தது. 'இடை', இடமென்னும் பொருட்டாதலின், எல்லாம் என்றார். காதலர்க்கு நெஞ்சு ஆகத்தின்கண் விரையுமாகலின் அங்ஙனங் கூறினாரென்று கொள்க.

பாலைக்கலி—உரை விளக்கம்

முற்றும்

## உ. குறிஞ்சிக்கலி

### க

சிறந்தானென்று காட்டுதற்குத் 'தொடை மாண்ட' என்றார். "புரவலன்போலுந் தோற்றம் உறழ்கொள" என்றார் பிறரும் (அகம். சூஉ). 'சேயேன் மன்' என்பது முன்பின் அறியாமை காட்டிற்று. அங்ஙனம் அறியாதேனை யானும் அவன் நோய்க்குத் துயருழப்பே னென்றாள், முன் கூட்டமுடைய தலைவி இன்னுந் துயருழந்து காட்டுமென்றற்கு. தலைவிக்கு இதனால் அருளென்னும் மெய்ப்பாடு பிறந்தது. முதலில் இம் மெய்ப்பாடு தோன்றத் தோழி உரைத்துக்கொண்டமை, பின் தனது படைத்துமொழி கிளவியால் தலைவிக்கு நாண்மிக்கு ஊறுநேராமைப் பொருட்டென்க. தோழிக்கு இவ் வறிவுத்திறன் பெரிதுமுண்டு. 'கண் நின்று,' இது சொல்தொக உருபு நின்ற மரபு; முன்னும் வந்தது (கலி. கக : ச). பெண், பெண்மை. கிளிகள் திரள் திரளாய் வருதலால் 'இனக்கிளி' என்றார். 'கடிந்து' என்பதற்கு நச். 'விழாமல் ஓட்டி' யென்றது, நல்ல உரை. கிளிக்கு ஊறில்லாதபடி மகளிர் ஓட்டுவரென்னும் அருட்டன்மை பெறப்பட்டது. ஊக்கி, ஊக்குவாயாக; முன்னிலைக் கிளவியில் இகரம் இங்ஙனங் ககரம்பெற்று ஏவற்பொருண்மையில் வருவது சிறுபான்மையாகும்; ஆட்டுவாயாக என்பது பொருள். "ஊசல் கடுவன் ஊக்குவது" (மணிமே. கக: எகூ-அ) என்பது காண்க. பொய்யாக வீழ்ந்தே னென்றமையால் அஃது அறமன்றாயினும் அமைவதாயிற்று. 'செத்து' கருதியென்னும் பொருட்டாதல், "புதுமுகை ஊன் செத்து" (மலைபடு. கசசு) என்பதனுரையாலும் பெறப்படும். 'செல்கெனக் கூறிவிடும் பண்பின் அங்கணுடையனவன்' எனத் தலைவனது நல்லியல்பையும் தோழி விழிப்பாய்க் கூறினாள், தலைவி அவன்பால் ஏதும் ஐயுறவு கொண்டு வருந்தாமைப் பொருட்டு. தோழியின் இப்படைத்துமொழி கிளவிகளால், தலைவி இங்ஙனமே தன் தலைவன்பால் முன் நடந்துகொண்ட மறை அவள் நாணி நிற்றலாற் புலப்படுமாகலின், அதுவே இதன் பயன் என்பது. இது போல்வன 'நாணநாட்டம்' என்க.

### உ

(க - கூ) 'இமைய வில்' என்பதற்கு நச். உரைத்த உரை இயற்கைப் பொருளறிவோடு கூடியதேயாயினும், அஃது ஆசிரியர் கருத்தன்று. 'ஐயிரு தலையின் அரக்கர் கோமான்' என இயற்கை நிலைக்கு மாறான தொன்றும் அது தழுவிய கதையும் மேல்வருதலின் என்க. ஆகவே ஆசிரியர், ஓர் உருவகக் கதையையே இங்கெடுத்துக்காட்டுங் குறிப்பினராவரெனக் கொண்டு

அதற்கேற்ப உரைத்து விளக்குதலே பொருந்தும். 'தொடி', வீரவளை; தோட்பக்கம் அணியப்பெறுவது. 'உறுபுலி', உள்ளத்தின் மிகுதியை யுடைய புலி. 'விடரகம்', மலையின் பிளவிடங்கள். 'கோடு புய்க்கல்லாது உழத்தல்,' கறுவெண்ணத்தால் அவ்வேங்கையைக் கிழித்தள்ளி யல்லது பெயர மனமில்லாமையின் என்க.

(௧௦ - ௧௫) 'இடை', இடம். 'புல்லென்றாள்', புன்மை யெனப் பட்டாள்; பொலி வழிந்தனள் என்பது கருத்து; இங்கு வினைப்பெயர். 'அக் கவின் தீராமற் காப்பதோர் திற'னுவது, வரைந்து கோடல். மேல், தாழி சைகளில் வருதலும் அது. எனவே, நச். 'பொருளொன்றது ஆகுபெயர்' என்று மூன்றாந் தாழிசை உரை யிறுதியிற் கூறினரென்க.

(௧௬ - ௧௭) 'அவ்வணி தெருளாமற் காப்பதோர் திறன்' என்பதற்கு அவ்வழகை நின் கூட்டத்தாலானதெனப் பிறர் தெரிந்துகொள்ளாதபடி காப்பதொரு திறன் என்று உரைத்துக்கொள்க.

(௧௮ - ௨௧) 'மறம் திருந்தார்' என்று நச். இடத்துக்கேற்றபடி வல்ல மையாய்ப் பிரித்துரைத்தார். நாள் முழுதும் செய்யவேண்டிய வேலையை அன்று காலையிலேயே இன்னின்னபடி செய்யவேண்டும் என்று வகை தொகையாக ஒழுங்குபடுத்திக்கொண்டு பின் பணிமேற் சேறல் நல்ல ஆக்கந் தருமாகலின், 'திறஞ் சேர்ந்தான் ஆக்கம்போல்' என்றார். அங்ஙனம் ஒழுங்குபடுத்தும் எண்ணத்தை என்றும் வைகறை நேரத்திற் கொள்வது நல்லதெனப் பொதுவாகவும் கொள்க. 'திறனறிந்து தீதின்றிவந்த பொருள்' (௭௫ : ௪) என்பது திருக்குறள்.

தாழிசைகளின் முதலுவமைகள் மூன்றும் பொலிவழிதற்கும் பயனின் மைக்கும் வந்தன. எதற்கும் அழகும் கிளர்ச்சியும் ஆக்கமும் உண்டாதல் பொதுவாக வைகறை நேரத்திற் சிறத்தலின், மூன்றிடங்களிலும் வைகறை கூறப்பட்டது.

(௨௨ - ௨௫) 'விரிவிடம்' என்பதில் இடம் காலங்குறித்தது. இடப் பொருள் காலத்தொடு மயங்கிற்று என்பர் பிறரும் (சிலப். ௪ : ௧௧; அடி யார்க்குநல். உரை) வேங்கைமரம் குறிப்பிட்ட நல்ல நாளில் மலருமாதலின், அந்நன்னாளில் தலைவன் வரைந்து கொள்வதற்கு ஏற்பாடு நடைபெறும். குறித்த நன்னாளில் மலர்ந்து ஒரு கோள்நூல்வல்லான்போற் றிகழ்தலால், வேங்கையைக் 'கணி' யெனவுங் கூறுப. "பன்னாளு நின்றவிடத்துங் கணி வேங்கை நன்னாளே நாடி மலர்தலால்" (பழமொ. ௧௨௰), "மன்ற வேங்கை மணநாட் பூத்த" (அகநா. ௨) என்பவை இங்கு நினைவு கூரற்பாலன. 'வரைந்தனன் கொளற்கே', ஒரு சொற்பொருட்டு.

௫

(க - ௬) 'கடும் புனல்' : மிக்க புனல். 'தாமரைக் கண்' என்றார், புணர்ச்சி நேருங் குறிப்புத் தோன்ற. "கண்ணகி கருங்கணும் மாதவி செங் கணும்" (சிலப். ௫: உ௩௭) "மாமலர் நெடுங்கண் மாதவி" (சிலப். ௩:க௭௰) என்பவற்றின் உரைகள் காண்க. நொடிப் பொழுதில் ஓடிப் பாய்தலால், மார்பில் மாலை தயங்குவதாயிற்று. காமக் குறிப்போடெனை ஐயுறாமைப் பொருட்டு 'அருளினு' லென்றார். இது பயன் குறித்ததன்றாகலின், உதவி யாயிற்று. 'வருமுலை' யென்றது, முன்பு புணராமை தோன்றநின்றது. 'புணர்ந்து ஆரா மென்முலை" (௬௰ : ௩௩) என மேல்வருதலும் நினைவுகூர்க. 'அருமழை' யென்றவிடத்து நச். நுட்பமாய் உரைத்தார். தருகிற்கும் என் பதிற் 'கில்' ஓர் இடைநிலை; ஆற்றற் பொருளது.

(எ - க0) கால்வைத்து ஏறுதற்கு ஏற்றபடி மூங்கிலில் அதன் கணுக் களை அளவாய்த் தறித்திருப்பாராகலின் 'ஏணி இழைத்திருக்கும்' என்றார். இதற்குக் 'கண்ணேணி' என்பது பெயர். 'கண்', கணு. மேல், 'விண் தோய் கல் நாடனும்' 'மைதவழ் வெற்பன்' 'சேயுயர் வெற்பனும்' என வருதலால், 'கான் அகல் நாடன் மகன்' என்பதற்கு முல்லை நிலத்துத் தலை வனுகப் பொருளுரையாமல் 'காடு அகன்ற மலை நாட்டையுடையவன் மகன்' என உரைத்துக்கொள்க. 'கான்', மலைக்கானம்; காடுகளும் மலைகளும் நாட் டின் செழுமைக்கு அடையாளமாகலின், அவ் அடைமொழிகள் தலைவன் செழுமையை விளக்குமெனக் கொள்க.

(கக - க௪) மலை நிலங்களில் சிலச்சில சிறுசிறு குடியிருப்புகள் சேர்ந் தது ஓர் ஊராகக் கருதப்படுமாகலின், 'சிறு குடியீரே, சிறு குடியீரே' யெனப்பட்டது. அடுக்குப் பன்மைக்கு. 'கிழங்கு,' கீழ் வீழ்தலால் வந்த பெயர். 'தொடா', தொடுக்கமாட்டா.

(க௫ - க௬) தொலைவிலிருந்து காண்பார்க்கு மலை நீல நிறமாகத் தோன்றுமாகலின், 'இருஞ் சிலம்பின்' என்பதற்கு நச். கரிய மலையிடத்து என உரைத்தார். 'அமை' உவமையாக வருதலின், அதுபோல் திண்மை யுங் கொள்ளப்படாமைக்கு 'மென்றோள்' எனப்பட்டது. திரண்டு நீண் டிருத்தலாற் 'கோல்' அம்புக்குப் பெயர்.

(உ0 - உக) 'திறப்பட' வென்பதை நற்றாய்க்கே கொள்க. நச். உரை வலித்துரை. நற்றாய் கூறப்பட்டமையால், இடையே, செவிலி நற் றாய்க்கு அறத்தொடு நின்றமையுந் தானே அடங்கும்.

(உஉ - உ௫) 'ஒரு பகல்,' ஒரு முகூர்த்த மென்றார் நச். ; இஞ்ஞான் றும் இதனை வழங்கலாம். தலை சாய்த்தமை நாணத்தால்.

(௨௬ - ௨௯) 'வரையுறை தெய்வ' மென்றது முருகனை; இதுவே உரை சான்றது. (பரிபா. ௨௧.) அடிகள் இங்கு நினைவு கூறற்பாலன.

(௫௦ - ௫௨) தம்மைக்கேளாது தம்மகளொடு தலைவன் களவிலொழுகிப் பின் தம் எதிரேயும் அவளை முறையென்று வரைதலாற் சுற்றத்தார்க்கு நாண் தாங்குதல் அரிது எனவும், அங்ஙனம் அரிய தொன்றனைத் தாங்குவார் பெரிய தவமுடையவரே யாவரெனவுங் கருதித் 'தம் நாண் தாம் தாங்குவார் என்னோற்றனர்கொல்' என்றாள்.

(௫௫ - ௫௬) நனவு, இங்கே வெளியே யென்னும்பொருட்டு, கனவு, அகத்ததாகலின். வரைந்துகொண்டபின் தலைவிக்கு உரிமை மிகுதலின், நச். தமதுரையில் 'தன் வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையுந் தோன்றக் கூறினாள்' என்றார். பரத்தை, பரத்தைமை; இங்கே வாளா 'அயன்மை' யென்னும்பொருட்டு. கனவிற் புணர்ச்சி கடிதல் இருவர்க்கும் உரிய நிகழ்ச்சியாயிருந்தும் 'கடிது' மென்று தலைவி தானே உரிமையுடன் கூறினமையால் அவட்கு உரிமையும் அவற்கு அயன்மையுந் தோன்றினவென்பது.

(௫௭ - ௬௦) 'பழங்கேண்மை', குறிப்பிட்டு மொழி; இவ்வழகிய சொல் இஞ்ஞான்றும் வழங்குதற்குரியது. 'மன் கொல் ஓ' என ஒன்று நின்றவிடத்து மற்றும் இடைச்சொற்கள் நின்றன; "பிறிதவண் நிலையல்" (தொல். இடை, ௫) என்பது இதற்கு விதி.

(௬௧ - ௬௪) 'நின் கண்ணாற் காண்பென்' 'நின் கண்ணாகென்கண்' என்பவை "எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம்" (தொல். பொருளி, ௨௭.)

'புனவேங்கை' யென்பது தொட்டு 'நின் கண்ணாகென்கண் மன' என்பது வரையில் தோழியுந் தலைவியும் உரிமையாற் கொள்ளும் விளையாட்டு மொழிகள். மன், மறு திரிந்தது.

(௬௫ - ௭௧) 'புரி', வேறுபட்டு. 'திரிபு' 'தப்புதல். அறிவன்', கணி. சான்றோர் எதனையும் வகை தொகையாகச் செய்வர்; அஃதவர்கள் வல்லமைக்கு அடையாளம்; ஆதலின், அவர், 'தகைமிகு......சான்றவர்' எனப்பட்டார். 'அறிவனை முந்துறீஇச் சான்றவர் இனமாக வேற்பனும் வந்தனன்' னென்றமையின், பின்னால் ஏதோரிடர்க்கும் இடனில்லாதபடி தக்க காலத்தில் தக்கவாறு வரைதல் நிகழுமெனத் தலைவிக்குத் துணிவு பிறப்பித்தவாறும். 'பொலிக மா' வென்றது, பெரிது பொலிகவென்றற்கு.

இச்செய்யுள் பலசிறந்த இன்னோசைமேல் வந்து நல்ல உணர்வின்பந் தருதல் உணர்ந்து மகிழற்பாலது.

௫

(௧ - ௭) 'அகவினம் பாடுவாம்', அகவினமாய்ப் பாடுவாம்; முற்றெச்சம். 'அழைத்தேமாய்' என்பது உரை. மகளிர்க்கு அழகோடு குணமுங்

காரணமாக 'நல்லவர்' 'நல்லார்' என்னும் பெயர்கள் வழங்கிவரும் உண்மை, 'நல்லவர் நாணு நிலைபோல்' என உயர்குண மகளிரின் நல்லொழுக்கமே இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றமையாலும் 'நல்ல மகளிர்' என நச். அதற்குச் சொற்பொருள் விரிக்கின்றமையாலுங் கண்டுகொள்க. மகளிர்க்கு உள்ள இச்சிறப்பியல்பை மாட்சிமைப்படுத்தும் வாய்ப்புகள் உலகியலிற் குறைவுபடாமலிருந்தால், அவரது நற்பண்பும் நிறைவாகத்தோன்றி நன்மை பயக்கும். சந்தனமரத்துக்கும் நன்மணங் கூறும் பொருட்டு 'முகை வளர்' எனப்பட்டது. 'வகைசால்' என்பதற்கு 'வகைமை யமைந்த' எனவே உரைக்கலாம். மருப்பின் உலக்கை யென்க. 'வகைமை', பொருத்தமாக வகுக்கப்பட்டாற்போல் அமைந்திருக்கின்றமை. 'பகையில் நோய் செய்தான் பயமலை' யென்றது, இயற்பழித்தல்.

(அ—க0) நுதலுக்கு அழகு இயற்கையாய் அமைவது; கூந்தலுக்கு அழகு செயற்கையாய் அமைவதாகலின், 'ஆய்' 'அணி', என்பவற்றிற்கு நச். அக் கருத்துப்பட உரைத்தது நுட்பமானது. தேன், இங்கே மணம்.

(கக—கச) வரை யென்றூர், அதிலுறையுந் தெய்வத்தை நினைந்து. 'அலங்கு காந்தள்' என்பது 'அலங்காந்தள் எனத் திரிந்தது. "இது வினைத்தொகை; சாரியை யன்று" என நச். தொல்காப்பிய உரையில் (புணரி. கஎ) உரைத்தமையும் இங்கு நினைவு கூர்க. இப்பகுதிக்குக், காந்தளில் தேன் பயன்படாமற் சொரிகின்றாற்போல, நின் காதலன் கூட்டமின்றி நின் நலனும் பயன்படாமற் கழிகின்றது என உள்ளுறையுவமம் உரைப்பின் இனிதாயிருக்கும். உள்ளுறையால் தோழி தலைவிக்காகச் சார்ந்துபேசித் 'தன் உற்றுர் இடுக்கண் தவிர்ப்பான் மலை' யென்பதனல் தலைவனுக்காகவும் இயற்பட மொழிந்தாளென்று கொள்க.

(கரு—கஅ) கடுவனுக்குக் கல்லாமை, வரைதல்கல்லாமை யென்பது நச். கருத்து. 'செம்மற்று', வினைக்குறிப்புகள் பத்தனுள் பிறிதின்கிழமையில் வரும் பண்புகொள் கிளவி. பிறிதின்கிழமையில் அஃறிணை வினைக் குறிப்புகள் பயின்றுவாராவாயினும் உரையிற்கோடலால் ஒரோவோரிடத்து இங்ஙனம் அருகிவருமெனக் கொள்க. இது சேனாவரையர்க்குங் கருத்தாம். (தொல். வினையி: உரு).

(ககூ—உக) 'புதை'யென்பது மகரந்தப் பொடியை உணர்த்துமெனக் கொண்டு 'புரி...தளிர்' என்பதை இருந்தவாறே உரைப்பின் உரை சிறக்கும்; புதைபொருளாயிருக்கும் பொருள் 'புதை' யெனப்பட்டது; தளிரில் மகரந்தப்பொடி சிந்துதலும் பெறப்பட்டு, மேனியிற் சுணங்கும், மாமை நிறமுங் கொள்வதற்கு எளிதாகவு மிருக்கும். "சுணங்குபோல் தளிர் மிசைத் தாதுக" என முன்னும் வந்தது (கலி. ருரு; ச.)

E

(உஉ—உரு) 'எறிந்த' : காரணப் பொருட்டு. 'விட' : போக.

(உசு—உக) வேழத்துக்கு எழில் ஒடுங்காமை. 'கடுஞ்சூல்' : முதற் சூல்; ஏனையவற்றிலுங் கடுமையானதென்பது கருத்து. மேற் "கடுஞ் சூல்" (கக0 ; கச) என்பதற்கு நச். 'முதற் சூல்' எனப் பொருளுரைப்பர். வயா, கருவுற்ற காலத்தில் மகளிர்க்கு உண்டாகும் வேட்கைமிகுதி.

(௩0—௩௪) 'மெய்ம்மலி யுவகை': ஒரு குறியீட்டுச் சொல்; உடம்பு பூரிக்கும்படியான மகிழ்ச்சி. இதனை இன்னுஞ் சிறப்பாக "மெய்ம் மலிந்தானு வுவகை" (அகநா. உசுஉ) யெனவுங் கூறுப. 'செம்மலை' முன் னிலைக் கிளவி. 'ஆகிய', செய்யியவென் கிளவி. கிழவன் என்னும் அன் ஈறு ஆன் ஈறாகி "ஆ ஓவாகும் பெயருமாருள" (தொல். பெயரி. ௪க) என்ப தனுல், ஆ ஓ வெனத் திரிந்து 'கிழவோ' னாயிற்று.

'தோழி உறழ்ந்து கூறினு' ளென நச். உரைத்தது, தோழி மாறு பட்டுக் கூறினுளென்றற்கு. தலைவி இயற்பழித்துக் கூறினுல் தோழி அதற்கு மாறாக இயற்பட மொழிதலின் என்க. இங்ஙனந் தோழி மாறாகக் கூறுவது வழுவாயினும் அது தலைவிக்கு இன்பம் பெருகுதற்கேதுவாயிருத் தலின் அமைவதாயிற்று. "உயர்மொழிக்குரிய உறழுங்கிளவி" (தொல். பொருளி. ௪௪) யென்பதன் கருத்துமிது.

௫

(க—௪) 'பாடுகம்', இதிற் ககரம் எதிர்காலங் காட்டிற்று. 'இருவாம்' நாமிருவரும். தோழியென்பதையே மீண்டும் நற்றோழியெனச் சிறப்பித் தனள். 'பாடுற்று', மெய்ப்பாடுற்று என்னும் பொருட்டு; என்றது, உரிய உணர்வோடு என்றற்கு; அதுவே தன் பயன் நல்குமாதலினென்க. 'தவங் கிடத்த' லென்பதும் இங்ஙனம் மெய்ப்பாடுறுதலான உணர்வு நிலை கை வந்து அது தன் பயன் நல்குதலென்ப. "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" (சிலப். கனுத். கரு) என்பதிலும் இக் கருத்துகள் வெளிப் படுதல் காண்க. பாடுற்றுப் பாடுகம், என்று இயைத்துக் கொள்க.

(ரு—உச) 'இடி உமிழ்பு', இடி நெருப்பை யுமிழ்ந்து என்றது நல்ல உரை. 'இரவு பெயல் நடு நாள்' எனக் கொண்டு 'நடுநாளிரவு பெயலில்' என உரைகொள்ளின் எளிதாயிருக்கும். நடுநாளிரவு, நள்ளிரா. 'கொடி விடுபு இருளிய மின்னுச் செய் விளக்கத்து' என்பதற்கு 'இடையிடையே கொடிவிடுதல் மயங்கிய மின்னுண்டாக்கின ஒளியிலே' என நிருந்தவாறே உரைப்பின் இயல்பாயிருக்கும். 'கொடி' ; மின்னற் கொடி ; 'இருளிய'; மயங்கிய ; இல் முன் 'முன்றில்' என்பது போலப் புன்செய் 'செய்புன்' எனப்பட்டது. 'ஆசினிப் பணவை' யென்பதில் ஆசினி, ஓர் அகக்காழ் உள்ள மரம். உயர்ந்து வளர்வதும் உறுதியுடையதுமாதலின், அதன்மேற்

பரண் அமைப்பதுண்டு. 'கைவிடுதல்'; எறிதல். இறுவரை, இற்ற வரை; வெள்ளத்தால் அடிப்பக்கங் குத்துண்ட ஆற்றங்கரைபோல் வெயில் வெப்பத்தாற் பக்கம் பிளந்துவிட்ட மலைப்பாறைகள் என்க. நச். 'முறிந்தவரை' யென்றது, திறமாயிருக்கின்றது. அடிப்பக்கம் இற்ற ஆற்றங்கரைக்கு "இறுவரை புரையுமாறு இரு கரை" யெனப் பரிபாடற் கண் (எ : சுமி) இவ் இறுவரை உவமமாக வந்திருத்தல் இங்குப் பெரிதும் நினைவு கூரற்பாலது. முற்றி ஓடாகாத முன்னிலையிலுள்ள தகுதியான வடு வைக் குறித்தற்கு, 'நறுவடி' யெனப் பட்டது. 'துணர்', இங்கே பூவும் பிஞ்சுமாயுள்ள கொத்து. 'மடல்' : வாழைப் பூவின் மேல் உள்ள இதழ். 'கவணையில் கல் (டி), சிதறி உதிர்த்துப் போகி உழக்கிக் கிழித்துப் பழத் துள் தங்கும்' என்க. அகநானூறு (உகஉ, அ–ம்டு) அடிகள் இப் பகுதி யோடு பெரிதும் ஒத்திருக்கின்றமை நன்கு நினைவிருத்துதற்குரியது.

மெய்ப்பாடுகளில் உறுபெயர் கேட்டலென்பது, தலைவன் பெரும் புகழ் கேட்டு மகிழ்தலென்ப.

(உரு–உஎ) 'இளமழை யாடும்' என்னும் அடுக்குப் பயில்வுப் பொருட்டு.

(உஅ–ஙக) 'நிழற் கயம்' என்றது, இன்னுங் குளிர்ச்சி தேற்று தற்கு. 'வாராதமைவானோ' என்பதும், மேல் 'மணிபோலத் தோன்றும்' 'துறக்குவனல்லன்' என்பனவும், 'பொய்த்தற்குரியனோ' என்பது போலவே இருகால் வந்தது தேற்றுதற் கென்க.

(ஙஉ–ஙச) 'மணிநிற மால்வரை' (ஐங். உக : அ) யென்றார் பிறரும்.

(ஙரு–ஙஅ) 'தொடர் வரை வெற்பன்' என்றமையால், தமிழ் நாட் டின் தொடர்ந்த மலையமைப்புகள் பெறுதும்.

(ஙக–சச) 'ஒன்றி" மெய்ப்பாடு தோன்றும்படி உணர்வு ஒன்றி, 'கேட்டருளி' யென்பதை ஒருசொல்லாகவே கொள்க. உயிர்க்கே யல்லா மல் உடலுக்கும் அவ்வுடலுழைப்பாலாகும் பொருளுக்கு மெல்லாந் தலைவனே கிழமையுடையன் என்பது 'மென்றோட் கிழவன்' என்பதனாலும் பெறப் படும். 'மன்றல்.........நயந்தனன்' என்பதனால் மலைநாட்டவரிற் பெண் வீட்டார் வேங்கைமுதலான மரங்களின் கீழிருந்து பிள்ளைவீட்டாருக்குத் திருமணம் உறுதிசெய்வரென்னும் ஒரு வழக்கம் வெளிப்படுதல் காண்க.

சிர

(க–கூ) 'தொன் முரண்': தொன்றுதொட்டு வருங் குலப்பகை. 'குளகு'; தழை யுணவு; இலக்கியங்களில் இச்சொல் பெரும்பான்மையும் யானையின் உணவுக்கே வழங்கிவருகின்றது. 'முன் குளகு' என்றது,

மலையின் தழைநிறைவைக் காட்டும். 'ஒல்': ஒலி; தாலாட்டும் ஒலிப் பொருட்டாய் வந்தது. 'பிறங்கு' என்பதற்கு நச். இடத்துக்கேற்ற வாறு உரைத்தார். 'எல்லா' என்பதை 'எல்லாம்' எனக்கொண்டு 'நாடன் மறந்தான்; இனி முற்றும் மறக்க' எனவும், 'நமக்குச் சிறந்தன நாம் நற்கு அறிந்தனமாயின்' என்பதை இருந்தவாறே கொண்டு 'நமக்குச் சிறந்த கடமைகளை நாம் நன்கு அறிந்தனமானல், அவன் திறம் நெல் குறுவாமாய், இருளை! வள்ளை அகவுவம் வா' எனவும் உரைப்பது இயல்பா யிருக்கும். நச். மாற்றத்தால் ஏதும் பெரும்பயன் இருப்பதாகத் தோன்ற வில்லை.

(க௦—கஉ) 'வாள் நிறம்' என்பதை நச். வேற்றுமைப் பொருளில் உரைத்த நுணுக்கம் அறிந்து கொள்க. 'வாள்' இங்குப் பளபளப்பை உணர்த்தும். தலைவற்கு இங்கே கூறிய நாண், கருமத்தால் நாணுத நாண் (குறள்: ௱உக).

(கங—கரு) 'ஆர்வு'; நுகர்வு, 'கோல்' என்பதை உவமையாகக் கொள் ளாது, 'ஆராய்ந்து ஒரு பக்கம் சாயாத நேரான ஆட்சியையுடைய' என இருந்தவாறே பொருளாகக் கொண்டு உரைப்பின் சிறக்கும்.

(கசு—கஅ) 'பொன் அணி யானை', இல்பொருள்; 'கொன்'; பய னின்மை, (தொல். இடை: சு); என்றது, அழியுந் தசை யின்பத்தை. எனவே, ஆடவர் மகளிரின் காதற்பயனுவது, இல்லறமாம். இப்பொரு டோன்ற நச். உரைத்தமை அவர்தம் மெய்யுணர்வை நன்குகாட்டும்.

(ககூ—உக) 'எய்ப்ப': பொருந்த, நீரினும் மென்மை; அதனினும் ஈர முடைமை. "நீரினும் இனிய சாயற் பாரிவேள்" (புறம். ௱ரு) என்பதிற் சாயல் மிக மெல்லிய ஈரவியல்பின் பொருட்டாய் வந்தமை நினைவுகூர்க.

(உஉ—உச) 'நெய்'; தேன்; 'மழை' மேகம்.

(உஅ—௬௨) தசைக் கொழுமையாலும் அன்பினுலும் தலைவன் மார்பம் சாயலுள்ளதாய் இனிதாயிற்று. சாயல் என்னும் மென்மை ஐம்பொறிக்கும் பொது (தொல். உரி: உஎ-உரை); இங்கே ஊற்றின் மென்மைக்கு வந்தது. 'சிறுபுறம்' என்றது, புறக்கழுத்தை. தனது வரவைத் தலைவிக்குக் குறிப் பிட வேண்டாமென்று தோழிக்குக் கைகவித்துக் காட்டியென்க. 'கை கவித்தல்'; விலக்கல், (கலி. சுரு; உ); சிறுபுறஞ் சார்தரப் பசப்பு இருள் போல மாய்ந்தது என்பதே செய்யுட் பொருள். நச். கூறும் பிறபொருள் கள் அவரே வருவித்துக் கூறியவையாகலின், அவை முறையாகமாட்டா. ஆகவே, இப்பாட்டுக்குத் துறை, முன்பு பெற்றவழி மலிந்ததனைப் பின்பு தலைவி தன் நெஞ்சோடு கூறியது எனக் கொள்ளல் வேண்டுமென்க. பிரிந்தவழிக் கலங்கிக் கூறியதென்பது பொருந்தாது.

எ

(க—எ) 'ஐயனை' யென்றது, முருகனை; அழகுந் தலைமையும் ஒருங்கே உணர்த்தும் இச் சொல், இங்கே முன்பின் தொடர்பின்றித் தனித்து நின்று முருகனை யுணர்த்துதலை உற்றுநோக்குங்கால், பண்டைக் காலத்திற் பேச்சு வழக்கத்திலுங் கடவுளை யுணர்த்துதற்கு இது பெருவரவினதாய் வழங்கி வந்தமை பெறுதும். 'மைபடு சென்னி' யென்பதற்கு 'மேகங்கள் உண்டாகின்ற தலைமையினையுடைய' என்று நச். உரைத்தது, 'எது சிறக்குமோ அதனையுரைத்த'லென்னும் உரைமுறையாம். மிகவும் ஆழ்ந்தமைந்து நச். உரைகூறிச் செல்லுமுறைக்கு இதுபோல்வன நல்ல எடுத்துக்காட்டுகளென்க. புகைபோல ஆவியாய் மேலேவரும் நீர் உயர்ந்த மலையுச்சியிற் சென்று அதன் குளிர்காற்றுப் பட்ட அளவிற்குவந்து கறுத்து மேகமாகின்றமையின், 'மைபடு' என்பதற்கு 'மேகம் படிகின்ற'வென உரையாமல் 'மேகம் உண்டாகின்ற'வென்றும், ஏனை மலைகளினும் இங்ஙனம் மேக முண்டாக்கும் உயர்ந்த மலைகள் தலைமையுடையவாகலின் 'சென்னி' யென்பதற்கு வாளா 'உச்சி'யென உரையாமல் 'தலைமை' யென்றும் இயற்கை யுண்மை தோன்ற நச். ஊன்றிப் பொருளுரைத்தமை பெரிதும் வியக்கற்பாலது.

(அ—கக) 'தகையவர்', மகளிர்க்கு வந்த வழக்குக் கருத்திருத்துக. விரலில் அணிவன 'தாள்' என்னும் பெயர்பெற்றிருத்தலான் அவை பண்டு பூட்டுடையனவாயிருந்தன வென்றும் உற்றுணரப்படும். 'கை' காந்தள்; விரலணி, 'தும்பி': தும்பி கருநிறமாதலின், விரலணியை அதற்கேற்ப நீலக் கடைச்செறியென நச். விழிப்பாய் உரைத்தார். முருகனுக்குக் கொள்ளுங் கால் தொலையாமை சூரன்மாட்டும், தோன்றல் வள்ளிமாட்டுங் கொள்க.

(கஉ—கரு) 'ஊர்பு இழிபு! ஆடும் வருடைமான் குழவிய வளமலை' யென்பது நல்ல இயற்கைநவிற்சியாதல் கண்டு மகிழ்க.

(கசு—கக) 'பொறி' யென்றது, கேட்கும் உட்கருவியை; நுண் பொறி' யென்றமையின், மானுக்கு மிக நுண்ணிய ஒலிகளுங் கேட்குமென்பது பெறுதும். கண், கணு; உவமைக்கு மகிழ்க. 'பாளை,' இங்குக் கணுமுளையை மூடியுள்ள மேல்தோல். 'கழன்று உகும்' என்றமையால் மலையின் செழுமை பெறப்பட்டது.

(உ0—உரு) குழந்தைப்பருவமுதல் மணப்பண்டங்கள் பயின்று வருதலாலும், நற்குண மாட்சிமையாலுங் கதுப்பு மணநாறுவதாயிற்று.

(உசு—உஎ) கச்சலான ஒரு சீப்பு வாழைக்காய், கூர் நகங்கள் வெளி வந்த புலியின் அடிபோலவும் அதன் விரல் போலவும் அகன்றும் வளைந்துந் தோன்றுதலின், 'உழுவையடி போல வாழைக் கொடுங்காய்' என்றார்.

அ

(க—எ) 'சுடர்க் கவின் கொண்ட நனஞ்சாரலின் மால்வரை யடுக்கத்து' என இருந்தவாறே உரைத்தலால் இழுக்கேதுமில்லை; மாணிக்கப் பாறை யென ஒன்று வருவிக்க வேண்டிய கட்டாயமில்லை. மரத்தின் அடிக்கு முழவின் உவமம், "முழா அரை" என்பதனுட் (புறம். அ௬-எ) காண்க. 'வரி' புகரினையும், 'நுதல்' மத்தகத்தினையும் உணர்த்துதல் கருத்திருத்து தற்குரியது. 'வீறு', வேறொன்றற்கில்லா அழகு என்பர் சிந்தாமணியில். (உ: அக) வெற்புக்கு விறல் முற்கூறப்பட்டது. (கலி. அ) எதிர் எதிர் ஓங்கிய அடுக்கம் இரு பக்கங்களிலும் உள்ள யானை யெனவும், அருவி அவ்யானைகள் சொரியும் பூநீரெனவும், அலர்தல் கொண்ட வேங்கை மரம் திருமகளெனவுங் கொள்க.

(அ—கரு) முதற் றாழிசையில் தோழி கூறுதலை நாணி யென்றமையின், இரண்டாந் தாழிசையிலும் நச். அதுவே உரைத்தல் முறையாகாது. 'சேரியும் மறைத்தாள்; அதுகேட்டு அவரும் நீ நிலையிலை யெனக் கூறல் தான் நாணி' யென உரைத்தலே உரையாம். அவருமென்பது அவாய்நிலை. சேரியோர் கூறலைத் தான் நாணி யென்பது கருத்து. மூன்றாந் தாழிசையில், 'ஆயத்தார் கூறுதலை நாணி' யென வேறு வருதலும் நினைவு கூர்க. அதன் கட் 'பிற'ரென்றது ஆயத்தாரை யுணர்த்தும்.

(கஎ—உக) 'இனையன தீமை' யென்றது, பிறர்க்கு அறிவித்தலால் உண்டாம் பழி முதலானவை யெனவும், 'நின் தீமை' யென்றது, தலைவன் அருளின்மை யெனவுங் கொண்டு, தொடர் கிடந்தவாறே பொருளுரைப்பின் உரை சிறக்கும். மருந்தாவது, தலைவனது வரையுங் கருத்தென்க.

கூ

(க—எ) 'விடியல்' இங்கே விடிந்த காலை நேரம். வெங்கதிர் காயும் என இதனை அடுத்து வருதல் காண்க. 'அமலல்', நெருங்கற் பொருட்டாதல் "புழகு அமல் சாரல்" (மலைபடு. உககு) என்பதினுங் காண்க. 'அறை'யென்பதற்கு உயர்வாகப் பொருள்கூற விரும்பி 'மாணிக்கப்பாறை யென்றார். 'உத்தி': பாம்பின் படத்து நடுவில், வளைவாயமைந்துள்ள வரி. 'மிளிர்தல்': புரளுதல்; "ஓங்குவரை மிளிர" (நற். ௩௪எ) என்றார் பிறரும். காந்தட் குலையினை அரவின் தலையெனக் கருதி உருமு இடித்த தென்க.

(அ—கக) அருவிகள் பெரியவையாதலாற் காற்றடிக்கவும் அசையாவாயின. 'மலிசுனை' யென்பதற்கு நச். 'நீர் நிறைந்த சுனை' யென்றது காண்க. இவ்வளவுங் கூறியது மலரின் பசுமையை மிகுத்துக் காட்டுதற்கு.

இதனால், அருவிகளில் எஞ்ஞான்றும் நீர் அறாது ஒழுகுதல் தெளிவாத லின், சுனைகளிலும் நீரூற்ற மிக்கு நீர் மலிவதாயிற்று. மேன்மேல் ஆராமை தோன்றுதலின், 'புல்லாராப் புணர்ச்சி' யெனப்பட்டது. அதனாற் புணர்ச்சி மேன்மேலும் பெறும் பொருட்டுத் தலைவி வருந்துவாளாயினள். ஆகவே, 'புணர்ச்சியாற் புலம்பிய' வென்பதற்கு நச். இருந்தவாறே உரைக் கும் வாயிலெண்ணாது, புணர்ச்சி பெறுமையாற் புலம்பியவெனத் தமக்குத் தோன்றியவாறே கூறிச் சென்றார். இது நேர்மை யாகாது.

(கஉ—கரு) 'புகர் முகம்' என்பதிற் 'புகர்' மத்தகத்திலுள்ள புள்ளி. இதனாற் 'புகர் முகம்' என்பதும் யானைக்கு ஒரு பெயர்.

'உழக்கும்' திரியும்; களிறொடு புலி பொருது உழக்கும் மலை என்றமை யால், அதன்கண் மூங்கிற் காடுகளின் செறிவு பெறப்பட்டு, அம்முகத்தால் அக் காட்டிலுள்ள மூங்கிலின் வளம் விளங்காநின்றது. 'கைம்மிக': ஒரு சொல். 'தடைதல்': பெருத்தல்; "தடை இய அமை" (பதிற். சு : ச) என்பதனுரையிலும் இங்ஙனமே உரைக்கப்படுதல் நினைவு கூர்க.

(கசு—கக) 'உற' இரண்டனுள், முன்னது நீண்டவென்னும் பொருட்டாகவும், பின்னது மிகவுமென்னும் பொருட்டாகவும் வந்தன. 'விடர்': குகை.

தோழி தலைவனை நோக்கி, 'நீ அருளிலையாயினை' எனச் சொல்லாமற் சொன்னமையே இத்தாழிசைகளின் கருத்து. 'என்பதோ'வென்னும் ஓகாரங்கள் எதிர்மறையொடு ஐயம். 'சிதைத்ததை' என்பதன் ஐகாரங்கள் சாரியை.

(உ0—உச) 'கழறல்': இடித்துச் சொல்லுதல். அவர்ப் பேணி யெனப் பிரித்துக் கொள்க. 'நம் உறை வரைதல்', அவர்பால் நமதுறை தலை வரைந்தனரென்க.

## ருO

(கூ—க) 'வீயகம்': மலரிடம்; 'புலம்ப': தனித்து நிற்க. தன் கண் இருந்த தும்பி பிரிந்தமையாலென்க. யானைகளிற் சிறந்த யானையென்றற்கு 'யானைத்தலைவனொடே' யென்றார். "யானையுள் அரசன்" (சிந். கஉ ; ருகூ) என்றார் பிறரும். பொறிகளையுடைய புலி, பூக்களையுடைய வேங்கைக் கிளை போலவும், யானையின் முகத்திலுள்ள பொறி, வேங்கையின் பூவே போலவுந் தும்பிக்குத் தோன்றினவெனக் கொள்வது நல்லது. இரண்டுங் கலந்து பொருதலால் இங்ஙனந் தோன்றின. 'நயன்,' நட்பாக்கும்வாயில் என்பது நல்ல உரை. 'நயன் நாடி நட்பாக்கும் வினைவர்போல்' ஒரு வழக்குச் சொல். 'அயம்' பள்ளமென்றதும், 'அணி', திரண்ட வென்றதும் இடத் துக் கேற்ற அழகிய உரைகள்.

(௧௦—௧௫) 'இடையிரவினில் அதன் பதம் பெறான்' எனிற் சிறக்கும். இத்தாழிசைகள் தோழிக்குத் தலைவி கூறிய கூற்றாக வருதலின், 'கூடுதல் வேட்கையாற் குறி பார்த்து' என்பதுபோல் தலைவி தன் நாணும் மடனும் நீங்கிக் குறிப்பாலல்லாமல் வெளிப்படையாகவே கூற்று நிகழ்த்துவாளாயினளென்க. 'அல்ல கூற்றுமொழி அவள் வயினான' (தொல். கள: ௧௧) என்பது இதற்கு விதி. 'பாடு'' ஒலி; இந் நொச்சிப் பூ விழும் ஒலியைப் பிறரும் (குறுந். ௧௫௮) கூறுவர்.

(௧௬—௧௭) 'நிலையுயர் கடவுட்கு' என்றவிடத்து நச். வல்லமையாகச் சென்றார். 'நடுநாள்' என்றது, நள்ளிரவை.

(௧௮—௨௧) 'கண் மாற', குறியிடம் மாற; 'நசை வேட்கை' யென்னுமிடத்து நச். உரைத்த வல்லமையிற் கருத்தான்றுக. இவ்வுவமை மிகச் சிறந்தது. "துளிநசைப் புள்ளின் நின் அளிநசைக் கிரங்கி" யெனப் பிறர் கூறுமாறும் **புறத்தில்** (௧௯௮) வந்தது. 'மிசை', இங்கு வானம்.

(௨௨—௨௭) 'குறியிடம் பிழைத்ததற்கு என்மேற் பிழையாகத் தலைவன் உளங்கொள்ளும். ஆனால் நானோ ஆர்வுற்ற அன்பினேனாக இருக்கின்றேன்' எனத் தலைவி வருந்திக் கூறுவதாக இத் தாழிசைகள் வந்தன. ஆதலால் அடக்கியலில் தோழி தலைவனை நோக்கி, 'நீ என்மேற் பிழை சுமத்தி என்னை வெறுத்தாய்போலச் சிறிது பொய்யாக நடிப்பையாயின் அவள் கவலை நீங்கும்' என்று சூழ்ச்சி கூறினாளென்க. 'நீ என் வயிற் புலந்தாயு மாயின் அப் பொய்யான வெல்குவை' என்று உரைத்துங்கொள்க.

சிலம்புபோற் கூறுவகூறும் என்றது, தலைவன் சொல்லுவது சரியோ பிழையோ, தலைவியும் அதனையே இசைந்து கூறுவளென்றற்கு. அத்தகைய அன்பினளாதலின், நீ பொய்யாகக் கூறினும் அவளதனை மெய்யாகக் கருதுவளெனத் தோழி தலைவர்க்குக் கூறினாளென்பது. இதனால், தலைவற்குத் தனது களவொழுக்கத்தில் அசைவு பிறந்தது. அசைவாவது, தளர்வு; இதன் பயன் தலைவற்கு வரைவிற் கருத்துண்டாதலென்று கொள்க.

### ௧௧

(௧—௮) 'வழிபட்டு ஒன்று அறிந்'தென்பது கருத்தான்றற் குரியது. 'நல்லார்கட்டோன்றும் அடக்கம்' என்பதன் உரை நல்ல உரை. 'நல்லார் முற்றோன்றும் அடக்கம்' என்க. ஈகையிற்றணித்தல் ஆற்றுவாராற்றலினும் ஆற்றலாகலின் (குறள். ஈகை: ௫) 'வல்லான்போல்வதோர் வன்மையும்' என்றார். 'பன்மாணும்' என்பதற்குப் 'பலகாலும்' என்றுரைப்பது இனிய உரை. நச். உரைத்தது இயல்பாயில்லை. பலகாலும் என்னும் இப்

பொருள் வழக்குப் "பன்மாண் அடுக்க இறைஞ்சினேம் வாழ்த்தினேம்" (கரு ;ருஉ) என்னும் பரிபாடலிற் காண்க. பரிபாடலுரைகாரர் இதற்கு இப் பொருளே யாண்டும் உரைத்துச் செல்லுதலும் பெரிதுங் கருத்தான்றற் பாலது. 'சுடரிழாய், பன்மாணுஞ் சொல்லுஞ் சொல் கேட்டீ' யென்று இயைத்துக்கொள்க.

(கூ—கக) 'ஆங்கு': அசை.

(கஉ—கஅ) மகளிர் உணர்வுநிலையினர்; ஆதலின் ஒன்று உற்றக்கால் அவரறிவு உடனே தன்முனைப் பிழந்துவிடும். விடவே, அங்ஙனம் அறிவு கலங்காத மற்றொருவரிடம் அவர்கள் ஆராய்தல் நன்றாகலின், 'தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கும் அரிதாயின்' என்றாள். ஆடவர் அறிவுநிலை யினராகலின் அவரியல்பு வேறென்க. 'அளியரோ' வென்றாள், தலைவியின் அளிபெறல் கருதி.

(கரு—கஅ) நச். 'முதுக்குறைமை' யென்றது, பேரறிவுடைமையை (கலி. ருஉ:கூ)

(கசு—உச) தம்மால் தலைவன் பேணப்பட்டானெனின், அஃதவன் புகழ்க்குக் குறைவுண்டாமென்று தலைவி காதற்கருத்தால் நினைதல் இயல் பாகலின், 'நின் கருத்தாற் பெண்மையுமன்றா யிராநின்றது' என நச். நுணுகியுரைத்தார்.

## கஉ

(க—எ) ஒத்தனவும், அடுக்கத்தனவும், துருத்தியனவுமான பெருங்களிற் றினத்தொடு என உரைத்து, அவற்றை முறையே கான்வாழ்வன, மலை வாழ்வன, யாறுவாழ்வனவென்னும் முத்திற யானைகளாகக் கொள்வது இன்னும் நல்லது. 'எட்டுத் திசைகளினுங் காவல்' என்னுங் குறிப்பாற் கான்வாழ்வன கொள்ளப்படும். மூவகை யானைகட்கும் மதச்சிறப்புக் கூறப் படுதலின், 'தேமூசு நனைகவுள்' 'வண்டூது புகர்முகம்' என வினை இரண்டற்கும் வந்தாற்போல மூன்றாவதற்கும் 'கமழ்கடாந் திகழ்தரு' மென வந்ததாகக் கொண்டு 'கமழ் கடாந் திகழ்தரும் மாவிசும்போங்கிய கடிமரத் துருத்திய' வென இயைத்துக்கொள்க. இரண்டாவதற்கும், 'வண்டூது, புகர்முகப் படுமழை' என இயைத்து மழையை மதமழையென் றுரைப்பது நல்லது. ஒத்த, அடுக்கத்த, துருத்திய வென்பவை வினைக்குறிப்புப் பெயர் கள். "களிறு என்றல் கேழற் கண்ணுங் கடிவரையின்றே" (தொல். மரபு: ருச) என்பதனாற் பன்றியையுங் களிறென்னும் வழக்குண்மை தெரித லின், அதனினும் வேறுபடுத்துதற்கு யானையைப் 'பெருங்களிறு' என்றா ரெனலுமாம். 'இனத்தொடு' என்றார், முற்காட்டிய மூவகைப் பிரிவுந்

தோன்ற. சிறுத்தை சிறுபுலி யெனப்படுதலின், பெரும்புலியென்னும் பொருளில் வேங்கை 'இரும்புலி' யெனப்பட்டது. 'இகன் மலை' யென்பதற்கு 'இகலுள்ள மலை' யெனின் உரை நேரிதாம். அது 'களிற்றினத் தொடு இரும்புலி மயக்குற்ற இகல்' என்க. 'வலி முன்பு' 'எறும் முன்பு' என்னும் இரட்டிப்பு மிகுதி காட்டிற்று.

(அ—கக) மனவொடுக்கத்தால் வாழ்நாள் மிகுமென்பது உயர்ந்த பொருள். ஒடுக்கமாவது இங்கே, ஒருமுகப்பட்டு அமைதல். 'தாய்', செவிலி முதலியோர். 'தாய் முன்னர் உகுப' என்றமையால், மறை பிறரறிகின்றமை உணர்த்தினளாயிற்று.

(கரு—கக) 'செதும்பு': சின்னீர்; சின்னீரென்றமையால் அஃது ஆர வாரிக்குஞ் செவ்வி, இளவேனிற்காலமாயிற்று. 'உகு', 'மெலிவு' என்பவற்றிற்கு இடத்துக்கேற்ப உரைக்கும் முறைகள் கருத்தூன்றற்குரிய.

'களவொழுக்கத்தால் இடையிடையே நேரும் பிரிவுகளால், தலைவி ஆற்றுளாய் வருந்துதலின், வளை நெகிழ்ந்தும் கண் கலுழ்ந்தும் மெலிவு வந்தும் மறை பிறரறிய நேர்கின்றது. அது தலைவியின் தவறுமோ? நீ வரைந்துகொள்ளாமையால் நேருங் குறையன்றோ? வெனத் தோழி தலைவற்கு வல்லமையாய்க் கூறுங் கருத்துகள் இத்தாழிசைகளில் வந்தன.

(உ0—உச) நட்பு பின்னுதலை ஈதல்வேண்டுமென்று கொள்க; பின்னுதல்: கூடுதல். வரைதலால் அது பின்னுமென்பது கருத்து.

### சுந

(க—கூ) 'வென்ற வருத்தம்'; பொருது வெல்லும்போது நேர்ந்த மெய் வருத்தம். 'அணி நலம்': அழகிய தோற்றம்; 'பேணு': காவாத. புலியின் நினைவால் அதனையொத்த வேங்கைமரத்தை யானை சிதைக்க முயல்வது முன்னும் வந்தது (கலி. கூஅ).

(க0—கரு) மின்னலே கண்ணுக என்றூர், மின்னு நேரத்தில் மட்டும் வழி தெரிதலின்.

(உஉ) 'அதனால்' என்பதை அசையெனல் வேண்டுவதின்று. 'ஆகையால்' என்னுங் காரணப்பொருளுள்ள சொல்லாகவே கொள்க.

(உங—உரு) 'புன்னை அணிமலர் துறைதொறும் வரிக்கும்' என்புழிப் போல (ஐங். கஉ : எ) இங்கே 'வரிக்கும்' என்னுஞ்சொல் கோலஞ் செய்தற் பொருட்டாயிற்று. 'பகலும் பெறுவை'யெனப் பகற்குறி நேர்வாள்போல இராக் குறியையும் மாற்றினள், இவ் விடர்ப்பாடுகள் கருதித் தலைவற்கு விரைவில் வரையுங் கருத்துண்டாமென்றற்கு.

## கச

(க—ரு) 'வரு வைகல்', ஞாயிறு தோன்றும் விடியற்காலம் என்பது நச். உரை. மூங்கிற்கோலை முழந்தாளினுலுந் தாழ்த்து நிற்றலின், 'முழந்தாளிரும் பிடி' யெனச் சிறப்பிக்கப்பட்டது. 'வாழை நளி', வாழைச் செறிவு எனவே உரைக்கலாம். 'வாழை நளி புக்கு ஞாங்கர்' என்பதற்கு, 'வாழைச் செறிவிற் புகுந்து அவ்விடத்தே' யென்று உரைத்துக்கொள்க. வெயிலொளி அறியாமையால் (கலி. ருய: எ) 'இருள் தூங்கு சோலை' யென்றூர்.

(சு—கச) "அரவின் தோற்றமேபோலுஞ் சிலைகளும்" (ய : ருஎ) எனச் சிந்தாமணியில் வருதலால், இங்கே 'அரவின் பொறி' யென்பதற்கு அரவின் அடையாளமெனக் கொள்க. 'பொறியும் அணங்கும்' என இங்கு வந்தாற்போலவே, 'பாம்பு வடிவுக்கும் கொலைத் தொழிலுக்கும் உவமை' யெனக் குறிஞ்சிப்பாட்டுரையிலும் (கருஅ) இவ் வுரையாசிரியரே சிலைக்கு விளக்கி யுரைத்தலும் நினைவுகூர்க. 'கையையாய் ஓராங்கு மறப்பித்தாய்' என நச். இயைக்கின்றூர். 'கையையாய் ஓராங்கு நோக்கி மறப்பித்தாய்' என்றியைத்தல் நேரானது. ஓராங்கு நோக்கி, ஒருவழிப்பட நோக்கி; தன் வயப்படும்படி நோக்கியென்பது கருத்து. 'கோள்': குலை. 'பயிர்ப்பு உறுதீங்கனி', பிசினையுடைய தீங்கனி யெனவே உரைக்க. 'அல்கு': கிடந்த. நெடுநாட் பிள்ளையில்லாத வறுமையாளர்க்குச் செல்வமாய்ப் பிறந்த மகளாதலின், 'நல்கூர்ந்தார் செல்வ மகள்' எனப் பட்டாள். வறுமை, பிள்ளையில்லாத வறுமை. மக்களையுள்ளவர் பொருளுள்ளவராகக் கருதப் படுகின்றமையால் (குறள். சுரு; புறம். கஅஅ) அவரை யில்லாதவரும் நல்கூர்ந்தாரெனப்பட்டார்.

(கரு—கஎ) 'இயல்'; செல்லும்; 'தளி': மழை; கைதூவல், கையொழிதல்; எதிர்மறைக்கண் வந்தது. இப் பொருள் "கைதூவேன்" என்பதன் (குறள். ாகூ: க) உரையிற் காண்க. சிறந்தனையாய்க் கைதூவலை யெனவே இயைக்கலாம்.

(கஅ—உச) 'அறிந்தும்' என்னும் உம்மை ஆக்கம்.

## கரு

'சுடர்த் தொடீஇ' என்னும் அளபெடை விளிப்பொருட்டு. 'அடைச்சிய': செருகுவித்த. 'வரிப்பந்து', என்பதில் 'வரி' பந்தின்மேல் அமைக்கப்பட்ட ஓவியக் கோலம். 'பட்டி', ஒரு நெறிமுறையின்றித் தான் வேண்டியவாறே அடங்கா தொழுகுவோன். 'பொற் சிரகம்' என்றமையாற் செம்புகள் அக்காலத்திற் பொன்னுலுஞ் செய்யப்பட்டு வந்தன வென்

பது விளங்கும். 'வார்க்கி': ஒரு பெரிய கலத்திலிருந்து மற்றொரு சிறிய கலத்தில் வார்த்து. கை பற்றி நலிவான் என முன் அறியாமையால் 'தன்னை யறியாது சென்றேன்' என்றாள். 'நலிய', இங்கே இறுக்க என்னும் பொருட்டு (புறப். வெ). முதுகுக்குப் 'புறம்' என்னும் சொல்லே பெரிதும் வழக்காறாகலின், நச். புறம்பு அழித்து எனப் பிரித்தமை பொருந்தாது. 'புறம்பழித்து' என ஒரு சொல்லாகவே கொண்டு 'வைது' எனப் பொருளுரைக்க. அவை, 'மெதுவாக உண்பதற்கென்ன?' என்றாற் போல்வன. மேலும், விக்கினால், தொண்டை மார்பு முதலிய இடங்களிற் றடவுதலன்றி முதுகிற்றடவுதலும் இயற்கையன்று. ஆகவே, 'நீவி' யென்றது, தலைவன் குனிந்து குனிந்து விக்கும்போது, தாய் வலது புறமாக நின்று தொண்டைப்பக்கம் தடவினளெனக் கொள்க. அவ்வாற்றால், அவன் கடைக்கண்ணாற் கொல்வான்போல் நோக்குதற்கும் இயைபிருந்தது. 'நகைக் கூட்டம்': மகிழ்ச்சிக்கிடமான சந்திப்பு; இங்கே 'கோமாளிக்கூத்' தெனின், சிறக்கும். இங்ஙனமொன்று கலி. ௬௫-லும் வேறு முறையில் வரும். 'கள்வன் மகன்', கள்வனாகிய மகன் என்றமை கருத்திருந்தக. உண்ணுநேரத்தில் விருந்தாகச் சென்றால் தள்ளாது உண்பிப்பாரென்னுந் துணிவுபற்றித், தலைவியைக்காணும் அவாவினனான தலைவன் அஞ்ஞான்று செல்வானாயினன். உண்ணு நேரத்தில் எவரும் புகாராகலின், அது 'புகாக் காலை'யாயிற்று. 'பகாவிருந்து': நீக்காத விருந்து (தொல். கள: ௧௬).

தலைவன் செய்யும் இனைய குறும்பொன்று அகம். ௩௫௬-லும் வருதல் நினைவுகூரற்பாலது.

௫௩

(௧—௬) நிறம் சாடுதலால் யானைக்கு உண்டான அழுகு மருப்பான் ஆனதாகலின், 'நீண் மருப்பெழில்' என்றார். இங்ஙனம் உரைப்பது சிறப்பு. 'மல்லர்': மற்போர் வல்லார்; கஞ்சனால் ஏவப்பட்டு வந்த சாணூரான் முதலியோர். 'மால்போல் யானை'யென்றது, பெருமித உவமை.

(எ—௧௦) 'அணங்கு': முருகன். பலி: பூப்பலி முதலாயின.

(௧௧—௧௪) இருட்டிற் பிறர் கண்ணுக்குத் தெரியாதபடி கருநிற உடையை அணிந்துத் தலைவன் வருவனாதலின், 'எல்லி மாலையை' யென்றாள். 'இருட்டின் இயல்பினையாய்' என்பது பொருள். இக் கருநிறப் போர்வையினாற்றான் காவலர் களிறென ஆரவாரிப்பாராயினர். தலைவி போர்வை போர்த்து வருதலும் மேல் (கலி. ௬௫: ௪) வரும். 'சோர்ந்து வீழ் கதுப்பினாள்' என்பதற்கு நச். இறுதியிற் கூறிய உரை நன்று. மிக்க அன்பின் நெகிழ்ச்சியாற் கூந்தலே குலைந்து வீழ்தலும் உண்டாதலின், அங்ஙனம் உரைப்பது இன்னும் இயல்பாயிருக்கும். 'ஞெகிழி': தீக்கோல்.

(கரு–கஅ) 'தாமரைக் கண்ணி', 'ஈர்ந்தண் ஆடை', 'ஆர மார்பு' என்னுங் குறிப்புகளால் இத்தலைவன் அந்தண வகுப்பினனென்று நச். கருது தல் நினைவிருத்துதற்குரியது.

(கக–உ௫) 'புலம் புகழ் ஒருவ', இது நல்லதொடர். 'வந்து நீ குறை கூறி' யென்றது, நீ வந்து நினக்கு மகள்வேண்டும் என்னும் நின்குறையைக் கூறியென்க. "புது நாண் ஒடுக்கமுங் காண்குவம் யாமே" (அகம். ககஉ) என்றார் பிறரும்.

## கள

(க–எ) யானைகள் தமக்கு மாறான யானைகளோடு, தங் கொம்புகள் முறியும்படி குத்திப்போரிடும் உண்மையைப் பிறருங் கூறுவர். (சிந். ம:௧எ௫). குருதிதோய்ந்த கோட்டுநுனி, செங்காந்தண் முகைக்கு உவமை. 'அயன்': பள்ளம்.

(அ–கக) தாழிசைகள் ஆற்றுவித்தலருமை கூறின. 'கயல் உமிழ்நீர்', கயல் வடிக்கும் நீர். இரையுண்ணுங்கால் மீன்கள் நீரை வடித்துவிடும் இயல்பொருட் கருத்துடன் இது கூறப்பட்டிருக்கின்றது. நச். காலுதல் என்றுரைத்ததற்கும் இப்பொருள் பொருந்தும். 'கயல் உமிழ் நீர்' என்பது கண் பனிகலுழற்கு முற்றும் உவமையாய் வந்த நயம் தெரிந்து மகிழ்க. வளைமட்டுங் கழலாமற் கண்ணுங் கலுழுதலால், துன்பம் ஆற்றுவித்தல் அருமையாயிருக்கின்றதென்பது கருத்து.

(கஉ–க௫) 'பனி': நடுக்கம். 'படர்': வருத்தம். நுதல் வனப்பிழத்தலால், அவ் ஆற்றாமையால் தெய்வம் பரவும்படி நேர்கின்றதென்பது கருத்து.

(கசு–கக) 'அழிவுற்று': அழிவுறுத்தி. கனவிலும் இவள் வருத்தம் மிக்கு ஆற்றாமையுடையளாயின், இவளுயிரைப் போகாமல் நிறுத்தவுங் கூடும்; ஆனால், இவள் கனவில் மட்டும் நின் சேர்க்கை பெற்று ஆறுத லடைகின்றமை கொண்டு நனவில் அது பெறாமையால் மேன்மேலும் வருத்த மிகுதலின், இவளுயிரைப் போகாமல் நிறுத்துதல் கூடாமையாயிருக்கின்ற தென்பது கருத்து.

(உ௦–உச) 'விளியா நோய்': அழையா நோய்; தானே நேர்ந்த நோய் என்றற்கு நச். 'கெடாத நோய்' என்றுரைத்தார். 'விளியா வெவ்வம்' என்றார் (உகஉ) அகத்திலும். முளிவு: உலர்தல்.

## கஅ

கொடிப் பூக்கள் போலவுங் கோட்டுப் பூக்கள் போலவும் பொன்னாற் செய்யப்பட்ட மலர்களாலான மாலை யென்பது, முதலிரண்டடிகளின் பொருள். 'பூவாப்' பூவாதலாலும், தழலால் நிறம் பெறுதலாலும் 'நீரின்றி

நிறம்பெற' என்றார். 'பொடி அழல்': பொடி மூடு அழல்; கலி. அடு : உ-ற் 'பொடியழற் புறந்தந்த' வென்பதற்குப் 'பொடி மூடு தழலாலே நிறம் உண்டாக்கப்பட்ட' என நச். உரையெழுதி யிருப்பது காண்க. 'பொடி' யென்றது, இங்கே தீய்ந்து போன கரித்துண்டுகள். பொடிதல், தீய்தற் பொருட்டாதல் "தங்கண் பொடிவ தெவன்" (கலி. ரு௫ : கூய) என்பத னுரையாற் பெறப்படும். நீறனமையின், திருநீறுக்கும் 'பொடி' யென்பது ஒருபெயராயிருத்தல் காண்க; முதனிலைத் தொழிலாகு பெயர். 'புறந் தந்த': புறத்தே ஒருவடிவந் தந்த; பண்ணப்பட்ட என்பது கருத்து. இஞ்ஞான்றும் இதனை ஒரு மெய்ப்பொருட் குறியீட்டு மொழியாக வழங்க லாம்; பழமுதலிலக்கியங்களில் இங்ஙனம் அங்கங்கே கிடப்பன பல. 'தொடி செறியாப்பு': வளைகள் செறிவாய்ப் பொருந்தி நிற்கும் பொருட்டுக் கட்டுகின்ற கட்டு வடம். 'தோளாய்' என்றது, தலைவன், தலைவியை விளித்தவாறு. நச். நரந்தம் பூ வென்றதற்கு நரந்தம்போலும் மணமுள்ள பூவெனப் பொருள் கொள்க. 'நரந்த நறுமலர்' என்பதற்குப் (பரிபா. கக-கடு) பரிமேலழகரும் இங்ஙனமுரைத்தார். 'நரந்தம்': கத்தூரி. 'குரல்', கட்டுப் பொருந்து மிடம்; நச். அதனைப் 'பற்று' என்றார். 'மோக்கலு மோந்தான்' என்பது, 'உண்ணலு முண்ணேன்' என்றாற் போல்வது (கலி. உகூ-ன் விளக்கம் பார்க்க). 'செறூஅச் செங்கண்', 'பறூஅக் குருகு' என்பவை முறையே பரிபாடலிலும் (கரு : ௫௭), மணிமேகலையிலும் (கக : உ௮) வந்தமை நினைவு கூர்க. தொய்யலைத் தொய்யிலெனச் சொல்லையே வடிவு பிறழ நச். உரைப்பது பொருந்தாது. 'தொய்யலந் தடக்கை' யென்பதற்கு, 'நிலந்துழாவுதலையுடைய அழகிய கை' யென உரைத்து யானைக்கு ஆக்குதல் சிறப்பாம். "தொய்யாது வித்திய" (மலை படு. கஉஉ) என்னுமிடத்து இவ் வுரையாசிரியரே 'உழாமல் விதைத்த' என்னுங் கருத்தில் உரைத்தலால், 'தொய்யல்' என்னுஞ் சொல் இங்கே 'நிலந் துழாவுதற்' பொருட்டாம். 'இளமுலை தைவந்து மருட்டலும் மருட் டினன்' என்று கொள்க.

'கடி': மணம். 'கற்பென்னும் நன்மையை விரும்பி அவனையே மணம் புரிவது செய்தனள் இவள் என்று இம் மன்னு உலகத்து நினக்கும் எனக்கும் புகழ் மன்னுவது புரையும்' எனத் தலைவி கூறுவதாகஇருந்தவாறே வைத் துப் பொருளுரைப்பது நல்லது. நச். 'இவளெனக் கூறின்' என இயைப்பது இயல்பாயில்லை. 'மன்றவுலத்து மன்னுதல் புரைமே' யென் றமையால், தமிழ்நாட்டில் மகளிரும் தமக்குப் பின்னும் தம் புகழ் நிலைக்கு மாறு ஒழுகும் நோக்கமும், அதன்கண் உறைப்பும் உடையாரென்பது பெறு தும். 'புரைமே', இங்கு முற்றாதலால், இது 'மெய்யொடுங் கெடுமே' யென்னும் (தொல். வினை: சுக) இலேசினாற் கொள்ளற்பாலது.

## கக

(க—ரு) ‘மின் அறல்’: அணிகலன்கள். ‘பெயல்’, கூந்தல். ‘பொன் அகை’ எனப் பிரிக்க. ‘அகைத்தல்’: கூறுபடுத்தல். ‘வகிர்’: வகிர்ந்த தலையணி, பிரிவுகள் தோன்றச் செய்யப்படும் தலைக்கோலம். ‘போழ்’ என்பதும் அது. நச். இதனைத் தாழம்பூப் போல் வகிர்ந்து செய்யப்பட்ட அணிகலன் எனக் கருதினார். ‘நன்னுதா’ லென்றது, தோழியை. வகைநெறி, கூந்தல்; அன்மொழித் தொகை.

(கசு—உஉ) ‘பையென’: மெல்ல; “பையெனக் கவிழ்ந்து” என்பதன் (சிந். ரு : உ௰) உரையிற் காண்க. ‘ஒற்றி’: ஒருங்கு பின்பற்றிப் பார்த்து; ‘வேவு பார்த்த’ லென்பதை நினைவு கூர்க. “இல் வழங்கு மடமயில் பிணிக்குஞ் சொல் வழங்கு வேட்டுவனாயினன்” எனப் புறத்திலும் (உருஉ) தலைவன் வேட்டுவனெனப்பட்டமை நினைவுகூர்க. நாணத்தால் தயங்குங்கால், புலையர்போலப் புன்கண் நோக்கினானென்பது. அறிந்தே அன்பினால் இங்ஙனஞ் செய்தானென்றற்கு ‘ஏழைத் தன்மையோ இல்லை’ என்றாள்.

## உ0

(க—க) ‘பொதும்பருள் நீர்க்கால்’ என்றது, நல்ல இயற்கை யழகு. நச். தொத்துக்கள் என்றார், கொத்துக்களை. கண்கூடு கூழை: தலைக்கூடின மயிர். தலைக்கூடலாவது ஒன்றுதல்; ஒரே கற்றையாய்ச் செறிந்த முடியென்க. ‘நல்கூர்ந்தார் செல்வ மகள்’ என்பதன் விளக்கம் மேற்கூறப்பட்டிருக்கின்றது. (கலி. ரு௰).

(கரு) ‘இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து’ என்பதை இளம்பூரணர், பாட்டிடைவைத்த பொருட்குறிப்பாகிய உரைவகை நடையென்றது (தொல். செய்: கசுசு) நினைவுகூர்ந்துகொள்க.

(கஎ) ‘நல்லாய் கேள்’ என்பது தலைவன் நெஞ்சொடு கூறியதாகாது. வெளிப்படையாகக் கூறியதெனவே கொள்ளலாம்.

(கஙு—கஅ) ‘பெடை’, பெண்மையென்னுங் கருத்தில் நச். உரைத்தார். ‘தூறு’, கல். “கல்லுண்டு கடிய வெம்புங் கானுறை புறவமெல்லாம்” என்றார் பிறரும். (சிந். சு : கக)

(ககூ—உஉ) ‘நுணங்கு’: நுண்மை; நச். புகரினது நுண்மையென்றது, அழகினது நுண்மையென்று கொள்க. எழிலில் நுண்மை முன்னும் வந்தது (கலி. ௪). ‘முழங்கு நீர்ப்புணை’ யென்பதில் நச். வல்லமையாய்ச் சென்றார்.

உக

(க—எ) 'என்ற' என்றது பாருபடுத்தப்பட்ட உவமச் சொல்லன்று; மரபான் வரும் உவமச் சொல் என்பர் இளம்பூரணர் (தொல். உவ: கஎ). குறிஞ்சி நிலத்துக்கே தலைமகளாதலின், அவள் மனை 'வியன்நகர்' எனப் பட்டது. 'தளர்பு ஒல்கு இளமையான் இகத்தந்தாய்' என்று இயைத்துக் கொள்க.

(அ—கக) 'கூடல் நீலம்' என்றது, கூடல் நகருக்கு மேற்புறத்திலுள்ள திருப்பரங்குன்றத்துச் சுனை நீலம் என்று கொள்வது பொருந்தும். "கூடற் குடாஅது...குன்றத்து...சுனை நீலம்" என அகத்திலும் (கசக) வருதல் காண்க. 'எந்து கோடு' என்பதன் உரை அழகிது.

(கரு—கக) பொதியிற் பொருப்பைக் 'கோடுயர் பொருப்பு' என்றது நினைவிருத்துக. 'மதவலி' யென்பதன் உரையுங் கருத்திருத்துக. மருப்பு வமை கூறலிற் 'காழ் கொண்ட' வென்பதற்குத் திண்மைகொண்ட வென்றுரைப்பின் சிறக்கும்.

இத் தாழிசைகளில், தென்னனுக்குக், கூடலும் அசோகந் தண்காவும் பொதியிலுஞ் சிறப்பிக்கப்படுகின்றன.

(உ0-உரு) 'யான் இனையன கூற, அவள் கவிழ்ந்து நிலநோக்கி யான் கூறியவெல்லாம் நினைந்து பின் ஏதோ நெடியதொன்று நினைப்பாள்போல் தோழியர்க்கு அமர்த்த கண்ணளாய்ப் பெயர்ந்தனள்' என இருந்தவாறே உரைப்பின் இனிதாயிருக்கும். 'நினைப்பாள்போல்' என்பதற்கு நச். விருத்தியுரையிற் கூறியதே உரையாகக்கொள்க. 'அமர்த்த' என்றதும் அதற்கு. இவ்வளவு அழகுபெற இயல்பாயுள்ள இவ்வடக்கியற் பொருளை நச். நிலைகுலைத்துச் சிதைத்தார்.

இது, காமஞ்சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலா இடும்பை யெய்தித் தானே சொல்லி யின்புற்ற நிலைமையைத் (தொல், அகத்: ருஉ.) தலைவன் பாங்கற்கு உரைத்தது. அடக்கியற் கருத்தால் இது பெறுதும். ஏமஞ்சாலா இடும்பையில் தானே சொல்லி இன்புற்ற உவகையாதலின், நச். தலைவற்கு 'அசைவென்னும் உவகை பிறந்த' தென்றார்.

உஉ

(க—கூ) 'மால் நோக்கு', வெருவின நோக்கு. 'சுட'ரென்பதை நச். பிறையெனக் கொண்டார். விழுந்தெழுந்ததும் விழுந்தெழாததுமான பற்களென்றது நல்ல உரை. இதனாலுந், தாழிசைகளில் 'இளமையான்' 'மடமையான்' 'சொல்லினு மறியாதாய்' என்பவற்றாலுந் தலைவி காமஞ் சாலா இளமையோள் என்பது பெறப்படும்.

(எ—௧௦) 'உளன்' என்பதன் அன் விகுதி "இலனென்று தீயவை செய்யற்க" (குறள், ௨௧ : ௫) என்பதிற்போலத் தனித்தன்மையில் வந்தது. 'உயவு'; வருத்தம். "உயாவே உயங்கல்" (உரி. ௭௧) என்பது தொல்காப்பியம். பிணிக்கு மருந்து பிறவாதல்போ லன்றித் தன்னோய்க்குத் தானே மருந்தாகலின் (குறள், ௧௧௧ : ௨) 'களைஞரில் நோய்' என்றார். தாழிசைகள் மூன்றிலும் 'அறிந்தும்' என ஆக்க உம்மை வருவித்துக்கொள்க. 'இல்லென்பாய்' என்பதன்கண் நச். உரைக்கும் விரகு அறிந்து மகிழற்பாலது. உரையில் ஒப்பித்து என்றது, ஒப்பனை செய்வித்து என்னும் பொருட்டு; "பிணையேர் மடநோக்கும் நாணு முடையாட்கு அணியெவனோ" (குறள், ௱௮௯: ௯) என்றார் பிறரும். இதுவுஞ் சொல்லெதிர் பெறான் சொல்லி இன்புற்றமையால் அசைவென்னும் உவகையாயிற்று.

## ௨௫

(௧—௧௫) உரையில் நச். இளமை நீங்குதலா லென்றதைக் குழவிப்பருவ நீங்குதலாலென்று கொள்க. ஒன்பதாண்டுகட்கு உட்பட்ட சிறுமியர் (பிங். ௧௫௬௯) உலகம் மழைபெய்து செழுமை பெறவேண்டுமெனவும் (பரி. ௧௧ : ௮௰) தமக்கு நற்கணவர் அமையவேண்டு மெனவுங் (பரி. ௧௧ : ௧௩௫—௧௪௧) கருதித் தைத்திங்களில் நீராடி நோன்பு நோற்பது பண்டைக் காலத்துத் தமிழ்வழக்கம். மார்கழித் திருவாதிரைக்குமுன் பத்தா நாளிலிருந்து துவங்கும் இந் நீராடல்நோன்பு, தைத்திங்கள்வரையிலுங் கூடத் தொடர்ந்து நடைபெறுதலாலும், மார்கழி மதியத்திலிருந்துந் தைத்திங்கள் கணக்கெண்ணப்படுதலாலும், இந்நோன்பின் பயன் தைத்திங்களிலிருந்தே வேண்டப்படுதலாலும் சிறப்பாக இதனைத் 'தைந்நீராடல்' என்று வழங்குப.

(௧௪—௨௬) 'பிறர் மனைப் பாடி எய்திய பலர்க் கீத்த' என்றமையால், தவமுயல்வார் பண்டு பிறர்மனைகளிற் பாடி ஐயமேந் துண்பரெனவும், நாளைக்கு வேண்டும் என விரும்பாமல், அன்று கிடைத்ததை அன்றே, எதிர்ப்படுவார்க்கும் அளித்துவிடுவ ரெனவும் தவத்தோர் வழக்கங்கள் சிலவும் பெறுதும். அன்றியும் அவர்போற் சிறுமியரும் விளையாட்டாக ஐயமேற்றும் பிறர்க்களித்துந் தவமுயல்வ ரென்பதுந் தெரிகின்றமை காண்க.

முத்துப் பதித்துச்செய்த வளையல்களொன்னும் ஒருவகை அணிகலனும்; தலையிற் கிடந்து அசையுந் தலைப்பாளையென்னும் ஒருவகை அணிகலனும் இச்செய்யுளில் வந்தன.

## ௨௬

(௧—௫) 'ஒண் தித்தி' மருங்குலுக்கே கொள்ளலாம். 'முன் கை' யெனப் பின் வருதலின், 'வணங்கு இறை' என்பதற்கு 'வளைந்த விரற்சந்து'

எனப் பொருள் கொள்க (மதுரைக்காஞ்சி, ௪௧௪-ன் உரை காண்க). வரி முன் கை' யென்பதில் 'வரி'; வளையல்.

(௬—௧௧) "மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகி" யென்றார் பிறரும், (சிந். ௩ : ௧௧௰). 'இஃதொத்தன்': இவனொருத்தன்; உயர்திணைச் சுட்டு இஃதென அஃறிணைச் சுட்டாய் வந்தது, இது "செறற் சொல்லாகலின்". (தொல். கிளவி : ௫௬); செறற்சொல், சினந்து வையுஞ் சொல்.

(௧௨—௧௪) 'வாரணவாசிப் பதம்' என்றதற்கு நச். கூறிய குறிப்பு, "மலையத்து நின்று" மென்றவிடத்துப் (திருச்சிற். ௧௩௩) பேராசிரியர் "மலையத்து வாழ்வார் பிறர்க்கு வருத்தஞ் செய்யாராகலின்" என்றாற் போலக் கொள்க.

(௧௫—௨௨) 'ஒண்டொடீ', தலைவன் கூற்று; தோழியை. 'நின்முகங் காணு மருந்தினேன்', இது, தலைவன் கூற்றாகத் தோழி தலைவியைக் கருதிக் கூறியது. 'கொன்', 'இக்காலத்தே' யென்று காலமுணர்த்திற் றென்றார் நச். (பிங். ஒருசொற்; ௪௱௩). 'யாதும்': சிறிதும்.

(௨௩) 'பொன் செய்வாம்': மகளிர் தமக்குள் வழங்கிக்கொள்ளும் ஒரு நகைமொழி; பொன்: பொலிவு; 'பொன் செய்தல்', தோற்றப்பொலிவு உண்டாக்குதல். கணவனொடு கூடுங் கூட்டத்தால் மகளிர்க்குத் தோற்றப் பொலிவு உண்டாதலின், 'கூடுவாம்' என்பதற்குக் குறியீட்டுச் சொல்லாகப் 'பொன் செய்வாம்' என்ப. இவளும் அங்ஙனங் கூறினள்; அந்நகை மொழியைப் பயன்படுத்தியது, இங்கே தான் உடம்படாமை காட்டிற்று.

(௨௪—௨௭) ஒருவர் சொல்லை ஆராயாது அப்படியே நம்பிவிடுதல் எளி தாகலின், தலைவி 'தேறல் எளிதென்பாம் நாம்' என்றாள். அதுகேட்ட தோழி, தானென்றும் அங்ஙனம் ஆராயாமல் நம்பிவிடவில்லை என்று எதிர் சொல்லக் கருதி, அங்ஙனமானால், 'ஒருவன் சாதலும் எளிதென்பாம் மற்று' என்று கூறிய விரகு பெரிதும் பாராட்டி மகிழற்பாலது. "சாதலின் இன்னாததில்லை" (குறள், ௨௩ : ௰) யாகலின், இங்ஙனங் கூறினாள்.

(௨௮—௩௨) 'ஆங்கே': அத்தன்மையே. 'சிறிது', மிக இன்று என உரைத்தார் நச். ஆயினும், உரையாடற் போக்குக்கேற்பத் தலைவி, தலை வனைச் சிறிது சினந்து இகழ்வாள்போலத் தோழியை நோக்கிச், 'சிறிது சார்பு பேச்சு அங்கே; அலரின் அலர்கென நாணும் நிறையும் நயப்பில் பிறப் பிலி' எனக் கூறினளென்றுரைப்பின் இனிதாகவும் இயல்பாகவும் இருக் கும். தலைவனுக்குக் 'காமம் வெளிப்படுந்தோறும் இனிது' (குறள், அலர் : ௫) என்றாராகலின், தலைவி இங்ஙனங் கூறத் துணிந்தாளென்று கொள்க. தோழி 'நயவரவின்று' என்றாள், அருமை கருதி.

இச்செய்யுள் முழுமையுந் தொடர்கள் கிடந்தவாறே உரையெழுதுதற்கு ஏதும் இழுக்கில்லையாகவும் நச். தம் முறையே சென்றிருக்கின்றார்.

தலைவி உறழ்ந்து கூறியது நாண் அடமாட்டாமையாலென்று கொள்க.

## உரு

(க—கச) 'செல்வங் கடைகொள......உரைக்கல்லாதவர்போல' என்பது சான்றோரியல்பை நன்கெடுத்துக் காட்டிற்று. இவரொப்பக் காமுற்றார்க்கும் இவ்வியல்புள்ளதென்றது, சிறந்தவொன்றை உவமையாகவாயினும் புகுத்தி உலகத்தை அந்நெறியிற் படிவிக்கும் அருளினாலென்க. "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லோ .........நன்மொழி" யென்பது (ககூஅ : க-ரு) அகம்.

(கரு—கஎ) 'யாழ', அசை; அசைமொழிகளிலும் இதுபோன்ற இனணிசை மொழிகள் கண்டு அவற்றைப் பயன்படுத்துந் தமிழ்ச் சான்றோரின் இனிமையுணர்வு பெரிதும் உணர்ந்து மகிழற்பாலது.

(கஅ—கக) 'பெண்டிர்', பன்மை விகுதி ஒருமையில் மயங்கிற்று.

'எல்லா நீ' என்பது தொட்டுப் 'பெண்டிராருளக் கிடந்ததெவன் கொலோ' என்பது வரையில் தோழியுந் தலைவனும் உறழ்ந்து கூறிய உரையாடல் இனிக்குந் திறத்தது. தலைவன் இன்னது கருதி இது சொல்கின்றானென்பது தோழிக்குத் தெரியுமாயினுந், தலைவியின் கருத்தறிந்து தலைவன் குறைக்கு உடம்பட வேண்டுமென்றெண்ணித் தோழி வல்லமையாய் வேறு வேறு கூறினாள். (தொல். பொருளி : சச-உரை).

(உ0—உஅ) 'ஒண்டொடீஇ......எந்தை தன் உள்ளங் குறைபடாவாறு என்பது தலைவியொடு தோழி கலந்து உரையாடுங் கூற்று. இப்பகுதியை நச். இருந்தவாறேயும் உரைக்கலாம். "அன்னை என்னை என்றலும் உள" (தொல். பொருளி : ருஉ) என்னும் உம்மையால் தலைவியின் தந்தையைத் தோழி 'எந்தை' யென்பதும் அடங்கும் என்ப.

## உசா

(க—அ) சேனாவரையர் இவ் 'என' என்பதை 'இசைநிறை' யென்றாராயினும் (தொல். இடை : உச), இகழ்ச்சிப் பொருட்டென்பது சிறப்பு; பின் 'இஃதொத்தன் நாணிலன்' என வருதலுங் காண்க; நாண் இன்பம் பெருக்கும் இயல்பினதாதலால் அஃதில்லான்பால் இன்பமில்லையெனக் கருதி, 'நாணிலன் றன்னொடு மேவேமென்பாரையும்' என்றாள். 'யானஃதறிகல்லேன்' என்றான், அறிவு கலங்கினமையின். 'இணர்செல்லாக் கொடி' யென்றார், 'இளங்கொடி' யென்றற்கு. 'தமக்கினிதென்று......நன்றாமோ',

நல்ல அறிவுரை. இங்ஙனம் உறழ்ந்துகூற நேர்ந்தது, இருவர்க்கும் ஒத்த காமவுணர்வு எழாமையின்.

(கூ—கக) 'முதுக்கு உறைமை' யெனப் பிரித்து நச். சொற்பொருள் விரித்தமை நினைவு கூர்ந்துகொள்க. அறிவின்கண் உறைதல் என்பது பொருள். சிறு பருவத்திலும் பேரறிவுடைமை யென்பது கருத்து. நீருக்கு இன்னாமை யுணரும் உணர்வில்லை யென்பது எளிதின் அறியவல்லனாயினும், மீறிய காமத்தால் அறிவு கலங்கினமையின், பொருந்தா உவமை கூறினான்.

(கஉ—கரு) 'ஐந்து வாயினையுடைய அரவு' என்று நச். எழுதியதை, ஐம்பொறியின் உருவகமாகக் கொள்க. தன் ஐம்பொறிகளின் இடைப்பட்டு வருந்துவதைத் தலைவியின் இடைப்பட்டு வருந்துவதாகக் கருதினான், காரியத்தைக் காரணத்தின்பாற் சார்த்தி. 'நை': வருத்தம்; 'வாரா': வந்து. 'அறனெனக் கண்டன்று' என்னுமிடத்து, 'அறன் என', ஒரு மணமுறை யெனவும், 'கண்டன்று', அறநூலாற் காணப்பட்டது எனவும் உரைத்துக் கொள்க.

(கசு—கக) 'அறனும் அது கண்டாயின்' என்பதில் அறன், அறநூல். வலியநேர்தலின் முன் தொடர்புண்டெனத் துணிந்தாள். இது, பின் தலைவியுங் கூடக்கருதிய பெருந்திணை; பெருந்திணை கிழோரியல் பென்பது, "அடியோர் பாங்கினும்" (தொல். அகத் : உரு) என்பதனலறியப்படும்.

## உஎ

(க—ரு) 'தொழூஉம், அதனைப் பிறர் காண்பார் ; தான் தூக்கிலி' யென்பது ; தூக்குதல், ஆராய்தல். 'கைகவித்து': விலக்கி. 'இடம்': காலப் பொருளில் வந்தது.

(சு—கூ) 'பூக்குழை': பூவாலான குழை ; 'செல்லல்': வருத்தம் ; 'இற': போ.

(கஉ—கரு) 'வந்தை' யென்பதில் ஐ முன்னிலைவினை விகுதி (குறள், கருக ; க). 'மெய்தொடுதல்', 'அடிதொடுதல்' என்பதுபோல ஒரு சூளுறவு கொள்ளுமுறை.

(கச) 'அடங்கக் கேள்': அமையும்படி. கேள் என்பது நல்லது ; நன்றாகக் கேள் என்றபடி.

(கரு—கஎ) நிலங் கீறலைப் பிறரும் 'நிலங் கிளையா' (அகம். கரு) என்றனர். 'மற்றவன் றன்னொடு நின்றுவிடு' என்றதனால், தோழி, முன் கூட்டமுண்மையைத் தான் அறிந்துகொண்டமை நகையாடித் தோற்றுவிப் பாளாயினளென்க. தோற்றுவித்தது, மேலுந் தன்பால் நாண்கொள்ளா மைக்கு.

## உஅ

(க—கக) 'மணிமுகப் பின்' எனக்கொண்டு மணியைத் தன்னிடத்தே யுடைய பின்னலின் மயிர் என்னுங் கருத்தில் உரைத்தார். 'பின்னல்' எனின் மதியை மறைக்கும் அரவெனவுங் கொள்ளப்படுமாகலின், மழை என்றதற்கேற்ப நச். அப் பின்னின் மயிர் என்றார். 'நூல் சுற்றிய': நூலால் மாலையாகச் சுற்றிக் கட்டிய. கார்த்திகைமீன் ஒளிமிக்குப் பலவாதலின், கூந்தலிற்கிடந்த ஒளியுள்ள பல மலர்க்கு உவமையாயிற்று. 'பொன்படுதல்': கூட்டத்தால் தோற்றப்பொலிவு கொள்ளுதல். தலைவனொடு கூட்டங் கொள்க வென்பதைப் 'பொன் செய்வாம்' என்னும் ஒரு குறியீட்டுச் சொல்லாக மகளிர் வழங்கும் நகைமொழியொன்று முன்னும் (கலி. சுடு) வந்தது.

(கஉ—கஅ) 'மற்றிலைதோ': பின்னை இக் களவொழுக்கத்திலும் என்னும் பொருட்டு. இரு கண்களுமென்றற்கு, ஒப்ப மலர்ந்த என்றார். புணர்ச்சியிற் கண்மலர்ந்துஞ் சிவந்தும் பொலிவுபெறுதலின் தாமரைகளாயின வென்றற்குக் 'குவளையோடு இகலி' எனப்பட்டது.

(கக—உஉ) 'இரும்பு': கத்தி; கத்தியாற் கீறி நீக்கிய வடுப்போன்ற உண்கண் என்பது பொருள்.

(உரு—உரு) 'உண்டான் தலைப்பெயின் வேந்து கொண்டன்ன' என்பது ஒரு வழக்குச் சொல்.

(உசு—ருo) 'உத்தி,' உதிர்ந்து எனல் பொருந்தும்.

## உகூ

'அல்கல்': இராக்காலம். மன்பதை யென்பதற்குப் புறநானூற்றுரைகாரரும் (உாம: க) உயிர்ப்பன்மை யெனவே உரைத்தார். இதனுள் எல்லா உயிர்களும் அடங்கும். உரையில் 'வாங்கி உடுத்து' என்றார், தலைவியாதலின் பணிப்பெண்கள் சூழவிருக்குந் தலைமை கருதி. இது போன்ற இடங்களில் நச். மிக விழிப்போடு உரை யெழுதுதல் அவரது மையை நன்கு விளக்குகின்றது. 'கார்': ஆகுபெயர்; 'குறழா': குனிந்து; முதிய எருதாகலின் வைக்கோலை மெல்லமாட்டாமை கருதி, நச். தமது விளக்கத்தில் 'நுகர்தலாற்றாமை காட்டி நின்றது' என்றார். 'பக்கு': பை, (ஐங். உக : க): அலறிக் குழறின இழிவு தோன்றப் 'பாடி' யெனப் பட்டது. 'கேழ்': ஒளியுள்ள வரிகள். 'எதில்': அதற்கு அயலதான வென்க. 'வாழ்க்கை,' தொழிலென்னும் பொருட்டு. 'வீழ்க்கை': விரும்புதல். 'கார்க் கரும்பைப்' பசிய கரும்பு என்றமையின் (பட்டினப்பாலை யுரை, க)

இங்கே கருங்கூத்தைத் 'தண்ணிய நாடகம்' என்றார்; காண கருத நகை விளைத்தலின் என்க. 'குறுநரி பட்டற்றாற் கூத்து விளைந்தது' என இயைத்துக் கொள்வது சிறப்பு.

குறிஞ்சிக் கலி - உரை விளக்கம்

முற்றும்.

## ௩. மருதக்கலி

### ௧.

(க—அ) 'வீங்கு நீர்': வயலிற் பெருகுகின்ற நீர்; 'அவிழ்ந்த' என்பதற்கு முற்றி விரிந்த என்னும் நச். உரை அழகிது. 'பகர்தல்' என்பது விலைபகர்தலுக்கே பெரும்பான்மையும் உரித்து; கூறு கூறாகப் பகுத்து விலை கூறுதல் என்பது பொருள். 'வயற்கொண்ட ஞாங்கர்', வயற் கொண்டபோது என உரைப்பின் இனிதாயிருக்கும்; அப்போது அவ் வயல்களின் இடையே உள்ள பொய்கைகளின் வண்டுகள் இந் நீலமலரைச் சூழ்ந்துகொண்டு ஊர் புகுந்ததெனக் கொள்க; ஆகவே 'வீங்குநீர்' என்பது பொய்கைநீ ரன்று, வயல்நீரே யென்பது நன்கு துணியப்படும். 'வரி வண்டு' என்பதில் 'வரி' என்பதற்கு இடத்துக்கேற்பப் 'பாட்டு' என்றுரைத்தார். 'ஊதுதல்', நுகர்தலென்னும் பொருட்டாதல், "குறுஞ் சிறைப் பறவை வேங்கை விரியிணர் ஊதி" (௧௯௨) என்னும் அகநானூற்றினுங் காண்க. விருந்து அஃறிணை முடிபில் வருதல், "அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும்" (தொல். சொல்: ௫௯) என்பதனாற் கொள்ளப்படும்.

(௯—௧௨) 'பொது' என்னுஞ்சொல், சிறப்பின்மையை உணர்த்துதல் புறம். ௫அ: ௭௪-ன் உரையிலுங் காண்க. 'இல்லத்தே நான் வருந்தி உளம் மெலியப் பிறரும் என்னை அலர் தூற்ற அவற்றைப் பார்த்துக்கொண்டு நீவிர் பரத்தையர்பாற் பெற்ற மகிழ்ச்சியினும், பரத்தையரோடு நீவிர் நன்கு மகிழ்ந்து அந் நறுமணத்தோடு வரும் இக்கோலத்தை யான் கற்போடிருந்து இவ்வகையிற் காணப்பெற்றது மாட்சிமையானதன்றோ?' எனக் கூறி ஊடலமைந்தாளென்பது. மேல் தாழிசைகட்கும் இஃதொக்கும்.

(௧௯—௧௯) 'நோய்த்தலையும்': நோய்க்கு மேலேயும்.

(௧௭—௨௰) 'துணங்கை' யென்பது, இங்கே, மகளிர் மகிழ்ச்சியாற் கைகொட்டிக்கொண்டு நுடங்கியாடுங் கூத்து. இக்காலத்தே இதுபோல் வதைக் 'கும்மி' யென்பர். இத்துணங்கைக் கூத்தின்கண் மகளிர்க்குப் பாட்டு உண்டு; முழவு முதலிய வாச்சியங்களும் உண்டு; "நின் தமர் பாடுந் துணங்கை" (கலி. ௭௰: ௧௪), "முழவு இமிழ் துணங்கை" (அகம்,

ருகூசு : கசு) என்பன காண்க. 'ஒளி பூத்த நுதல்' என்பதில் ஒளி, பெண்மையொளி. காமம் தீர்தலின், 'தட்ப' என்றார்.

(உஉ—உ௫) 'கடாஅம்': செலுத்தும். 'எம்மை அருளினை; இந்த இடையீட்டால் நின் பரத்தையர்க்கு அன்பு கெடும். அது கெடாதவாறு சென்று நிறுத்து' என்றாள் தலைவி. இவ்வகற்சியால் இன்னும் அணுக்க உணர்வு தோன்றினமையின், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்ததெனை நச். உரைத்தார்.

உ.

(க—௫) 'தோட்ட', பெயர். புலவராற் பாடப்பெறுதல் எஞ்ஞான்றும் ஒரு பெருஞ்சிறப்பாதலின், 'புலவர்வாய்ச் சிறப்பெய்தி' என்றார். வையை குறிப்பிட்டமையாற் பாட்டுடைத் தலைவன் பாண்டியனென்பது பெறப்பட்டது. அவனே இங்குக் கிளவித் தலைவனாகவுங் கூறப்படுதலின், குறிப்பாற் பெயர் சுட்டியவாறாயிற்று. அகத்திணையில் தலைவன் இன்னான் என்பது தெரியக்கூறுதல் மரபல்லாமையால் (தொல். அகத்: ௫௪ ; ருரு) நச். இதனை 'அகப்புற'மாயிற்றென்றார்.

(ய—யரு) 'பாடு அழி சாந்தினன்' என்பதற்கு, வடுப் படுதலால் அழிந்த சாந்தினன் என்று உரைத்துக்கொள்க. மேல், "மறுப்பட்ட சாந்தம்" (கலி. எரு : கரு) என வருவதற்கு நச். 'பாடழிந்த சந்தனம்' என உரைப்பது காண்க.

(கச—கஎ) 'இனிப் புணர்ந்த எழில்' என்றார், 'புதிது பூப்பெய்திய நல்லார்' என்றற்கு. 'தனி' என்பதை நச். பெயராகக் கொண்டுரைத்தமை கருத்திருத்தற்பாலது. 'தனி இல் நெஞ்சே' யென்பதில் 'தனி', தன்னுரிமை யென்னும்பொருட்டு. அவ்வுரிமையிற் பண்டு கருத்திருந்தமை இதனாற் பெறுதும். நச். இதனுரையில் 'மனம்' வேறாகவும் 'நெஞ்சம்' வேறாகவும் உரைத்தமை நினைவுகூர்தற்குரியது. மறுத்துரைப்பதுபோற் கூறியது நாண் மிகுதியாலென்க.

(கஅ—உக) 'தூ' வலிமை; மேலும் வரும். 'எண்ணியவை யெல்லாம்............நெஞ்சுடையார்க்கு' என்பது யாவர்க்கும் பொதுவான உயர்ந்த அறிவுரையாம். பிற துறையில் ஒழுகுவார்க்கும் முதன்மையாய்ப் பயன்படுமாறு இங்ஙனங் கலித்தொகையில் வருவன பல. மாந்தர்க்கு இந் நூல் அரிய அறிவுரைக் களஞ்சியம்.

௩.

(க—௫) அறிவுரைகளின் பெருமை கருதி, 'இடல்' என்றார். 'வல்லவர்' என்றது, ஊரனுக்கு ஆசிரியரை. 'செவி': ஊரனது செவி; செய்யைச்

செறுவென்பது அருவாநாட்டு வழக்கு என்பர் நச். (தொல். எச் : ௬). 'புது மொழி' யென்றமையாற், பொருளாலும் நடையாலும் அணியாலும் புதிய வான பாட்டுகளைப் பண்டைப் புலவர் தம் உரிமையாய் இயற்ற வல்லவர் என்பதும், அவையே மாந்தர்க்குக் கவர்ச்சியும் மகிழ்ச்சியுந் திருத்தமுந் தருமென்பதும் விளங்குகின்றன.

(௬–௧௧) 'ஊரன் உரனல்லன்' என்று ஒருத்தி சொல்ல அதனைக் கேட்கும் மற்றொருத்தி தானும் அங்ஙனமொன்று சொல்லுவளேயல்லாமல் ஏதுஞ் சொல்லாதிராளாதலின், 'உடன் வாளாது' என்னும் எதிர்மறைச் சொல்லை நச். 'ஒருவர் கூறியது ஒருவர் கூறுதே'யென அவ் வெதிர் மறை வாய்பாட்டிலேயே உடன்பாட்டுக் கருத்து வர உரைத்துச் சென் றமை பெரிதும் அறிந்து மகிழற்பாலது. 'நினைவு வாடு நெஞ்சத்தேம்' என்பது, 'நினைவாடு நெஞ்சத்தேம்' எனத் திரிந்தது. நோதல் பரத்தையர் இயல்பாதலின், அவரோடு ஒப்பாகி யாங்களும் நோவேமோ என்றாள்.

(௧௨–௧௫) ஆடுகள் தழை கறிக்கும்பொருட்டு, ஆயர்கள், மரத்தின் கிளைகளை அம் மரத்திலேயே தொங்குமாறு வெட்டி முறித்துத் தாழ வைப்பர். இது பெரிய வதையாகக் கருதப்படுதலின், 'இடையன் எறிந்த மரம்' (பழ. ௬௧௬) போல் என உரைப்பது மரபாயிற்று. 'செப்பு': மலர் வைக்குங் குடலை; இது பித்தளை செம்பு முதலியவற்றாலுஞ் செய்யப்படு மாகலின், 'செப்பு' எனப்பட்டது. " மடைமாண் செப்பின் தமிய வைகிய பெய்யாப் பூவின் மெய் சாயினளே" என்னுங் குறுந்தொகைத் (௯) தொடர் கள் இங்கு நினைவுகூரற்பாலன.

(௧௬–௧௯) 'ஒலி கொண்ட சும்மை,' ஒலியோடு கூடிய ஆரவாரம். இழிவு தோன்றப் பாணனைப் 'புலைய'னென்றாள். நீவிர் பரத்தையரை அணுகுதற்குக் காரணமான பாணனையே நேராகக் கண்டபின், இனித் தேரோட்டும் பாகனைப் பழிப்பதனுல் என்ன பயன் என்பதற்குப் 'பாகனைப் பழிப்பேமோ' என்றாள்.

(௨0–௨௬) 'வேளா', வேட்டலின் எதிர்மறை. பழைய நிலையைப் பெறுதற்கு ஏக்கறுதலில் முயங்கும் எண்ணமும் உண்மையின், 'ஏக்கற்று முயங்குமாறுபோலே' யென்றுரைத்தார்.

௯

(௧–௭) 'ஓதுடை அந்தணன்' எனவே கொண்டு, ஓதுதலையுடைய அந்தணன் எனினும் ஆம். அன்னம் தன் பெடையொடு திரிதருஉம் என்னும் பொருளுக்கேற்ப மடந்தை தன் துணையாக அந்தணன் எரிவலஞ் செய்வான் என்பது இனிய உரை. எனவே, இஃது அந்தணனது திரு மணத்தைக் குறித்தவாறும். அன்னத்துக்கேற்ப அந்தணன் கூறப்பட்டா

னென்க. வதுவை நாள் எவராலும் விரும்பப்படுவ தொன்றாகலின், 'காதல்கொள் வதுவைநாள்' எனப்பட்டது. நச். முன்பின் மாற்றுதலாற் சிறந்த பொருட்பேறு மில்லை; முரணாகவும் உள்ளது.

(கசு—கக) 'உகுத்தீவாயோ' என்றமையாற் பாழே என்பது பெறப் படுதலின் நச். அதனைக் கூட்டியுரைத்தார்.

'பரத்தை துணிவுடையள் நிறையுடையள் தன்னுடையள் என்பனவே நின் கருத்தாயிருப்பவும், என் விருப்பத்துக்காக அவளைத் துணிவிலள் நிறையிலள் தன்னிலள் என்றுரைப்பதும் முறையாமோ'வெனக் காமக் கிழத்தி கூறினளாகக் கூறுவது முறையே இத்தாழிசைகளின் கருத்து.

(உக—உச) இது மிக்க அமைதியும் அறிவும் வாய்ந்த திறமான ஊடல்; தொல். அகத்; கசு-ன் உரையில் இவ்வுரையாசிரியரும் இப் பகுதி யையே ஊடலுக்கு எடுத்துக்காட்டாகக் காட்டியதும் நினைவுகூர்க.

## ரு

(க—சு) 'மணிநிற மலர்' என்னுமிடத்துப் 'பல மணிகள் போலும் நிறங்க' ளென்று உரைக்கத் துவங்கியது அறிவார்ந்த உரையாம். இப் பகுதியின் ஈற்றடியிற் 'பன்மலர்' என வருதலும் இதற்கு ஆக்கமளிப்பது காண்க.

(எ—ய) 'பாயல் கொண்டு' என்பதற்குத் துயில்கொண்டு என உரைக்கலாமெனினும், 'படுக்கையையும் இடமாகக் கொள்கையினாலே' என உரைக்கும் நச். உரையே திறமானதென்க. ஏனென்றால், தாழிசைகள் மூன்றிலும், வருத்தத்தால் துயில் கொள்ளாத கண்கள், முறையே படுக்கை யிற் பொருந்துதலாலும் அருகிருக்கும் புதல்வனை மெய்யுற்றுச் சிறிது மகிழ்ச்சி கொள்ளுதலாலும் நீர் அறாது நிரம்பிவிடுதலாலும் மிக அரிதாகவேனும் இமைகள் கூம்ப நேர்தலின், அப்படியே சிறிது கண்ணுறக்கமுங் கொள்ள இடமாகக் கூடும் என்னுங் கருத்துகள் பெறப்படுதலின் என்க. படுக்கையை இடமாகக் கொள்ளுதலென்றார், வருத்தத்தாற் குப்புறக் கவிழ்ந்து படுத்து முகத்தைப் படுக்கையொடு சேர்த்தலால், கண்கள் அணையிற் படிந்து அதன் மெத்தென்னும் உணர்ச்சியால் துயில்கொள்ள நேர்தலைக் கருதி. 'இயைப' 'ஆல்' என்பவற்றின் உரைகள் மிக ஆற்றலானவை. நீர் அறாது நிறைந் தொழுகும்போது இமைகள் திறந்திருக்கமாட்டாமற் கூம்ப நேர்தலின், மூன்றாந் தாழிசையில் 'நீர் இதழ் புலராக் கண் இமை கூம்பல்' என்றார். தங் காதலரைப் பிரிந்த மகளிரின் துன்பநிலை இத் தாழிசைகளில் நன்றாக எடுத்துக் காட்டப்படுகின்றன. 'துணைமலர்க் கோதை' என்பது, மலர் களை இரட்டையிரட்டையாக இணைத்தெடுத்துக் கட்டும் ஒருவகை மாலைக்கு

வந்தது. ஏற்ற அறிவுத்திற னுடையாரே பாராட்டுதற் குரியராகலின், 'கலைகளெல்லாம் முற்றக் கற்று முதிர்ந்த' என உரை விரித்தார். ததும் புதல் ஒலித்தற் பொருட்டாதல் "முழவின் ததும்பி" (௭௮) என்னுங் குறுந்தொகையானும் உணரப்படும். 'முழவு வந்து' என்பது 'முழவந்து' எனத் திரிந்து நின்றது.

(௧௧—௧௪) 'ஓவா' என்பதற்கு நச். இடத்துக்கேற்ப உரைத்தார் 'நகர்': மனை.

(௧௫—௧௬) 'தெண்மணி' யென்பதில், தெளிவு ஓசைக்கே அல்லது மணிக்கு அன்றாதலின், 'தெளிந்த மணியோசை' யென்று திறமாக உரைத்தமை அறிந்து மகிழ்க.

(௨௰—௨௩) அரணுள் இருப்பதுபோற் கிழத்தி இல்லத்துள் இருத்தலின், 'மெல்லியான்' என்பதைப் பொதுவாக உரையாது, 'அகத்துழிஞை யான்' என உழிஞைத் திணையொடு படுத்துரைத்தார். 'கொச்சி' யென ஒரு திணைகொள்ளுதல் ஆசிரியர் தொல்காப்பியர்க்குக் கருத்தன்மையின் உழிஞைப் பெயராலேயே நச். 'அகத்துழிஞை' யென்றாரென்க. 'கல்லா வாய்' என்றது, கிழத்திக்குப் பாணன்மேல் உள்ள வருத்தத்தின் அளவைக் காட்டிற்று.

௭௰

(௧—௮) தேன் உண்டும் அமையாமல் அவ்விடமே திரிதரும் வண்டு களின் இயற்கை தோன்ற நச். இப் பகுதியின் முதலில் உரைத்தார். 'அறல் வார' என்னுமிடத்து நச். சொற்பொருள் தோன்ற உரைக்கும் அழகும், அதனாற் கருத்து முதன்மையுற்று மாட்சிமைப்படுமாறும் அறிந்து கொள்க. இம்முறை உரைத்திறத்தில் மிகச் சிறந்ததாகும். 'அறல்' என்பதை அற்று விழுந் துளியெனக்கொண்டு கண்ணின் நீராகிய துளி துளித் தொழுக என அப்பகுதிக்கு உரைக்கலாமேனும், இதனினும், நச். உரையின் பொருட்செறிவும் இயற்கையும் எவ்வளவு கவர்ச்சியாயிருக்கின்றன வெனக் காண்க. அவ் வருத்தத்தைக் கண்டு தன் அடியைச் சேர்ந்து என்று உரைத்தொடரிற் பொருள் கொள்க. அவ் வருத்தத்தைக் கண்டு இனிதாக அமர்ந்த எனப் பொருள் கொள்ளலாகாது. அறல் வார நகுபவள் முகம் நன்கு மலராது; ஆகவே அது பனியின் மிகுதியால் நன்கு மலராத தாமரைத் தனி மலர்க்கு உவமையாயிற்று. 'தனி மலர்' என்றார், கிழத்தியின் தனிமை தோன்ற; உள்ளுறைகளை முதலிற் கருதியே அதன்பின் கருப்பொருள்களை அமைத்துச் செய்யுளியற்றும் முறை இப்பகுதியில் நன்கு விளங்குகின்றது.

(கரு—கசு) "ஈனுத் தாயர் மடுப்பவும் உண்ணுள்" (அகம். ௩௫) என்பதிலும், மடுத்தல் தன் முயற்சியதாதல் தெளியப்படும். 'எடுத்துக் கொள்வதுபோலுந் தொடிவடு' என்னும் பாட்டழகு பெரிதும் நினைவுகூர் தற்குரியது.

(கஎ—உ0) பஞ்சுத் துய் போன்ற மகளிரின் நீண்ட கூந்தல், சேர்க்கை யாற் குலைந்து பரந்து அணைமேல் மெத்தென்று நீளக் கிடத்தலின், அதன் மேலேயே ஆடவர் கவிழ்ந்து துயில் கொள்ளுதல் கருதிக் 'கூந்தலணை' நூல் களுட் கூறப்படுகின்றது. 'கமழு நின் அலர் மார்பு' என்றமையால் இங்கு அவ்வியல்புகள் நன்கெடுத்துக் காட்டப்பட்டன. 'அணங்குபோற் கமழு' மென்றமையின் தெய்வத்தின் இயற்கைமணச் சிறப்பு நன்கு விளங்கிற்று.

கிழத்தியினிடம் தலைவனுக்காகப் பரிந்து பேசும் பாகன் பாணன் பாங் கன் என்பவர்கள் முறையே இத்தாழிசைகள் மூன்றிலுங் கூறப்பட்டனர்.

(உஉ—உரு) 'ஓர் யாண்டுக் கொருநாள் வருதலின் இவ்வரவு, வாரா நாட்களிலும் மிக்க வருத்தத்தையே தருகின்றது; அதனை இஞ்ஞான்று ஆற்றிக்கொள்ளுதல்போல அவ் வாரா நாட்களிலும் ஆற்றியிருக்கக் கூடும். ஆதலின் நீ செல்வாயாக' என்பது கருத்து. 'பீள்:' கதிரின் கருப்பம்.

எ

(க—அ) 'தூவி'யென்பது பெரும்பான்மையும் அன்னத்தின் மயிருக்கே வருகின்றது. அன்னங்கட்குத் 'தூவிகள்' எனவே பெயர் வழங்குதலும் நினைவுகூர்க. பழைய நூலுரைகளில் இச்சொல் அதன் உச்சிக் கொண்டை யின் மயிருக்கும் (நெடுநல். கஙஉ - உரை), வயிற்றின் மயிருக்கும் (சிலப். ௪ : சுசு அடியார்க்கு. உரை), சிறகின் மயிருக்கும் ("தூவியஞ்சிறை அன்னம்", சீந். ௩௪சு) வருகின்றது. ஆயினும் அணையைக் குறிக்க வரும்போது அதன் அடிவயிற்றின் மயிருக்குக் கூறுவது சிறப்பு. 'உணர்ப்பவள்', உணரச் செய்பவள்; கிளிக்கு மகிழ்ச்சியை உணரச் செய்பவள் என்க; 'முகம்' என்னுங் குறிப்பால், முத்தத்தால் அங்ஙனம் உணரச் செய்பவள் என்பது பெறப்பட்டது. நீர்ப்பக்கமாய்த் தாழ்ந்திருக்கும் மாவின் வடுக்குலைகளில் அலையின் துவலை விசையாய்ப் படுதலால், அவ் வடுக்கள், அலர்ந்த ஆம்பலின் மேல் முதலிற் பட்டு, அதன்பின் அலராத தாமரை முகையைத் தீண்ட அத ஞல் அத்தாமரை வலிதின் அலருமென்பது பின் நான்கடிகளின் கருத்து. தாமரையில் நேராகப் படின், மலர் கெடுமாதலின் இங்ஙனங் கூறினர். அத் தகைய கயங்கள் அமைந்த வயல் அணிந்த நல்ல ஊரனே என்று இயைத்துக் கொள்க.

(கூ—உ0) தாழிசைகள் மூன்றிலும் முறையே 'நகைசேர்ந்த இதழி னைப் பாணன் காட்டுடென்றுளே' 'ஒளிவிட்ட அரக்கினைப் புலைத்தி காட்

டென்றானோ' 'கோடுளர்ந்த துகளினை அந்தணன் காட்டென்றானே' எனக் கிழத்தி கூறினாள். அவர்கள் என் வருத்தத்தைப் பின்னும் மிகுப்பதற்காக இங்ஙனங் காட்டு எனவே நீ இக் கோலத்தோடு வந்தனை போலும் என்பதற்கு, 'வேண்டார் இல்' எனப் படர்க்கை வாய்பாட் டாற்கூறினமைபோலவே 'அவளை' யெனவுந் தன்னை அவ் வாய்பாட்டினாலேயே உரைத்துக்கொண்டாள். ஒலியாமல் திரிவாளையும், அறிவிலா அந்தணனையும் 'ஒலிக்கும் புலைத்தி' 'அறிவுடை அந்தணன்' என்றது, இகழ்ச்சி. 'வய' என்னும் உரிச்சொல் விகார வகையால் 'வயம்' என நின்றதென்று பேராசிரியர் திருக்கோவையாருரையில் (௫0 : கொளு) உரைத்ததால், இங்கே 'கய' என்னும் உரிச்சொல்லும் 'கயம்' என நின்ற தென்று கொள்க.

(௨௨–௨௬) கழிந்தவையுள்ளாது, கண்டவிடத்தே நிற்பேணிக்கொளலின், அந் நற்குணமேம்பாட்டால் இந்நோயுழத்தல் எமக்கு இழிந்தன்று எனப் பெருந்தன்மை தோன்றக் கூறினாளென்க.

அ

(க–ரு) பகன்றைப் பூ, வெள்ளி வள்ளத்துக்கு வந்தது. அப்பூவைப் பொருந்தும்படி வளர்ந்துள்ள தாமரை, அவ்வெள்ளி வள்ளத்தில் வாய் பொருத்தியுண்ணும் முகம்போல உள்ளதென்க. பகன்றைப் பூ வெண்ணிறமானதென்பது, "வெள்ளிதழ்ப் பகன்மதியுருவிற் பகன்றைமா மலர்" என வரும் ஐங்குறுநூற்றாலும் (௪௫௬) விளங்கும். சிலப். ௧௩ : ௧௫௭-ன் அடியார்க்கு நல்லா ருரையை நோக்க இது கொடிப்பூவைச் சேர்ந்ததெனத் தெரிகின்றது. நூல்களிற் பெரும்பாலும் இம்மலர், வள்ளத்துக்கு உவமமாக வரக்காணலாம். "பகன்றை வான்மலர் பனி நிறைந்ததுபோற் பால் பெய் வள்ளம்" என்னும் அகநானூற்றடிகள் (௨௧௩ : ௪-௫) போல்வன இங்கு நினைவுகூரற்பாலன.

(௰–௧௩) 'அலமரல்', எச்சப்பொருட்டு.

(௧௪–௧௭) பெண் என்னும் வழக்குப்பற்றிப் பரத்தையர்க்கு 'நல்லவர்' என்னும் பெயர் வந்தது. மகளிர் ஆடலில் ஆடவர் தலைக்கை தரும் மரபு புறம், ௨௪ : அ-௯-ம் அடிகளாலுந் தெளியப்படும். இன்ப விளையாட்டாதலின், கவர்ச்சி கருதி நச். 'நீல ஆடை' என்றார்.

இப்பாட்டின் துறைக்குறிப்பில் 'எங்கள் ஐயர்' என்பது 'எங்கையர்' என வந்தது மரூஉ; 'எங்கப்பா' என்னும் வழக்குப்போல வென்க. தொல்காப்பியத்தில் இங்ஙனம் வந்ததென்பது (கற்பி: ௬) நினைவிருத்தற்பாலது.

(க—ரு) 'சேப்பு' ஒருவகைக் கிழங்கு. நச். 'தான் தோன்றுங் கிழங்கு' என்பது காண்க. அகன்ற பசிய இலையையுடைய அக் கிழங்கின் செடிகள் மிகுதியாக வளர்ந்துள்ள வயலிடத்தை நச். 'தான் தோன்றுங் கிழங் கிடத்தை' யென்றார். இனி அச் செடிகளின் இடையே அருமையாகத் தாமரை மலர்ந்திருந்தமையால், 'கை செய்து பண்ணினதுபோலப் பூத்த' என்றுரைத்தார். நச். 'மை தபு' என்பதைத் தாமரையொடு சேர்த்ததும் அதற்குக் 'கரிய இதழ் பொதிந்த, நீங்குகின்ற' என வலித்துரைத்ததும் நேர்மையும் பொருத்தமு மாகா. குற்றந் தீர்ந்த கிளர் கொட்டையென இருந்தவாறே உரைப்பது நன்று. உள்ளுறையில் இது தலைவியைக் குறித் தலின் 'கைசெய் தியற்றியதுபோல' வென்னுங் கருத்தும், 'மை தபு'வென் னுங் கருத்தும் அதற்கு இசைந்து நிற்றலுங் காண்க. 'கொட்டை' யென் பது, மலரினுள் நடுவிலுள்ள பகுதி; இதைப் 'பொகுட்டு' எனவுங் கூறுப.

(சு—கக) 'அறன்' என்பது எதனையும் முறைப்படி நடத்தல்; அது மட்டுமே யிருந்தாற் குற்றமே மிகுதியாயுள்ள இவ்வுலகம் பெரிதும் இன்ன லுறும்; திருந்தாதும் போம். ஆதலின் அன்புந் தழைய வாழ்க்கை செலுத் துதல் வேண்டும். இக் காரணத்தினாலேயே வெறும் அறமே கருதும் 'அறக் கடவுள்' என்னுங் கூற்றுவன், எல்லாராலுங் கடுமையாகக் கருதப் படுகின்றான் என்க. ஆகவே இரண்டுந் தோன்ற 'அன்பிலன், அறனிலன்' என்றார். முதன்மையும், அறத்துக்கு அதனால் உண்டாகும் பெருமையுங் கருதி, அன்பை முன் வைத்தார். திருவள்ளுவரும் இங்ஙனங் கூறுதல் நினைவு கூரற்பாலது. 'முன்பகல்' 'பின் பகல்' என்பன இனிமை கருதி இயல் பாகவே நின்றன. இவை ஆறன் தொகை; 'பகலினது முன்' 'பகலினது பின்' எனக் கொள்க. இங்ஙனம் வருவதை முன்பின்னாகத் தொக்க வேற் றுமைத் தொகை' யென்பர் பரிமேலழகரும். (குறள், ககூ : கூ - உரை). "ஏமுற் றவரினும் ஏழை" (குறள், அஅ;கூ) என்பதிற்போல 'ஏமுறுதல்' பித்துறுதற் பொருளில் வந்தது.

(கரு—கசு) 'கண்ணார்க்கும்' எனக் கண் குறித்தார், அவர்கட்கு அஃது ஆடவரை அகப்படுத்தும் வலையாதலின்; சிறப்பும்மையால், 'அத்தகைய வலையை யுடையாரையும் நின் தேர் ஒரு வலையாயிருந்து அகப்படுத்தி வரு கின்றது' என்னும், ஊரவர் கருதற்குரிய பொருள் பெறப்பட்டது.

## ம

(க—கரு) 'உயர்ந்த போர்' என்றது, இழிவு. 'தோழி' யென்றது, தலைவியை.

(கசு—கஎ) ஊடியிருப்பேனாயின் என்னும் பொருள் தோன்றப் 'பின் னர் ஒருமொழியைக் கூறாதிருப்பேனாயின்' என்றுரைத்தார்; அங்ஙனங்

கூறுதிருத்தல் ஊடியிருத்தலை ஒக்கும். மேல் தாழிசைகளிலும் 'ஊடியிருப் பேனாயின்' 'இகலியிருப்பேனாயின்' என வருதல் காண்க. ஊடாமலிருப் பேனாயின் எனவும் பொருள் தருதற்குரிய தொடரை இடத்திற்கேற்ப ஊடி யிருப்பேனாயின் என்று பொருள்படுமாறு உரைக்கவல்ல நச். உரைத்திறம் கண்டுகொள்க. ஊடலும் விருந்தெதிர் கோடலால் மறத்தற்குரியதென்ற லால், இல்லறம் நடத்தும் ஆடவரும் மகளிரும் பண்டு, விருந்தை எவ்வளவு முதன்மையாக மேற்கொண்டொழுகினரென்பது தெளியப்படும். இவ் வியல்பு, சிலப். ரு ; உஉச-௩௪-ம் பகுதியால் நன்கு விளங்கும். ஆசிரியர் தொல்காப்பியர் விருந்தை இல்லறத்துக்கு ஒத்த அறம் எனக் கருதினர். "புரை அறம்" (மெய்ப், உச) என்பது நினைவுகூர்க.

(கஅ—உக) 'பொய்ச்சூள் அஞ்சிப் புலவேன்' என்பதனால், பண்டு மகளிர்க்குப் பொய்யாமையிலிருந்த நல்லெண்ணம் நன்கு வெளிப்படும்.

(உஉ—உரு) 'முதல்வன்.........புதல்வன்' என்பது கொண்டு, தன் தந்தையின் பெயரை ஒருவன் தன் மைந்தனுக்கு வைக்கும் வழக்கமும், ஒவ் வொரு குடும்பத்துக்கும் ஆண்டிலும் அறிவிலும் பழக்கத்திலும் மிகுந்த பெரி யோரே முதல்வராவரென்னுங் கருத்தும் அறியலாம். 'பொய்த்துயில் துஞ்சும்' என்பதனால், அங்ஙனந் தலைவன் பொய்யாகத் துஞ்சுதலையும் மக ளிர் தாங்கலாற்றாதவராயிருந்தனரென்பது பெறப்படும்.

தாழிசைகள் மூன்றிலும் தமிழர் மாட்சிமைகள் சில தனித்தனிவிட் டொளிர்தல் கண்டுகொள்க.

## கக

(ரு—அ) 'சேட் சென்றாய்', 'பௌவ நீர்', 'கொளவை நோயுற்றவர்' முதலிய தொடர்கட்கு நச். தமது மதிநுட்பந் தோன்றத் திறமாக உரைத் திருக்கின்றார். கோரைகள் கழியிலன்றிக் கடலில் முளையாமையின், 'பௌவ நீர், கழியிடத்தைக் குறிப்பதாகக் கூறி அதனை ஆகுபெயரென்றார். 'சாய்', ஒருவகைக் கோரையின் பெயர். நச். அதனைத் 'தண்டாங் கோரை' என் றது காண்க. 'கொழுதி', பறித்து; "மென்தளிர்க் கொழுங்கொம்பு கொழுதி" (மதுரைக் காஞ்சி, ருஅசு-எ) என்னுமிடத்தும் இவர் இப் பொருளுரைத்தார். இங்கே 'பறித்துக் கிழித்து' எனப்பட்டது. 'கோது தல்' என்பதும் இச்சொல்லின் திரிபெனக்கொள்க. 'பௌவ நீர்' என றமையால் மருத நிலத்துத் தலைவிக்கு நெய்தனிலத்திற் களவொழுக்கம் நிகழ்ந்தமை பெறப்பட்டது.

(கச—கஎ) 'பொய்யாக எடுத்த சொல்' என்பதன் உரை விரகு அறிந்துகொள்க. 'உலமரல்' என்னுஞ் சொல், சுழற்சிப் பொருளது ;

சுழற்சியாவது நெஞ்சத்தின் அலைவு. "புலம்பு வழிப்பட்ட உலமரல் உள்ள மொடு" என்னும் அகநானூற்றடி (௩௧௫ : ௰) இங்கு நினைவுகூரற்பாலது. உரித்து, 'உரிது' என வருதலை, "உரிதினின் உறைபதி" (பரிபா. ௧௮ : ௫௫) என்பதற்குப் பரிமேலழகர் உரித்தாக உறையும்பதி என உரைப்பதி னின்றுங் கண்டுகொள்க.

(௧௧—௨௨) இதன்கண், திருமணங் கருதிய தம் கருத்தையும் முடி வாகத் தலைவி குறித்தனளென்க. அதனை அவள் கூறும் வல்லமை அறிந்து மகிழ்ந்துகொள்க. 'புரிபு ஒருங்கு' என்பதற்கு 'ஒருங்குதலை விரும்பி' யென்பது உரை. 'ஒருங்கு', ஒருங்குதல்; ஒன்றாகச் சேர்தல்.

தோழிக்கு நாட்டம் நிகழ்ந்தமையால், தலைவி தனது கூட்டத்தை அச்சத்தால் நீட்டிக் கூறினளென்பது.

## ௬௨

(௧—௭) 'துணையின்றி' 'தனிமலர்' 'அம்மலர்' என்னுங் குறிப்பு களால் தாமரை மலர், ஒன்றெனக் கூறுதல் சிறக்கும். மேலும், இங்குத் தாமரை மலரைத் தலைவியின் கண்களுக்குக் கூறுதலினும்பார்க்கத், தலைவி யின் முகத்துக்குக் கூறுதல் நன்கு பொருந்தும். வருந்திக் கண்ணீர் விடு நேரத்திற் கண்களைத் தாமரை மலர்கட்குக் கூறுதல் பொருந்தாது. 'திரு முகம் இறைஞ்சிக் கண்ணீர் வீழ்த்ததுபோலத் தாமரை மலர் சாய்ந்து தண் பனி உறைத்த' தென்பது இயைந்திருத்தலுங் காண்க. நீர்த்துளிகள் பல வாதலால் 'கண் நீர் தெறிப்ப'வெனப் பன்மையாற் கூறினாற்போலப், பல இதழ்களால் ஆன தளைகளும் பலவாதலால் 'மலர் தளைவிட்ட' எனப் பன் மையாற் கூறினரெனக் கொள்க., இணையிரண் டியைந்தொத்த முகைகள்', இளமுலைகள். 'ஒசிந்து ஒல்கி' என்பதன் உரை வல்லமையானது.

(௮—௧௧) தனக்குக் கூட்டமில்லாமை மட்டுமின்றித், தன்னைப் பிறர் பழித்தல், பரத்தையர் ஏசுதல், பாணன் தொல்லை செய்தல் என்பனவுந் தலைவன் பரத்தைமையால் நேர்கின்றமை கூறித் தலைவி ஊடுதல் இத் தாழிசைகளாற் கூறப்பட்டன.

(௨௧—௨௪) 'இடையும்' என்பதற்கு இடைந்து நிற்றலும் எனவே உரைக்கலாம். அஃதிங்கு ஊடிநிற்றலை உணர்த்தும். இடையும் நெஞ் செனக் கூட்டுதல் வலித்துரைத்தலாம். இனி, 'நிறையும்' என்பது அங் ஙனம் ஊடி நிற்குங் காலத்துத் தலைவன் தன்னை ஊடல் தணிவிக்க நெருங் கியபோதும் தலைவி தன் உள்ளத்தை அதன்வழி விடாமல் நிறுத்துதலை உணர்த்தும். ஆகவே, 'நிற்காணின் இவ் இடையும் நிறையும் கைத்தங்கா நெஞ்சுடையார்க்கு எளிதோ' என்றாளென்க. அங்ஙனமாயின் நிறையு

மென்னும் உம்மை எண்ணும். 'கைத்தங்காமை', காமத்தால் மட்டுமன்று; பெரும்பான்மையுந் தலைவன்பால் அந்நேரத்துத் தோன்றும் அன்பாலும் அருளாலும் அறவுணர்வாலுமாமெனக் கொள்க. இதனை "அருண் முந்துறுத்த அன்பு பொதி கிளவி பொருள்பட மொழிதல் கிழவோட்குரித்தே" என்னுந் தொல்காப்பியத்தானும் (கற்பி. ௨௰) அறியலாம்.

௩௩

(௧–௰) 'இன் மலர்' என்பதன் உரை இனிது. 'தவிர்பு அசைவிடு உம்' எனப் பிரிக்க.

(௧௫–௧௮) 'மலர்ந்தாங்கே': மலர்ந்ததுபோலவே; சுடர் நோக்கி மலர்ந்ததுபோலவே, அது படிற் கூம்பு மலர்போல் என்று உரைத்துக் கொள்க.

(௧௯–௨௨) நச். 'பெய்து விளைத்தும் பெய்யாது கெடுத்தும்' என்பது, "கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை" என்னும் திருக்குறட் (௧௫) கருத்தோடு ஒத்து நிற்றல் கண்டுகொள்க: தலைவனே சென்றபோது தலைவி மகிழ்ந்து அங்ஙனம் செல்லாதபோது அவள் வாடுதலின், பெயல் உவமை கூறினர். பரிபாடல் ௬: ௬௯-௩௪-ம் அடிகளிலும் பரிமேலழகர் இக்கருத்துப்பட உரைத்தார்.

(௨௪–௨௭) 'அனைத்தாக': எல்லாமாக; 'ஐ': வியப்பு; 'வியக்கத் தக்கன எல்லாமாக அமைந்தன்று; நும் பரத்தையர் இல்லத்துக்கே செல்லுமின்; நும் பரத்தையர் நுமக்கு வேறாகும்படி, இங்கே கையின் முகை மலர்ந்தன்ன முயக்கினால் தகைமையின்று. இந்நாட்கள் தண்பனி வைகல் எமக்கு' என இருந்தவாறே உரைப்பது நன்று. அத்தகைய முயக்கத்தால் இந்நாட்கள், தண்பனி வைகல்போற் கொடுமையாகவே இருக்கின்றன வென்பது கருத்து. இங்கே இவ்வாறேனும் வலிந்து முயங்குதலால் ஆங்கே பரத்தையர் மனம் வேறுவராதலின், 'வேறாக' என்றார்.

௩௪

(௧–௬) 'தாமரையை முழுமையும் சாய்த்து அதன் வள்ளிதழ் ஊற நீடி விளங்கிய ஒரு கதிர்' என்று கொள்க. மலரை மட்டுமல்லாமல் தண்டிலிருந்தே முழுமையுஞ் சாய்த்து என்றற்கு 'முழுமுதல்' என்றாரென்பது. நச். வேறு கூறினர். திணைமாலை நூற்றைம்பதிலும் (௧௨௮) இவ்வுவமை வந்தது.

(௭–௰) 'தோய்ந்தாரை அறிவேன் யான் எனச்,' சான்றினாற் குறி கொண்டாள்' என்பது கருத்து. நனைந்தால் அறியமுடியாமையின், 'சாய்குவள் அல்லளோ' என்றாள். மேல் தாழிசைகட்கும் இஃதொக்கும்.

(கடு—கஅ) 'கண்டேஎம் புதல்வனை' என்பதன் உரை விரகு அறிந்து மகிழ்க. 'நண்ணியார்': நண்ணினவர்; இங்கு, முயங்கினவர்.

(உ௰—உரு) 'நீங்காய், இகவாய்' என்பதன்கண் நச். வல்லமையாய்ச் சென்றார். 'ஈங்கு', என்பால் என்னும் பொருட்டு; "ஒழிக காமம் ஈங் கென" (சிந். எஉ) என்பதிற் போலவென்க. தலைவன் தன் புதல்வனை வாயிலாகக்கொண்டு தலைவியின்பாற் சென்றமையால், அவனை அவனிடத்தி னின்றுந் தடுப்பாளாயினள்; இவை "வாயிலின் வரூஉம் வகை" "தன் வயிற் சிறைப்பினும்" என்பவற்றாற் (கற்பி. சு) கொள்ளப்படும்.

## கரு

(க—கூ) 'தலைமாறுவார்' ஒருசொல் எனினும் அமையும். 'தலைமாறு வார் மாறுக; அதனால் அணிதல் என்றும் நீங்காத நின் முக்காழை யாங் காண நல்கிக் கைபுனை வேழத்தைப் பூங்கயிற்றினாற் பையப் பைய வாங்கிப் புட்டில் ஒலிப்ப ஆங்கண் நின்றும் ஈர்த்து இங்கே வருக, எம் பாக மகன்!' என இருந்தவாறே இயைத்துரைப்பின் உரை மிகவும் எளிதாகவும் இனி தாகவும் இருக்கும். வளைத்து வளைத்து இழுத்தல் கருதி 'வாங்கி' எனப் பட்டதென்க. நச். இப்பகுதியில், தொடர்களை முன்னும் பின்னுமாக மிகச் சிதைத்திருக்கின்றார். 'பவளம்' பவழமென வழங்கினாற்போலக் 'கவளம்' என்பதுங் 'கவழ'மென வழங்கிற்று. இவ்விருசொல் வழக்காறும் திணை மாலை நூற்றைம்பதிலும் (சஉ) வருதல் காண்க. 'புட்டிலின்' என்றமை யாற் 'புட்டில் ஒலிப்ப' வென்பது தோன்றுகின்றது; 'புட்டில்', செச்சை.

(கச—கஎ) 'நோக்கு', அழகு. 'அத்தத்தா': அப்பப்பா; அத்தா அத்தா' என்பதன் திரிபு. முன் தாழிசையில் 'தெவ்வம் உழப்பார்' என வும், அடுத்த தாழிசையில் 'புறமாறப்பட்டவர்' எனவும் வருதல்போல இத் தாழிசையிலும் 'சாஅய்ச் சாஅய்மார்' எனப் பெயராகவே அருகி வந்த தெனக் கொள்வது சிறப்பு. 'சாஅய்ச் சாஅய்மாரது எவ்வநோய்' என்க. 'நலன் உண அதனால் மெலிந்து மெலிந்து நின்றவரது எவ்வநோய்' என்பது உரை.

(கஅ—உக) 'புறமாறப்பட்டவ' ரென்பதும் ஒருசொல் தன்மைத் தெனின் ஆம்; 'புறத்தே கைவிடப்பட்டவர்' என்பது பொருள்.

(உஉ—உசு) காதிற் கனங்குழை வாங்கிப் பெயர்தல், குழந்தைகளின் விளையாட்டுச் செயல்களுள் ஒன்று. தலைவன் பிரிந்தமையாற் 'போது இல் வறுங் கூந்தல்' என்றாள்; "பூ இல் வறுந்தலை" என்னுங் குறுந்தொகை யும் (கக) நினைவுகூர்க. 'பாட' என்பதைப் 'பட' என்னும் பொருளில் உரைத்தார். தலைவி தன் கூந்தல்மேல், தோளில், புதல்வனை வைத்துக்

கொள்வது, தன் காதிற் குழை வாங்கி விளையாடும் அப்பழக்கத்தால் அவன், தலைவனது மார்பின் கோதையையும் அறுத்து விளையாடுவனாதலின், அது கருதியென்க. 'எதிலார் கண் சாயுமாறு கோதை பரிபாடக் காண்கும்' எனவே இயைப்பது நன்று.

௧௬

(௧—௫) 'விருந்தொடு கைதூவா' என்றுங் குறிப்பால் ஊடுகின்றவன் இல்லக்கிழத்தி எனக் கொள்க.

(௧௬—௨௪) 'சேயனாய் நின்று, நாம் கொணர்ந்த பாகன் நினைவு சிதைந்து வாய் விரைந்து, ஏனாதிப் பாடியம் என்ற தன்மைத்தாக' என்றுரைப்பின் சிறக்கும். 'பாடியம்' என்றான் தலைவனையும் உட்கொண்டு. தன் நினைவின்படி பாணன் 'ஏனாதிப் பாடியம்' என்றாற்போல, மகனும் தன் தந்தையின் நினைவால் 'அத்தத்தா' என்பான் எனக் கருதினாள்.

(௨௫—௩௭) 'கள்வனை........என்பார் போல' என்பது பழமொழி. 'சேய் நின்று' 'சினவல்' 'கடக்கிற்பார்' என்றதனால் முறையே துனித்தலும் பிரிவு நீட்டித்தலும் அஞ்சுதலுங் கொள்ளப்படும் (தொல். கற்பி: ௫ - உரை)

௧௭

(௯—௩௫) 'தொடக்கத்துத்தாய்' 'வழிமுறைத்தாய்' 'புக்கவள்' எனப் பலரைச் சேர்ந்தொழுகுதல் தெரிதலின், இளமையை நுங்கின மெல்லாம் அடக்கமில்லாது கழித்தல் கருதி 'அடக்கமில் போழ்து' என்றார். 'மயங்கு நோய் தாங்கி' என்றமையால், காமநோயுண்மையும் ஆனால் அது தாங்கும் ஆற்றலுண்மையும் பெறப்படுதலின், அவள் இடைநிலைப் பருவத்தினளென்பது பெறப்படும் (தொல். கற்பி: ௰-உரை). 'ஈது', இத்த என்றுரைத்தமை நினைவிருத்தற்பாலது. 'புத்தேள்': புதுமை; ஆகுபெயராற் புதியவளை உணர்த்திற்று. 'மார்பினும் சிறுகண்ணும்' என்க. 'விடு இனி அன்ன பிறவும்' என்பதற்குப் பரத்தையர்பாற் செல்லுதலும் அவர்களோடு விளையாடுதல் முதலியனவும் என உரைப்பினும் ஆம். "பதி அமை பருதி" (புறம். ௪ : ௧௩௨) என்பதிற்போல அமைதல் தவிர்தும் பொருளில் வந்தது.

௧௮

(௧—௯) 'பொருந்து கோன் கதவு' என்பதனால், வலிய இரட்டைக் கதவுகள் பெறுதும். 'ஊட்டலெறியப் பால் பெருகுமனையெல்லாம்' என்க.

(அ-௲க) பனங்குரும்பையிற் கொடிகளை விட்டுப், பின், கீழிருந்து முறுக்கி யிழுக்கும் சிறு பிள்ளைகளின் செயல் ஒன்று இப்பகுதியின் முதலிரண்டடிகளிற் கூறப்படுகின்றது. உரையிற் 'பிள்ளையார்' என்றது, முருகவேள். 'வேற்று ஆனுத் தாயர்', வேற்றுமை அமையாத தாயர் எனிற் சிறக்கும். 'கள்வன்' செறற்சொல். 'வெந்த புண்,.....அற்றால்': முதுமொழி.

௧௯

(௧-௧௧) 'ஆர்': காம்பு. சில தாமரையிலைகள் நீர்க்குமேல் உயர்ந்திருக்கும்; அடுத்த தாமரைகள் சில நீர்மட்டத்தில் அவ் விலைகளின் கீழ் அவற்றின் நிழலிற் பூத்திருப்பனபோற் காணப்படும். இவ் வழகிய தோற்றத்தை, 'நீருள்......செம்மல்' என்பதனால் ஆசிரியர் அழகாக விளக்கினார். "போதவிழ் தாமரையன்ன நின் காதலம் புதல்வன்" என்றார் ஐங்குறுநூற்றிலும் (௬உ௬). கொள்வானும் என்பதில் 'ஆம்' செறற் குறிப்பு. 'சித்தை' என்பதும் அது.

(உ0-௬௩) சுறாவேறு எழுதிய மோதிரம் நினைவுகூர்க. 'பாடுவி': பாடுவோள்; மிகுத்துப் புகழ்கின்றவள் என்றார் இடநோக்கி. நோய்: வினை.

௨0

(௧-௧௬) வேறு வேறு காலம் உணர்த்தும் இடைநிலைகள் முதலியன ஏலாது, பொன்னின் இயல்பை விளக்கிக்கொண்டு எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாய் நிற்றலால் ஈச். "சுடுபொன் என வினைத்தொகையாகாமை உணர்க" என்றார்; பெயரெச்சத் தொடரின் விகாரமென்பது கருத்து. திரை: திரைத்த துகில். வாளும் மழுவும் வருதலானும், 'ஆனேற்றவிர்பூண்' என்பதனாலும், திருமாலின் ஐம்படைத் தாலிபோலச், சிவத்தின் படைகள் அமைந்த பூண் ஒன்றும் குழந்தைகட்கு அணிதலுண்டென்பது பெறப்படும். மூதாய்: 'இந்திரகோபம்' என்னும் பூச்சி. 'சூழ்நூலாக அமைந்த மணி மருள் மாலை' என்க.

(௧எ-௬௬) 'அணிக்கு அணியாய் நிற்கக் கொடுஞ்சினைபற்றிப் பையயத் தாங்கும் நின் விரற் சீறடி நோதலுமுண்டு என் கைவந்தீ பாலுண்ணிய' என இருந்தவாறே இயைத்துரைப்பது சிறப்பு. 'பாண்மை': இசைத்திறன். குடியுண்டித்தை, ஒருசொல்; பருகு என்பது பொருள். 'என் பாராட்டுப்பால்' என்பது 'என் பாராட்டைப்பால்' எனச் சாரியை ஏற்று நின்றது, மேல் ஞாயர்மாட்டைப்பால், என வந்தாற்போல. பாராட்டு: மகிழ் மொழிகள். 'ஞாயர்', பின்தாயர்; முன்னிலையோடு அடுத்த

முறைப் பெயராதலின், "ஞாயரென்றது, தன்னைப் பிறர்போற் கூறிற்று," என்றார்.

௨௬

(க—ஶ) 'நின் வாயைக் கண் கலந்து நோக்கு ஆர, வேழத்தோடு மணலில் உழக்கி ஆர்ப்ப இயலும் என் யானை வந்தீக ஈங்கு' என்று கொள்க. உரையில் 'வாளம்' என்றது, வாள். 'செம்பாகம்' 'செம்பாதி' என்பன ஒத்த பாதி. (குறள், ௬௯: உ. பரிமேல். உரை) சரிபாதி என்க. மிகக் குத்துதலே நச். இறக் குத்துத லென்றார். புதல்வனை அன்பினால் 'யானை' என்றான்.

(உக—௪) 'வீதலறியா விழுப்பொருள்' என்பதன் உரைத்திறம் அறிந்து மகிழ்க.

(உஃ—௩௪) அறனும் அன்பும் இல்லாதவன் என்னும் உயர்ந்த பொருள் தோன்றுதலின், 'அறனில்லா அன்பிலி' என்றியைப்பது இயல்பும் சிறப்பு மாகும். தொல். கற்பி: ௬-ன் உரையில் இவர் இவ்வாறே இயைத்துரைத்தல் நினைவுகூரற்பாலது.

௨௨

(க—அ) "வெரூஉதலென்பது, அச்சம்போல நீடு நில்லாது கது மெனத் தோன்றி மாய்வதொரு குறிப்பு; அதனைத் துணுக்கென்றலுமாம்" என்பர் இளம்பூரணர்; (தொல். மெய்ப்: கஉ-ன் உரை). 'இமைப்பின்': இமை நேரத்தில்.

௨௩

(க—௬) 'பெரியார்க்கு அடியரோ ஆற்றாதவர்' என்பதனாற் பண்டைக் காலத்து மகளிரின் தன்னுணர்ச்சியும் உரிமையுந் தெளியப்படும். 'கடியர் தமக்கு...மாற்று' என்பது பாட்டிடை வைத்த குறிப்பு (தொல். செய்: கசுஞ). 'மாற்று': மாற்றம், மறுமொழி.

(ஶ—கச) 'களவனது ஒதுக்கம்போல்' என இயைப்பது நன்று.

௨௪

(க—௬) இந்த இருதலைப் புள்ளைச் 'சிம்புள்' என்னும் ஒருவகைப் பறவை யெனவும், எட்டுக் கால்களும், இரண்டு தலையும், வட்டக் கண்ணும், வளைந்த எயிறும் உடையதெனவுங் கூறுப.

(எ—கஞ) 'தெளிந்தேம் யாம்' எனத் தலைவி கூறும்போதே 'காயாதி' எனத் தலைவன் எதிர்மொழிந்தான் எனக் கொள்க. 'எல்லாம் வல்

எல்லா' எனவும் இயைக்கலாம்; இம் மாயமெல்லாம் வல்லவன் என்பது கருத்து. 'மாண மறந்து' என இருந்தவாறே கூட்டி 'மிக மறந்து' என்றுரைப்பது நன்று. இளம்பூரணர் இங்ஙனங் கருதினர் (தொல். மெய்ப்: உச-உரை).

## உரு

(க-கக) 'பாணுள் இரவு' என்பதன் உரை அழகிது. 'ஒடிவது போலும்' என்றமையால் உரையில் 'வஞ்சிக் கொம்பு' என்றார். வஞ்சி யென்னும் பெயருள்ள கொடி இதனின் வேறு. 'போரார் கதவம்': பல கைகள் பொருந்துதலமைந்த கதவம்; 'போர்,' பொருந்துதல்; என்றது, இரட்டைக் கதவை. "போர்க் கதவு" (பட். சு0) என்பதன் உரையிலும் இவர் இங்ஙனம் உரைப்பது நினைவுகூர்தற்குரியது.

(உஉ-உரு) 'காணுது': நினையாது; முன்னெல்லாம் அவன் வஞ்சம் அறியாது சூள் நம்பினுள், இப்போது அவன் வஞ்சந் தெளிந்துவிட்டமை யால், 'பண்டையவல்ல நின் பொய்ச் சூள்' என்ருள்.

## உசா

(க-ரு) மாலைக்கு இனமான மலர்களல்லாமையால், அல்லி அனிச்சம் என்பவற்றிற்கு வேறு கூறினுர். 'இன்று நன்'றென்றது இகழ்ச்சி. என் ஐ எனப் பிரிக்க.

(கூ-உச) புதிய பரத்தையர், குறியிடத்துவந்த பரத்தையர், சேரிப் பரத்தையர் எனப் பலர் இப் பகுதியிற் கூறப்பட்டனர். 'தொடியுற்ற வடுவும்' என்றமையால் தழுவுதல் பெறப்பட்டமையின், 'குழைந்த தார்' என்பதும் அந் நல்லாரால் நேர்ந்ததாகக் கருதி நச். இயைத்தார். 'காணின் நெகிழுமென் நெஞ்சாயின்' என்றதனுல், தலைவி தனது ஆற்ருமையுங் கூறி ஊடல் தீர்ந்தமை பெறப்பட்டது.

## உஎ

(க-கூ) தன்னை மறந்த கனவென்று அக் கனவின் இயல்பை மிகுத்துக் காட்டுதற்குக் 'கழியக் கனவு' என்ருரெனிற் சிறக்கும். இன்பக் கனவாதலின் காரிகை நீர்த்தாயிற்று. 'மூழ்கி மயங்கிப் பின்னும் அவ்வின்பத்தின் பொருட்டு ஆங்காங்குச் செல்லுதலும்' என உரைத்து இன்பமும், 'உயர்ந்த பொருளும்' என்றதனுற் பொருளும், 'முயன்று அறஞ் செய்யாது அஃது இயல்பாய் அமைந்தோராது உலகமும்' என உரைத்து அறமும் என இம் மூன்றும் உரித்தாய் ஒருதலை அடைதலும், இவ்வாற்ருற் பிரிதலும் புணர் தலும், கனவுகள் தம்மில் தருதல் தகையாதால், 'கனவெனப்பட்டதும்

காரிகை நீர்த்து' என்றாராக இருந்தவாறே உரைப்பின் உரை இனிதா யிருக்கும். "இன்பமும் பொருளும் அறனுமென்றாங்கு" (தொல். களவி: க) என ஆசிரியர் விதித்த முறைப்படியே, முறையே இம் மூன்றும் அடைதல் கூறிற்றென்க. நச். உரை வல்லமையா யிருப்பினும் அது, தொடர்களைப் பெரிதுஞ் சிதைத்திருத்தலின் இயல்பானதாகாது.

(கசு-டுச) உவமத்தில் 'இமயம்' கூறினமையால் 'மணற்குன்று,' என்றார். 'ஓர்த்தது இசைக்கும் பறை' ஒரு பழமொழி. 'ஓர்த்தது': மனத்திற் கருதியது. 'துனை' யென்பது வண்டுக்குக் கொள்க. 'ஓராங்கு,' ஒன்றைப்போலவே யென்பதற்கு நச். 'ஒருபடிப்பட' என்றார். 'செயலமை' என்றது, நகைக்கும் ஒக்குமாதலின், இருந்தவாறே உரைக்கலாம். 'செருப் போலத் தட்ப' எனின் இயல்பாயிருக்கும். 'கடி கா' என்பதற்குப் பிறரைப் 'பாதுகாத்தலையுடைய கா' என்றுரைப்பது சிறப்பு. தொல். உரி: அஎ உரையிற் சேனாவரையரும் இங்ஙனங் கருதி மேற்கோள் காட்டினார்.

(டுக-சுஅ) 'பொழுதினாற் காமன் விழா மேவுதல் வர' எனக் கொள்க. கனா நனவாம் நேரம் இது எனத் தலைவன் குறிப்பித்தமை இறுதி யடிகளாற் பெறப்பட்டது. 'கனா' வென்பது செய்யுளிற் 'கனவு' என உகரம் பெறுமாதலின் நச். "செய்யுள்முடிவு" என்றார். இக் கலிச்செய்யுள் சிறந்த நலங்கள் அமைந்துள்ளது.

## உ௵

(க-கசு) வண்டு சாந்தத்தின் மணம் நுகர்தலின் 'வண்டூது சாந்தம்' என்றார் (சிந். எ: கஎச-உரை). 'மன்' என்றதனால், 'அத்தகைமை போயிற்று' எனக் கழிவுப்பொரு ளுரைத்தார் (தொல். இடை: ச). துற வறத்திலும் இருவரும் உடனுறைதலின் 'உடனுறை வாழ்க்கை' எனப்பட்டது. 'உதவி உறையும்': உதவியாய் இருக்கும். 'கடவுண்மை கொண் டொழுகுவார் கடவுளர் (முனிவரர்); அவர் பிணையன்னார் பலர்' எனத் தலைவி மடனழிந்து கூறினள்.

(கஎ-உஅ) "நகாரன்ன நளி நீர் முத்தம்" (சிறுபாண். டுஎ) என்ப திற்போல 'நகார்,' எயிறு. 'கற்றை' என்றற்கு நச். 'பற்றம்' என்றார். 'நாளணிக்கு ஒப்பப் பிணி கொள்ளுங் கண்ணொடு கடவுளைக் கண்டாயோ' என இருக்குமாறே உரைக்கலாம்.

(உக-ஙசு) 'அகலத்துக்கு ஒரு சார மேவிய கடவுளரெல்லார்க்கும் முட்டுப்பாடாகலுமுண்டு' எனக் கூறின் இயல்பாகவும் சிறப்பாகவும் இருக் கும். ஓர் சார, ஒரு சேர வென்க. 'செல்லா விடுவாயேல், நின் அகலத் துக்கு ஒரு சேர விருப்பங்கொண்ட கடவுளரென்னும் பரத்தையர்க்கு, முட்டுப்பாடாகலுமுண்டு' என்பது கருத்து.

## உக

(க—கூ) 'நீருள் நிழல்போல்,' சிறந்த உவமை; 'கலப்பையில் தைக்கும் படைவாள்' என்றது கொழு. 'நிறை ஏர்,' இகழ்ச்சி. 'வல்லுப் பலகை': சூதாடு கருவிகள் வைத்தற்குரிய அறைகள் கீறிய பலகை. உரையில் 'மடுப்பு' என்றது, பூட்டுவாய். நிரப்பம்: ஒப்பு; பரத்தை, ஆண்பாலுக்கு வந்தது. துவ்வா: துய்த்த; 'குறுவட்டா' வென்பதில், 'வட்டு,' சூதாடு கருவி.

(கஎ—சரு) 'அகடாரப் புல்லி......யாத்து விட்டாங்கு' என நாணின்றிக் கூறு மொழிகளாலும் இப் பாட்டு அடியோரைத் தலைவராகக் கொண்டதென்பது பெறப்படும்.

இப் பாடலின் உரையாடல் இயற்கையொடு மாறுகாது இனிதமைந்துள்ளமை அறிந்து மகிழ்தற்குரியது.

## கூ0

(க—கரு) இவர்தரல்: பரந்து பாராதே. நின்னுங்கே: நின்னிடத்தே; அஃது அவன் பரத்தையரிருப்பிடத்தைக் குறித்தது. 'காலிற் பிரியா,' விரைந்து பிரியா வெனிற் சிறக்கும். பரத்தையர்பாற் செல்லுதற்காக விரைந்து பிரிந்தென்பது கருத்து. ஈகை, புதிய வென்னும் பொருட்டு; குறும்பூழை உணர்த்தும்போது அச் சொல் ஆகுபெயர்; புதிதாகக் கொடுக்கப்பட்ட குறும்பூழ் என்பது உரை.

(கச—கூரு) 'பார்வைப்போர்': பார்வையுடையாரது போர்; மேல் அடியில் 'ஒட்டிய போர்' என்பதற்கு 'ஒட்டுதலை யுடையாளது போர்' என நச். உரைத்தமை காண்க.

இச் செய்யுளிற் பரத்தையர்க்கும் குறும்பூழ்க்கும் பொருந்துமாறு தொடர்கள் அமைந்தமை கண்டு மகிழ்தற்குரியது. மேல் மூன்று செய்யுள்களிலும் இந் நலம் கண்டுகொள்க.

## கூக

(க—கூ) நலங்கிய ஆடையை உரையில், 'முசிந்த புடைவை' என்றார். ஆண்பாலாருடை, வேறிடங்களிலும் 'புடைவை' எனப்படுகின்றது; (மதுரை. நிகூஅ - உரை).

(உஉ—கூக) உரையில் 'தூரால்' என்றது, குப்பை. 'பக்கரை': குதிரைச் சேணம்; 'சேதிகை', ஒருவகையான ஓவியக் கோலம்; இங்கே அது சேணத்தின்கண் அமைந்தது.

## ௯௨

(அ—உஎ) 'வலந்து', கட்டுண்டு என்னும் பொருட்டு. இச் செய்யுளிற் பரத்தையர்க்குரிய தொடரும் யானைக்குரிய தொடரும் இணைந்து வருகின்றன. தலைவன் மறைத்துக் கூறியும், அது தெரியாதாள் போல இருந்துவிடுந் தனது 'மடம்' என்னும் பெண்ணியல்பை அழியவிட்டுத் தலைவி அவன் குற்றத்தை இங்ஙனம் வெளிப்படையாய் எடுத்துக் கூறுவாளாயினாள். இது, "தன் வயிற் கரத்தலும்" (தொல். பொருளி: ௰) என்னும் நூற்பாவாற் கொள்ளப்படும்.

(உஅ—௩௧) 'பெண்டிரெல்லாம்' என்பதில் 'எல்லாம்' தன்மைப் பன்மைக்கு உரியது (தொல். எயரி: ௩௩). இங்கே படர்க்கைக்கு வந்தது இடவழுவமைதி. 'சார்ச் சார்ச்......ஓம்பு' என்பதை இருந்தவாறே உரைத்து, அதனுட் 'சிறுபாகராக' என வந்தமையால் 'அப் புதுப்பரத்தையர் கடாம் படாதபடி அவரிடம் வல்லமையாக நடந்துகொள்' எனத் தலைவி குறித்தாளென் றுரைப்பது சிறப்பு. 'பாகர்' என்பதிற் 'பாகு' என்பது சொல்; உரையில் நச். ஒருமையாய் உரைத்தமை காண்க.

## ௯௩

(க—உக) மிகுதி தோன்றப் 'பாட்டாதல் சான்ற' என்றாள். 'தேறியல் வேண்டும்' என்பதில், வேண்டும், உம் ஈற்றான் வந்ததோர் வியங்கோள். 'கருமை மலர்தல் பொருந்தின' என்றுரைத்தார் வெயில் நுழையாச் சோலை என்றற்கு. தலைவன் தன்வயமின்றிப் பரத்தையர் வயமாய் ஒழுகிக் கெடுதலின், 'ஈர்த்துய்ப்ப' என்றாள்.

(௩௰—௩அ) 'வாள் தானை': வாட்படை வல்ல சேனை; இங்ஙனந் தனியாக ஒருவகைச் சேனையிருந்தமை தெரியப்படும். 'தேற்றித் தெளிவிப்பேன்' என்பதற்கு ஆற்றித் தெளிவிப்பேன் என்பது சிறப்பு. 'மெய்யது,' அது மெய்; என்று தன் ஒவ்வாமை கூறினாளென்க.

## ௯௪

(க—எ) 'இழை அணி' என்பதில், இழையைப் 'பொற்படை' யென்பர் புறநானூற்றுரைகாரர் (கஉ௩ : ச) வேந்தன் செம்மையால் மாரி சுரக்கும் என்பது நல்ல உளநூலுணர்வோடும் மெய்யுணர்வோடுங் கூறும் உண்மை மொழி. செம்மையின் உணர்வாற்றல், இறைவன் அருள் வலியைப் பெறு முகத்தால், எல்லா அகப்புறப் பொருள்களையும் இயக்கவல்லதென்பது தமிழ்ச் சான்றோர் முடிபு. "கோன் நிலை திரிந்திடின் கோள் நிலை திரியும்; கோள் நிலை திரிந்திடின் மாரி வறங் கூரும்" என்று இந்நியங்கும் முறைமையையும் மணிமேகலை (எ : அ-க) சிறிது எடுத்துக்காட்டிற்று.

(அ-ம) பெரிய நடுக்கமுற்றவளை, 'அறநிழலுக்கு வேறான புறநிழலில் இடப்பட்டாளோ' வெனக் கூறுதலாற், புறநிழல்கள் அறத்தின் நிழலைப் போல் அத்துணைக் குளிர்ச்சியுடையவல்ல என்பது விளக்கினாராயிற்று. நச். 'நிழலின் புறம்' என மாற்றியுரைத்தலால் இச்சிறப்பும் இலதாயிற்று.

## நரு

(க-சு) திடுக்கெனத்தக்க கொடுமையை 'வெருவந்த கொடுமையும்' என்றார். அச்சம் வேறு, இத் துணுக்கென்பது வேறு. (கலி. மருதம்: உஉ-ன் உரைவிளக்கங் காண்க.) ஏனைய அரசர்களின் குடைகளைவிட உயர்ந்த தென்றற்கு 'ஏனையவற்றின் உயர்ந்த குடை' என நச். உரைத்தார்; (புறம். நகக: க-ச-ன் உரை காண்க).

(எ-கஅ) 'அருந்தவ முதல்வனை', நச். 'அறம் வளர்த்த நாயனை' ரென்றலின், அவரைச் சிவபிரானாகக் கொள்வது பொருந்தும். "வாய்மை யனுதலின்'' என அப்பெருமானைப் பரிபாடல் (ரு: நக) நுவலுதலும் இங்கு நினைவுகூரற்பாலது. 'திறம் பெயர்ப்பான்' என்று கொள்க. 'திறம்', இடம்; 'உடம்பிடத்தே' யென்றார் நச். 'பழிதபு முகம்' என்க.

மருதக்கலி உரைவிளக்கம்

முற்றும்.

---

## ச. முல்லைக் கலி

### க

(க-கூ) பிடவம், ஒரு முட்புதல். தடவுபு: வளைந்து (தொல். உரி: உங). ஞெலிபு: கடைந்து. கோடல், ஒரு கொடி. உரையிற் 'குந்தாலிப் படை'. யென்றமையாற் 'கணிச்சி' வேறு, 'மழு' வேறு என்க. நச். சிவத்தைமட்டும் பலவிடங்களில் 'இறைவன்' என்னுந் தலைமைப் பெயராற் சுட்டுதல் நினைவு கூர்தற்குரியது.

(க0-கச) 'நறை': எறு விடும்போது சுற்றும் நறுமணப் புகை.

(கரு-உம) 'உலண்டு', பட்டுப்பூச்சி; அதன் நிறம் புற்கென்ற புல்லிய நிறம்; என்றது, கருமை கலந்த செம்மை; புகர் நிறம் என்பதும் இது.

(நச-நரு) நெஞ்சம்; இதயம். 'மணிமாலை ஊதுங் குழல்' என்பதற்கு, அழகிய மாலைக் காலத்தில் ஊதுங் குழல் என்பது நல்லது.

(நக-சஉ) 'இடந்தல்' அகலச்செய்தலாகலின், அலர்ந்த என்றுரைத் தார். 'ஆயலதான கொல்லேறு' என்றியைப்பின் சிறக்கும்.

J

௨

(௯—௧௨) 'புகல் நல் ஏறு' என்பதிற் 'புகல்' விருப்பம்; உரையிற் 'புகற்சி' யென்றதும் அது. "பெரும்புகல் மறவர்" (மதுரைக். ௫௯௯) என்பதில் நச். 'விருப்பத்தையுடைய' என உரைப்பது நினைவுகூர்க. இச் செய்யுளில், மேல் ௨௫-ம் அடியிலும், 'புகலெழ' என்பதற்கு இவர் இப் பொருளுரைப்பர். மா: நிறம்.

(௧௯—௨௰) சிலை செறி : ஒலித்தல் மிக்க.

(௩௰—௩௨) உடலேறு : சினக்கின்ற ஏறு.

(௩௩—௩௯) 'தெண்கண்ணி......பொதுவன்' என்னும் அடைமொழித் திறங்கள் கண்டு இன்புறுதற்குரியன. 'சிறுகுடி', முல்லைநிலத்தார்கட்கும் வந்தமை கண்டுகொள்க.

௩

(௰—௨௧) மழை, இங்கு மேகம். இறைவனே அழித்தற்குரியனாதலின், அவனைக் 'கொலைவன்' எனவுங் கூறினார்; மேல் 'கூற்றுவன்' (கலி. ௱௩:௪௫) என்பதுங் காண்க.

(௨௪—௨௭) அரி: பகையான ஏறு. எரிதிகழ் கணிச்சி யென்றமையாற் 'கணிச்சி' இங்கு மழு.

(௪௰—௪௫) உறுதலடியாக, ஊற்றுக்களம் எனப்பட்டது. எருமைமேல் ஏறிய கூற்றுவனை எருமை என்றார். வடிம்பு, இங்கே கால் விளிம்பு. 'கூற்றுவனுக்குக் கூற்றுவன்' என்னுங் கருத்தால் இறைவனைக் 'கூற்று' என்றார்.

(௫௯—௭௧) 'தழூஉ': குரவை; தழுவி யாடுதலின் என்க. 'அஞ்சாராய் ஏறுகொள்பவர் உயிர் துறந்தும் அதனால் ஆயமகள் வருந்துதல் கொள்ளாள்; அவர்கள் அஞ்சாமையையே வியப்பள்; ஆனால் ஏறுகொள்ள நெஞ்சிலாதார்க்கே பெரிதும் வருந்துவள்; அத்தகையவள் தோள் அந்நெஞ்சிலார் எய்தற்கரிய' என்னுங் கருத்தில், 'உயிர் துறந்தும் நைவாரா ஆயமகள்' என இருந்தவாறே இயைத்துரைப்பது நல்லது.

௪

(௧—௧௭) 'மலிதிரை.......தென்னவன்' என்னும்அடிகள், பழைய கடல்கோள் நிகழ்ச்சியைக் குறிக்கின்றன; சிலப். ௧௧ : ௧௭—௨௨ அடிகளும் அவற்றின் உரையும் நினைவுகூர்க. 'தொல்லிசை ஆயர்' என்பதனால் ஆயர்குடி மிகப் பழைய குடியென்பது பெறப்படும். 'குரால்': குரால் நிறமுள்ள ஏறு.

நீல் நிறம் வாய்ந்த உமையம்மை பாகங் கூறினமையால், முக்கண்ணன் உருவம் கருமை கலந்த பொன்மையாகிய கபிலநிறத்துக்கு உவமை யென்க.

(உக - உரு) 'குருஉக் கண்' என்பதிற், 'குருஉ,' நிறமென்னும் பொருட்டு. தரவில், மூன்றாவதாகக் குரால் நிறமுள்ள ஏறு கூறினமை யால் இங்கும் அந் நிறமுள்ளதாக நச். வருவித்துரைத்தார். அரி : செவ்வரி கருவரிகள்; இங்கு அவற்றையுடைய கண்ணுக்கு வந்தமையின் 'ஆகுபெய' ரென்றார்.

(சடு - சுல) நச். உரைப்படி; 'துறந்து' என்பது 'துரந்து' என இருக்கவேண்டும். 'வாளகப்......போன்ம்' என்பது நல்ல நாகரிகம்.

(சுக - எஉ) 'தொழீ,' தொழிலையுடையவள்; தோழி என்பதும் இப் பொருட்டு; தொழு, முதனிலை; தொழுது செய்யும் செயல்கள் என்பது பொருள்; பின்பு, லகர மெய் அடுத்துத் தொழில் எனப்பட்டது. மதுரைக் காஞ்சியில் வரும் (கஉஉ) 'தொழுவர்' என்னுஞ் சொல்லுக்கு நச். தொழில் செய்வார்' என்று பொருளெழுதியிருத்தலுங் காண்க.

௫

(க - உஉ) முருகனுக்கு உடை செந்நிறமாதலின், இப்பகுதியின் உரையிறுதியில் நச். 'முருகன் தனக்குரித்தல்லாத வெண் துகில் உடுத்தாற் போல' என்றார். " உடையும் ஒலியலுஞ் செய்யை " என்னும் பரிபாடல் (கக : கஎ) நினைவு கூர்க.

(நக - சஉ) 'நறவின் முகை' என்றமையால், அதனைக் குருதியில் நனைந்த கொம்புக்கும், தும்பியை அக் கொம்பைச் சூழ்ந்து ஆடும் மணிக்கும் உவமையாகக் கொள்க.

(சரு - சசு) 'இகா' வென்னும் முன்னிலை யசையும் 'இக' வென்பதன் திரிபென்ப; சிலப். கஅ : சசு உரை காண்க.

(சுக - சுரு) 'கண்ணுடைக் கோலள்' என்றது, உயர்ந்த திறம்; "நுண்ணிய மென்பார் அலைக்குங் கோல் காணுங்கால் கண்ணல்ல தில்லை பிற" என்றார் திருவள்ளுவரும் (எக : ம).

௬

(க - ரு) 'இமிழிசை', இமிழ்த்தலை யுடையது; இமிழ் என்னும் ஒலி தோன்றப் பாற்பானைகளைச் சுறண்டுத லென்க; நச். அதனைப் 'பால் பற் றறச் சீவுதல்' என்றார். மட்கலனாதலின் 'மண்டை' யெனப்பட்டது. பிறர் ஏவிய தொழில் செய்வாராதலின் திருத்தமாகப் பேசும் நற்பழக்கமில்லாதவ ரென்றற்கு 'வழூஉச் சொற் கோவலர்' என்றார்.

(கரு - கக) 'உருகெழு......ஒத்தனர்' என்பது சிறந்த இயற்கைக் கருத்துள்ளது. 'வியன் குறிப்பு' என்பதும் அதனுரையும் தமிழ்முன்னோரது விரிந்த எண்ணத்தை விளக்கும்.

(உய - உஉ) உழலுங் கட்டை, 'உழலை' எனப்பட்டது. மாடுகள் நுழையாமல் தடுப்பதற்காக வழியில் இவ் வுழலைகள் கோத்து வைப்பர். இவை கோப்பதற்காகத் துளைத்து இருபுறமும் நிறுத்தியிருக்கும் மரங்களே இங்கு உவமையாகக் கொள்ளப்பட்டன.

(ருய - ருரு) மகளிர் தங் காதலரோடுங் கைபிணைந்து குரவையாடுதல் பரிபாடலுரை (ரு : அரு) முதலியவற்றாலும் பெறப்படும்.

எ.

(க—ச) 'குறும்பு', முல்லைநிலத்தூருக்கு வந்தது. 'இந்த ஆன் இத்தனைக் குடம் பால் தரும்' என்று தம் மரபின் பழக்கத்தால் மதிப்பிடவல்ல ஒருவகை ஆயரைக் 'குடஞ் சுட்டவர்' என்ப. இதனால் முன்னோர் மேற்கொண்டிருந்த 'ஆப் பாதுகாப்'பின் மேன்மையும் பயனும் நன்கு வெளிப்படும்.

(ய—கஉ) 'கெடுத்தது பெற்றார்போல்', பழமொழி. 'இகா': தாழாத; இகுத்தல்: தாழ்த்தல்.

அ.

(க—எ) 'பகையரசனது சேனை சில விடங்களிற் பெருகித் தங்கியும் சில விடங்களிற் சிறுகியிருந்தும் வெல்லும் முறை தெரிந்து பொருதல் போல, 'அகலல்குல் தோள் கண் பெருகி நுதலடி நுசுப்புச் சிறுகிப் படை தொட்ட இகலாட்டி' எனின் இயல்பா யிருக்கும். 'இறுத்தவாய்': வந்து தங்கிய இடம்; அஃது அகலல்குல் முதலியவற்றிற்கு உருவும் வினையும் பற்றிய உவமமென்க. 'படை விடு' என்றதில், 'விடுதல்' கைவிடுதல் என்று கொள்வது நல்லது; குலி. ாகூ: கசு-உ0-ம் அடிகளும் அவற்றின் உரையுங் கருதுக. 'அகலாங்கண்' என்பதற்கு மதுரைக்காஞ்சியில் (ருஉஎ) நச். 'அகன்ற ஊரிடத்தே' என்றுரைப்பர். தமிழாசிரியர் இங்ஙனம் பொதுச்சொற்களைக் குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு இடத்துக்கேற்ப வழங்கி, மொழிக்கு எளிமை கோலி வந்தமை பெரிதுங் கண்டுகொள்ளற்குரியது. 'நகல் வல்லேன்': விளையாடுதலை வல்லேன். 'அலமந்து' என்றார், அச்சோர்வு, விளையாட்டின் கிளர்ச்சியை அவாவுமாதலின்.

(உக—உச) 'மழகுழக்காகின்று' என்றாள், அவன் கூறுகின்ற ஏமாற்றமுள்ள கொஞ்சுஞ் சொற்கள் இளங்குழந்தைகட்குரிய என்றற்கு. கடவர்: கொடுக்கக் கடமைப்பட்டவர்,

(௪௬—௫௧) இப்பகுதியின் உரையாடல் நன்முறையில் இல்லாமையால், இவர் வினைவல பாங்கினரென்பது பெறப்படும். 'கட்குத்திக் கள்வன்', பழமொழி.

(௫௭—௬௬) பசிய நிறமுள்ள காஞ்சித்தாது உவமை கூறினமையால், 'தாதெரு' என்பது இங்குச் சாணம் ஆம். இன்றேல், அது சாம்பர்க்கும் ஆம். 'தாதெரு மன்றம்' என்பது பழந்தமிழ் நூல்களிற் பெருவரவின வாதலின் 'முதற் பொருள்' என்னுங் கருத்தில் வரும் 'தாது' என்னுஞ் சொல், தமிழ்ச் சொல்லாதல் தெளியப்படும். 'பயிர் பயிர்' என்பதில் முன்னது 'ஒலிக்குறி' யென்னும்பொருட்டு; பின்னது அதனை 'ஒலிப்பாய்' என்னும் பொருட்டு.

௯.

(௧—௮) 'பாண்டில்', தேரிற் பூட்டும் எருது (பதிற். ௬௰ - ௰ உரை). அவ்வெருதுபோல் தான் உழலாமைக்கு நாகு செம்மாந்ததென்க.

(௨௧—௨௭) 'மாங்காய்......போக' என்பது ஊர்ப்பெண்டிர் மோர் விற்பாளை நோக்கிக் கூறுஞ் சொல்.

௰

(௧—௭) 'இடு தேள் மருந்து', 'அளைக்கெளியாள் வெண்ணெய்க்கும் அன்னள்' என்பன பழமொழிகள்.

(௧௨—௧௫) 'விடிந்த பொழுதினும் போகாது இல்வயிற் கொடுந் தொழுவின்' என்று நச். மாற்றிக்கொண்டார். 'கடுஞ்சூல்' முதற்சூல் என்னும் பொருளில் முன்னும் வந்தது; (கலி. ௬௰ : ௨௭).

(௧௬—௧௯) பாலைக் காய்ச்சாமலே வெண்ணெய் எடுத்துவிடும் வழக்கம் பண்டும் இருந்தமை நினைவுகூரற்பாலது. அது, 'நெய் கடைபாலின்' என ஒரு பழமொழியாய்ப் பயின்றுவரும் அளவுக்குப் பெருகியிருந்தமையும் பெறப்படும். பால் மிகுதியாகக் கிடைத்துவந்தமையால் இவ்வழக்கம் ஏற்பட்டதாகல்வேண்டும். இக்காலத்தைப்போ லல்லாமல், அக்காலத்தில் உண்பதற்கும் விற்பதற்கும் வேறு பால் பயன்படுத்தப்பட்டதெனக் கொள்வது ஒக்கும்.

(௨௰—௨௨) 'அன்னையோ' வென்பது, நகையோடு கூடிய சொல். (தொல். களவியல்: ௨௰ - உரை; இளம்.) 'சான்றோர் மகளிரை' யென்றாள், தன்னுயர்வுந் தன் குடியுயர்வுந் தோன்ற.

௧௧

(௧—௨௪) பாடுபட்டுப் பயிரிடுதற்குரியதாகலின், தோட்டக்கால், 'பாட்டங்கால்' எனப்பட்டது. நச். முற்றூட்டாகிய என்றது வருவித்தது. ஆய

றிற், கோட்டினத்தாயர், கோவினத்தாயர், புல்லினத்தாயர் என மூவகையாருண்டு. முறையே எருமையினத்தவர், ஆனினத்தவர், ஆட்டினத்தவர் என்க. கோவினத்தாயரை நல்லினத்தாயர் என்பதும் வழக்கு. மக்கள் உயிர் வாழ்க்கைக்கு மிகவும் பயன்படவல்ல நல்லுயிர்களாகிய இவ் ஆட்டினம் ஆனினம் எருமையினங்களைப் பாதுகாப்பது ஒரு சிறந்த தொண்டாதலின், இவ் வினத்தார் சிறந்த வகுப்பினராவர். இது சிறந்த தொண்டெனக் கருதித் தமிழ்மக்களில் ஒரு சாரார் இதனைச் செய்ய முற்பட்டமையே அவர்கள் நாகரிக மேன்மையை நன்கு விளக்கும். ஆகவே, உரையில் 'மற்றை இரு கூற்றில்' என்றது, கோட்டினத்தாயர் மகளிரையும், கோவினத்தாயர் மகளிரையும் எனக் கொள்க. 'நனிமிகக் கொள்வாய்' என்பதை த்து மிகப் பெரிதும் உரிமையாகக் கொள்வாய் என்றுரைப்பின் இயல்பாயிருக்கும். 'செய்புறம்' என்பதிற் புறம், காலமென்னும் பொருட்டு. உரையில், 'ஆயர் மகளிரை வரைந்துகொள்ளும் இலக்கணம்' என்றது, ஏறு தழுவிக் கோடலை.

## கஉ

(க—ச) தார் வகைகளுள் விரவுத் தாரும் ஒன்று. வினைவல பாங்கிற் றலைவனாதலின் 'கல்லாப் பொதுவனை' என்றாள்.

(கரு—உகு) 'பொய்யாயின்......உடைத்து' என்பது தனதுள்ளத் துக்கு ஒருவகையாக அமைதி பிறப்பித்தவாறென்க. இச்செய்யுளின் துறைக் குறிப்பில் 'இது கைக்கிளை' யென்றிருப்பதனினும், 'இது பெருந்திணை' யென்றிருப்பின் மிகவும் பொருந்தும். தொல். அகத்: கரு—ன் உரையில் இவ் வுரையாசிரியரே இங்ஙனங் கருதிக் கிளந்துரைத்தலுங் காண்க. மேற் செய்யுட்கும் இஃதொக்கும்.

## கங

(கச - உக) 'மடம் பட்டு அறியினும்' என்பதைத்துரைக்க. 'காதல் கொள் காமம்,', அன்புள்ள காமம்; "காதல் செய் காமங் கனற்ற" (பு.வெ. கைக். பெண்பாற்: ச) என்றார் பிறரும்.

(உரு - உக) 'அல்கல்' என்னும் பெயரை எச்சப் பொருள்பட உரைத்தார். 'நாம் உடன் செலற்கே' என்றமையாற் கூட்டத்திற்குத் தலைவி இசைந்தமை பெறப்பட்டது.

## கச

(க - எ) வருந்தினன் என்பதை 'அழுதனன்' என்பது, இழிவு தோன்றக் கூறும் வழக்கு. 'அகல நக்கு' என்பதற்கு 'மிகச் சிரித்து' எனிற் சிறக்கும்.

(அ - கக) 'நினக்கு வருவதாகக் காண்பாய்' என்றது, நல்ல உள நூல் உணர்வோடு கூறுஞ் சொல்; "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார் திண்ணியராகப் பெறின்" (குறள். கூஎ : கூ) என்பது நினைவுகூர்க. 'வியங்கொளக் கூறு' என்றதும் அது; கேட்பவர்க்கு விளக்கந் தோன்றுமாறு தெளிவாகவும், பின்பு அதன்படியே ஒழுக விருப்பந் தோன்றுமாறு ஒரு முறைப்படுத்தி இனிமையாகவும் பேசவேண்டும். "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்", "விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்" (குறள், சுரு : ௩,அ.) என்பவையும் நினைவுகூர்க. இந் நுட்பங்களெல்லாந் தமிழ்முன்னோரது நாகரிக மேன்மைக்கு நல்ல அடையாளங்களாகும்.

(கஉ - உக) முல்லை நிலத்தார்க்கு, எருமைப் பேட்டின் கோடு நட்டு அதனைத் தெய்வம் உறையுங் குறியாக நினைந்து வணங்கும் வழக்கமுண்டென்பது இப்பகுதியிற் பெறப்படுகின்றது. நெய்தல் நிலத்தவர் சுறவின் கோடு நட்டுத் தெய்வம் பராவுதலும் நினைவுகூர்க. 'உலகம் பெறினும் அருநெறி ஆயர் மகளிர்க்கு இருமணங் கூடுதல் இயல்பன்று' என்பதனால் ஆயர் மகளிரின் உயர்ந்த பழக்கமுங் கற்பின் மேம்பாடும் நன்கு தெளியப்படும். 'தெருமரல் கைவிட்டிருக்கோ, அங்ஙனங் கைவிட்டிருத்தற்கு இருமணங் கூடுதல் இயல்பன்றே' என்று இருந்தவாறே வினைமுடிவு செய்வது நல்லது.

## கரு

(க - கூ) 'மெல்லியால்', 'தோழியாய்' என இருமுறை தோழியை விளித்தாள், கலக்கத்தால்; இதனால் மெய்ப்பாடு தோன்றச் செய்யுள் செய்யும் இயற்கைத் திறம் பெறப்படும். 'கோட்பட்டாங் கண்டாய்' என முடிபு முன் வந்தது, செய்யுளாகலின்; என்றது, இயற்கை தோன்றச் செய்வது செய்யுள்; இப்பகுதியின் உரையாட லியற்கை அங்ஙனமாகலின் என்க.

(ம-கசு) 'நெருப்புக் கைதொட்டவர்போல', பழமொழி. 'கடை', ஏழனுருபென்க. முடியா, செய்தெனெச்சம். ஆயர்மகளிர்க்கு நீல உடையே உயர்ந்த உடையாக. முல்லைக்கலி முழுமையும் உரைக்கப்படுதல் நினைவுகூர்தற்குரியது.

## கசா

(ரு-எ) தலைவியை நாகு எனக் கூறக் கருதினனாதலின், 'தொடுவாயின் நீங்கிச் சினவுவாய்' என்றான்; 'தொ[illegible] [illegible]தாழுவென்றார், ழகரம் டகரமாகலு முண்டாகலின்.

(ம-கஉ) 'எவர் வரினும் வருக; த[illegible] யான்; நீ யருளி நல்கப் பெறின்' என்பதனால் இது மிக்க காமத்[illegible]டல்.

(கரு—கஎ) 'புலத்தும் வருவையால்' என்று அவனது முன் வழக்கங் கூறினமையால் இப்போதும் அவ்விடமே வா எனக் குறியிடங் குறித்தமை குறிப்பாற் பெறப்படும்.

### கஎ

(க—ரு) நீலமணியைச் சேர்ந்த பொன், பசலைக்கு உவமை; 'பொன் னுரை மணியன்ன மாமைக்கண்" (கலி: ௬அ : கஎ) என முன்னும் வந்தது.

(சு—கூ) 'சேரிக்கிழவன் மகள்' என்றமையால் தான் அச் சேரியின் தலைமைக்குடியைச் சேர்ந்தவளென்று தனது செல்வாக்கைப் புலப்படுத்தினு ளாயிற்று.

(ய—கரு). 'இவை சிறுமுல்லை' என்று கூட்டுவது நன்று. 'எல்லிற்றுப் போழ்து' எனவே இயைக்க. 'நின்னை விடுவேன் யான்?' என இயல்பு வினவாகக் கொள்வது சிறப்பு.

முல்லைக்கலி உரைவிளக்கம்
முற்றும்

---

## ரு. நெய்தற் கலி

### க

(ரு—அ) 'தொல்வினை' என்பதில் வினை, நல்வினை. 'அவன் வினை யோன்' எனச் சேர்த்து 'அவனுக்குப் பகைவன்' என்றுரைக்க. கதிரவன் ஆட்சியுள்ள பகற்காலமும் மதியின் ஆட்சியுள்ள இராக்காலமும் அல்லாமல், அந்திப்பொழுது, ஆட்சியேயில்லாத இடைக்கால மாதலின் 'ஆண்டாற்கும் ஆளிய வருவார்க்கும் இடைநின்ற காலம்போல்' என்றார்.

(கூ—கஉ) 'மாலை நீ' மயங்க முடையை நீ; 'மருண்மாலையாய், ஆம், நின் பெயருக்கேற்ப மயக்கமுடையை நீ; ஏனென்றால், குவிந்த என் எழில் நலம் எள்ளுவாய்; புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்' என இருந்தவாறே இயைத்துக் கூறுவது நன்று. மேல் அடிகட்கும் இங்ஙனங் கொள்க. பிரி வின்றிக் காதலர்ப் புணர்ந்தவரென்றற்குச் 'சினைப் பூப்போல்' என்றார்; 'கோட்டுப் பூப்போல் மலர்ந்து பின் கூம்பாது' என்பது நாலடியார் (உகரு).

(கரு—கசு) பைதல், இங்கே குறைதல்; 'பக்கம் பாராட்டுவாய்' என் பதன் உரைத்திறம் அறிந்து மகிழ்க. 'யாழ்', யாளாக்கிளவிக்கு உவமை. தலைவி, இத் தாழிசைகள் மூன்றிலும் கேட்குநபோலப் பொழுதொடு கூறி னள். தோல், செய், உ௦க - ற், பிறவும் என்பதனால் மாலை கொள்க.

## உ

(க—கக) 'நிலவுக் காண்பதுபோல' என்பது பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கிவந்த உவமம் (தொல். உவ: உரு, இளம். உரை). 'கால' என்னும் பன்மையால் நச். தாமரை முதலியன என்றார். 'மரந் துஞ்ச' என்றமையால், மரங்கள் உறங்குதலுண்டு என்னும் இயற்கைப்பொருளுண்மையை முன்னோர் தெரிந்திருந்தமை கண்டுகொள்க. 'தலைசாய்த்து' என்பதனால் இன்னும் அப் பொருளறிவின் நுணுக்கம் பெறப்படும். 'மன்று', இங்குத் தொழு. 'வதி': வதியும் இடம்.

## ந

(க-கூ) அருளிலிருந்து அறநெறி பிறத்தலின், 'காட்சியினால்' என ஏதுப்பொருளுரைத்தார். "அறனும் அருளுடையான் கண்ணதேயாகும்" என்றார் பிறரும் (சிறுபஞ். ரு). 'வெருவுற உய்த்தவன் என்பதற்கு எல்லாரும் வெருவுதலுறும்படி தன் முயற்சிகளைப் பொல்லாங்குகளிற் செலுத்தினவன் என்றே உரைக்கலாம். 'நெஞ்சம்போல் இருள் தூர்பு' என்க. மாலை இனிமைபோல் வருதலால் உரையில் 'மெத்தென மெத்தென' என்றார்.

(ய—கஅ) அயர்தல் உணர்வழிதலாதலின், 'கையறவெய்துவிக்க' என்றுரைத்தார். போர்: தொழில்; அதன் தொழில், தொலைதல்; ஆகவே போரின் தொழிலாகிய தொலைதலென்பது அப் போரை யுடையார்மேல் நின்றதென்றற்கு நச். தொழிலின் தொழில் தொழிலுடையதன்மேல் நின்றதென்றார்.

## ச

(கக - கச) 'வாராயாய் நீ கைவிடுகையினாலே வருந்திய மேனியாட்குத் துணையாகி' என இருந்தவாறே இயைப்பது எளிது. 'கமழ்......குலை போல' என்பதனாற் கோடல் மலரின் இயற்கைகள் தெளிய விளக்கப்பட்டமை கண்டுகொள்க.

(உய - உரு) தலைவியை வருத்துவோனும் வாழ்விப்போனுந் தலைவனேயென்பது அலையுவமையின் கருத்து. விரைந்தோடுமாறு அமைக்கப்பட்டிருந்துந் தேரின் அமைப்பியல்பைக் 'கடுந் திண் தேர்' என்பதிற் 'கடுமை' உணர்த்தும்.

## ரு

(க - எ) ஒழுங்குபட நின்று விளையாடுதலை 'ஒழுங்குவிட்டு விளையாடும்' என்றார் நச்.; 'ஒழுங்குக்கு இடம் விட்டு' என்க. 'மாலைபோல் தொடர்ந்து கைவிடாத் தோழிமாரோடும்' (சிந். கககய) என்றார் பிறரும். 'உண்கண் நலனிழப்ப' என்க. 'துன்னு செய்து அமர்ந்தனை'

என்பதற்குப் பொருந்தாதன செய்து அவற்றிலேயே அழுந்தினை என்றுரைத்து அத்தொடரைத் தலைவியின் செயலாகக் கொள்வது நன்று. முன்னர்ச் சிறிய துனித்தனை யென்றமையால் இப்போது பெரிதும் செய்தனை என்றற்கு 'அமர்ந்தனை' என்றார். தலைவன் குறைகளைப் பலவு நூறடுக்கினை யென்க. 'அலவல்,' அலமருதற் பொருட்டாதல் "அலவுற்று" (குறிஞ். எ) என்பதன் உரையினுங் காண்க.

(உ0 - உச) யாமமாகிய நடுநாள் என்க. "நடுநாள் யாமத்தும்" எனப் புறத்திலும் (கஅக) வந்தது. 'துயில்கொண் டொளித்த' என்பதைக் காமநோயின் செயலாகக் கொள்வது நன்று. துயிலை ஒளித்து வைத்தமையால் 'ஒளித்த' என்றார். 'காமநோயிற் கழீஇய நெஞ்சந்தான், அங்ஙனம் ஒளித்து வைத்தற்குக் காரணமான அவர்பாற் பட்டதாயின்' என்றியைத்துக் கொள்க; அதற்குக், 'கழீஇய': சென்றழுந்திய என்பது உரை.

இப்பாட்டின் துறைக் குறிப்பிற் 'காமஞ்சாலா இளமையோள்வயின்' என்றிருப்பது வாளா தலைவிமாட்டு எனவே இருக்கலாம்.

சா

(க - ரு) திருமாலுக்கு 'அரும் பொருண் மரபு' என்றது, அவன் அருள் நிலை முதலியவற்றை.

(கூ - கக) சுறவினம் கடிகொண்டது என்க. மக்கள் வெயில் தாழ்ந்த மாலைக் காலத்தில் வழிச்செல்வாராதலின், அக்காலத்திற் கடிகொண்டதாகக் கூறினர். மக்கள் அஞ்சிப் போகாமல் நிற்றலைச் சுறவின்மேல் ஏற்றி, அது காத்தல் கொண்டதாகக் கூறப்பட்டது.

எ

(க - ச) தாய: தாவியளந்த. 'முதல்வன்' என்பதற்கு நச். 'எப்பொருட்கும் அடியாயிருக்கின்றவன்' என்றுரைத்தார்; எப்பொருட்குங் காரணமாயிருப்பவன் என்பது கருத்து.

(ரு - அ) 'உள்ளாயாய் நீ துறத்தலின்' என்க. 'பிறைநுதல் வெளிப்படுத்தாதவிடத்து இவள் என்னையும் மறைத்தாள் மன்' எனக் கொள்க. மேல் தாழிசைகட்கும் இஃதொக்கும்.

(கூ - கஉ) தோழியர்களிலேயே இவள் அழகு பெற்றவளென்றற்குத் 'துணையாருள் தகைபெற்ற' என்றார்.

தலைவி தன் உள்ளத்தைக் கரந்தாலும் அவள் நுதல் தோள் கண் முதலியன வெளிப்படுத்திவிடும் என்பது, "கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண், உரைக்க லுறுவதொன் றுண்டு" (குறள், கஉஎக) என்பதனுலுங் காண்க.

அ

(க - எ) செய்த பொய்மையை நெஞ்சம் எப்படியும் வெளிப்படுத்தி விடுதலாலும் தன்னையே எஞ்ஞான்றும் புண்படுத்தி நிற்றலாலும், 'நெஞ்சத் துக் குறுகிய கரியில்லை' என்றார். பரி: விரைந்த நடை; 'வண்பரி' என்றார், அந் நடையின் வளத்துக்கு. 'நலப்பாடில்லாத ஆராய்ச்சி' யென்றதற்கு, ஆராய்ச்சியின் முடிவு நலப்பாடில்லதெனக் கொள்க.

(அ - கக) முள்குதல். கூடுதல் (சிந், : சஉ0); 'முள்கிய தொடர்பினை யுடையவள் தன் உண்கண் அவிழ்பனி உறைப்பவும் அவளை நல்காது விடு வாய்' என இயைத்துரைப்பின் இயல்பாயிருக்கும். அடுத்த அடியிலும் 'எல்வளை தழை நைதஇ நின்னால் நல்கப்பெற்ற தொடர்பை யுடையவள் சாஅய் அழப் புல்லாது விடுவாய்' எனக் கூறுக. 'நல்கிய': நல்கப்பெற்ற. அதற்கடுத்த அடியிற் 'சிலம்பினையும் மொழியினையும் பின்னொடு பொருந்திய அகன்ற அரவின் படம்போன்ற அல்குலையுடையவள் நுண்வரி கெடும்படி வாராது விடுவாய்' என இருந்தவாறே உரைத்துக்கொள்க.

கூ

(க - ரு) இடன்: இங்கு உலகம்; வருந்திய உலகம் அவ்வருத்தத்துக்கு மாறாகப் பின் மகிழ்ந்து ஏத்துதல் கருதித் 'தன் மலைந்து' என்றார்; தனக்குத் தானே மாறுபட்டு என்பது பொருள். நாரையின் சிறகு சிவந் திருத்தல் "செந்தூவி நாராய்" என்னும் ஐந்திணை எழுபதினாலும் (சுஅ) பெறப்படும்.

ய

(க - ரு) பூவின கைதையும் என்பதற்குப் பூவினவான கைதையும் என அல்வழிப்பொருள் உரைப்பது நன்று. நேமியான், வரிமணற்கு உவமை.

(சு - கூ) முதலில் நீர் வார அழுது, பின் உள்ளத்தளவாய் வருந்துதல் தோன்றக் 'கடும்பனி அறல் இகு' எனவும், அதன் பின் 'பனி மல்க' என வுங் கூறினன்.

(ய - கரு) நச். 'சிறிதாகையினாலே' என்றது, சிறிதாய்விடுகையினாலே என்னும் பொருட்டு.

(கச - கஅ) 'வேயின் நலம்போன்ற நலத்தை இழந்தோள்' என இருந்தவாறே உரைக்கலாம். 'பொறையாற்றாள்' என்றமையால், மெலிந் தமை பெறப்பட்டது.

கக

(ரு - கூ) காமநோயைக் குறிக்கப் 'பிணி' என்னுங் குறியீடு வருதல் கருத்திருத்தற்பாலது. ஓயாது ஒலித்தலை 'விளியாது நரலும்' என்றார்.

(மு - உக) 'ஆங்கு': பிரிந்த விடத்து; 'அலந்து': வருந்தி என்பது உரை. கொள்வானிடம் செல்லாத தனது பொருளை இரத்தற் கருத்தில், 'தா' என்னுஞ் சொல் வருமென்பது தோல். எச்: ருமு-ன் உரையிற் காண்க 'பேதையை', முன்னிலை.

(உரு - உசு) அனை: அங்ஙனம் அவன் அருளுகின்ற தன்மை.

கஉ

(க - எ) 'படைத்தான்கட் பெயர்ப்பான்' என்பதனால், படைத்தலும் அழித்தலும் ஒரு முழுமுதற் கடவுளின் செயலேயென்பது, விளக்கி அதனால் ஒரு முதல்வன் உண்மையும் அவன் உலகுக்குத் தலைவனாதலும் வெளிப்படுத்தினாராயிற்று. உயிரெல்லாம் என்னும் பன்மையான் உயிர்கள் பலவாமாறும் பெறப்பட்டது. மலைந்திருத்தல், இங்கே மேற்கொண்டிருத்தல். எல்லைக்கு: பகலுக்கு. ஊழிகளின் இயல்பு கூறும் உ - ம் பரிபாடலடிகள் (க-கரு) இங்கு நினைவுகூர்தற்குரியன.

(அ - கக) 'அவன்திற நோய்', ஒருசொற் றன்மைப்படும் இயல்பினது. மன்று: வெளியிடம்; குழ லினைவதுபோல் மகளிர் இனைதல் புறத்திலும் (கசரு) வந்தது.

(உக - உரு) அறைகோடல்: தெரிந்தும் வஞ்சித்தல்; உரையிறுதியில் இதுவும் காலம் மயங்கிற்று என்பது, நெய்தலில், அதற்குரியவல்லா மாலையும் இருளும் பனியும் மயங்கி வந்தமையா லென்க.

கங

(க - எ) 'பொய்' என்றது தீமையை. நல்லூழிச் செல்வம், குடிகளுடையதுமெனக் கொள்க. 'கண்ணில்லா' என்றார், "கல்லாதான் ஒட்பங் கழிய நன்றாயினுங் கொள்ளார் அறிவுடையா" ராகலின் (குறள், சக : ச).

(அ - கசு) இப்பகுதிகளில் ஐயர் அழலெடுத்தலும், மலர் கூம்பலும், குழல் இனைதலும் மாலை நேரம் வந்தமை நினைவுகொள்ளச் செய்தலின், அதனால் தலைவி வருந்த நேர்ந்ததெனக் கொள்க. தான் இன்பம் நுகர்தற் கில்லாத நேரத்திற் குழலினைதலை அவள் விரும்பாளாதலின், உரையில் நச். 'இன்பத்தை வெறுத்தல்' என்றுரைத்தார். 'அரும் படர்' என்பதில் அருமை' இன்மைப் பொருளில் வந்தது, 'அருங்கேடன்' என்பதிற்போல.

(கஅ - உக) 'குடிபுறங் காத்தோம்பல்' என்பதற்குப் பரிமேலழகர், "குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணுதல்" (குறள், ருசக) என்றுரைப்பர். இது நச். உரையினும், சொற்பொருளை முழுதுங் கவ்விச் சென்று நலம் மிக்கதாயு மிருக்கின்றமை காண்க.

## கச

(க—கக) 'கடற்றெய்வமெனப்படும் நீரை நோக்கி' எனவே உரைப்பது நன்று. 'சாயலாய்' என்பதன் விளக்கம் இலக்கிய நலமுள்ளது. இனமீன்: சுறாவுக்கு இனமான மீன். தாழையின் விழுது கயிறாகவும், நெய்தல் மாலை அக் கயிற்றிற் கட்டிய மாலையாகவும், சுறா மருப்புக்கோத்த பலகை அதற்குப் பலகையாகவும் ஊசல் அமைக்கப்பட்டது. சுறா மருப்பை நெருங்க அடுக்கிக் கயிற்றிற் கோத்தால், அது பலகைபோலாகும். அம் மருப்புகள் சிறிது வளைவாயுமிருக்குமாதலின், அவற்றாற் கோத்த பலகையும், தன் மேற் படிய அமர்தற்கேற்ற வளைவில் வசதியாயிருக்குமென்க.

(கஉ—கச) மாழை, இளமைக்கு வந்தமையின், மடம், பேதைமைக்குக் கொள்ளப்படும்.

(கரு—உ௰) 'நாணின என்பது' என முடிப்பதுபோலப் பன்மையில் 'நாணின என்பவை' என முடிந்தது. மேலும் இங்ஙனங் கொள்க. நச். தொழிற்பெயர் என்றதும் இதற்கு.

(௩க—௩௪) தானே இறந்துபோன மீன்களைப் புள்ளினம் உண்ணும் என்பதனால், இறைவன் படைப்பு, ஓருயிர் மற்றோருயிரைச் செகுத்துண்ணுமாறு அமைக்கும் நோக்கமில்லாததென்பது பெறப்படும். பெரிதுந் தெளிதற்குரிய இவ்வுயர்ந்த கருத்தை ஆசிரியர் இங்கே பெறப்படவைத்த திறம் அறிந்து போற்றுதற்குரியது.

(௪க—௪௫) நச். உரைப்படி 'வால் சேர்ப்பு' என்றியைக்கவேண்டும். 'வால் நீர்' எனவேகொண்டு, 'மிக்க நீர்' என்னுங் கருத்திற் 'கடல்' என்றுரைப்பது நல்லது. ஆழமான நீர் என்னுங் கருத்திற், கடல், 'தாழ் நீர்' எனப்பட்டமைபோல (இப்பாட்டு, உஉ-ம் அடி); மேலும் (க௩உ: க) வேறு காரணம்பற்றி 'உரவு நீர்' எனவரும். தலைவன் ஊக்கியதைத் தோழி ஊக்கினேனெனத் தலைவி மருளுதலின், 'யானென உணர்ந்து நீ நனிமருள' என்றாள்.

## கரு

(க—எ) உண்ட இளைப்புப் புள்ளினங்கட்கும் உண்டாகலின், 'அசாவிடூஉம்' என்றார். 'இறைகொளக் கலம் வாய் சூழும் கடல் சேர்ப்ப' என்க. இப் பகுதியின் உரையிறுதியில் நச். 'இரை கவர்ந்து துணைபுணர்ந்த பறவைகளும்' என்றது நல்ல தொடர்.

(அ-கக) 'பகற்கொண்ட சுடர்போல்', பழமொழி. அளவாகப் பேசுதல் பிறரைக் கவரச்செய்யும். மகளிர்க்குச் 'சின்மொழி' என்னும் பெயரிருத்தல் அவர்க்கு இயல்பாகவேயிருக்கும் இவ்வரிய திறத்தையும் நாகரிகத்

தையும் நன்கு காட்டும். நீடு இறை: மிகத் திரண்ட. மறை என்பது இங்குக் களவொழுக்கம்.

(உக-உச) வழிபட்ட தெய்வம் தன்னை வழிபட்டாரையே வையவைக்கும் என்னும் உண்மை இப் பகுதியில் வெளிப்படுகின்றது அவர் நலங் கருதியே என்று கொள்க.

கசுர

(க-ரு) தவ முதல்வர்களில் முதல்வன் 'தக்கணாமூர்த்தி' யாகலின், 'சீர்மிகு சிறப்பினோன்' என்பது அப்பெருமானைக் குறிப்பதாயிற்று. முதல், ஏழன் பொருளது.

(சு-கச) இப் பகுதி சிறந்த நல்லியல்புகளின் இலக்கணங்களைத் தெளிவாக விளக்குகின்றமை அறிந்துகொள்ளுதற்குரியது.

கள

(க-ம) 'ஒல்லாதார், யானை உடன்று ஓடுமாறு அதனை உருத்து உடன் எறிதலின், அகலத்தோன், அவ் யானையின் அணிநுதலில் அழுத்திய ஆழிபோல்' எனவும், 'இருங்கடல் ஒலித்து இரவுக் காண்பதுபோலக் கரை சேர' எனவுங் கொள்வது இயல்பாயிருக்கும். யானை மலைக்கும், ஆழி அதில் மறையும் ஞாயிற்றுக்குங் கொள்க. இரு நிலத்தைப் பெயர்ப்பது போன்ற மருண்மாலை என்க. காண்பது என்பதற்குப் பார்ப்பது எனவே உரைக்க. நச். இப் பகுதியை வேறு வேறாய் இயைத்துரைப்பது இயல்பாயில்லை.

(கக-உஉ) முதல் தாழிசையில் 'ஆழ்ந்தாங்கே' என்பதற்கு உரைத்தாற்போலவே ஏனைத் தாழிசைகளினுந் திரிபின்றியே உரைக்கலாம். இரண்டாந் தாழிசையில் 'உழந்து' என்பதை இருந்தவாறே கொள்க. மூன்றாந் தாழிசையில் 'கலக்கத்துள் ஆழ்ந்தாங்கே கையறு நெஞ்சினேன்' என்க. 'வையினர்' என்பதற்கு 'வைத்து' என்றுரைக்கும் இவ்வுரையே சிறந்தது; தொல். பொருளி: ரும-ன் உரையில் இதனை இவ்வுரையாசிரியரே வஞ்சித்தற் கருத்துக்கு மேற்கோட் காட்டியிருப்பது பொருந்தாது, தலைவி தன் காதலன் கருத்தில் தீது கூறுமை சிறப்பாதலின் என்க; மேல் கஅஎ-ம் பாட்டில் தலைவி கூறுங் கூற்றின் நயம் இங்கே நினைவுகூரற்பாலது. பனி என்றது இங்கே முன்பனியை. மருதத்துக்குரிய பனிக்காலமும் முல்லைக்குரிய மாலைக்காலமும் நெய்தலில் வந்தது காலமயக்கம். நச். மூன்னும் (நெய்தற் கலி, கஉ) காலம் மயங்கிற்றென்றமைகருதுக.

கஅ

(க—ரு) பயில் திரை: செறிந்த அலைகள். நடு நன்னாள்: நள்ளிரா. 'பாய்ந்தூறாஉம்' என்பதில் உறுதல், முழங்குதல் என்னும் பொருட்டு.

(கசு—உ0) 'துயல்வரக் கடவுமதி' எனவேயும் இயைக்கலாம். வரைவு கடாதலில், இங்ஙனந் தலைவன் பெருமைகளை நினைவுகூர்வித்து வரைவு கடாவுவது சிறப்பு.

கக

(க—ச) அலவன் ஆடு அளை வரி, கவறு உற்ற வடுவை ஒக்கும் என்பது இயல்பான சொற்பொருள். அலவன் விளையாடுகின்ற, புரளுதலால் அமைந்த வரிகள் என உரை கொள்க. அளை: புரளுதல். வரி: ஈர மணலில் அமைந்த வரிகள்; புரண்டு விளையாடுதலால் 'ஆடு அளை' என்றார்; 'ஆடுகின்ற ஆட்டம்' என்பதுபோலக் கொள்க. அலவன் புரளுதல் கவறு புரளுதலை ஒக்கும் என நச். உரைத்தது, இவற்றின் கருத்து; இயல்பான சொற்பொரு ளன்று. இஃது எளியோர் மண் தரையில் ஆடுங் கவறுதலின், வடுவுற்ற தென்க.

(ரு—கசு) வித்தம்: சிறுதாயம். உழப்பவோவென்பது அது தகவாகா தென்பது காட்டிற்று. 'கொடுக்கத் தக்கவன் நீயானால் இங்ஙனம் உழப் பதும் பொருந்துமோ' என்பதே நேருரை. அப்பொருள், அக் கவறு. இத்தாழிசைகளிற் கவறாடலின் விளக்கங்களுங் கூறப்பட்டிருக்கின்றன.

(கஅ—உக) 'பாண்டியஞ் செய்தல்': உழைப்பெடுத்தல்; 'பாண்டி யம்' அறிவான உழைப்பு; நச். 'உழவாடி' யென்றது, உழைப்பாளியை.

உ0

(க—எ) உடம்பு மயங்கிச் சுழலுதலால் 'உலமந்து' என்றார். அவ் வதிர்ச்சியால் இழை ஒலித்தது. இப்பகுதியின் தொடர்களை இருந்தவாறே உரைப்பது நல்லது.

(அ—கஉ) வாக்கு: வார்ப்பு; அஃதிங்கு வடிவை உணர்த்தியதாகக் கூறினர்.

(கஅ—உஉ) இருளை நீக்குதல்போலவே பலவகையான நோய்களும் நீங்குதற்குச் சுடர் காரணமாயிருத்தலின், 'நோய்தடி நெடுஞ்சுடர்' என்று ரெனக் கொண்டு இயைப்பது நல்லது. 'சுடரை' ஞாயிறெனக் கொள்வது சிறக்கும். 'நெடுஞ்சுடர்' 'அற நீக்கும்' என்னும் ஆற்றலும் இதற்கு வலிவு தரும். இருள் நீக்குதலும் நோய் நீக்குதலுமான நன்மைகள் ஞாயிற்றின் கண் இருந்தாலும், சுடும் இயல்பும் அதற்குண்டு. ஆனால், தலைவன்பாற்

சாயலே உளது. எனினும் அச் சாயலாற் கனலும் எரிவு, ஞாயிற்றின் தீயி னாற் கனலும் எரியினுங் கொடிதா யிராநின்ற தென்றாள் என்க.

(உச–உஅ) நெஞ்சு எப்படியும் பொறுக்கத் துணிந்தது ; ஆனால் அவர் உறீஇய நோய் நீங்குதலரிதா யிராநின்றது என இயல்பாகவே உரைப்பது இனிது.

## உகூ

(க–கக) இருந்தவாறே உரைக்க.

(உ௰–உரு) 'உரிது என் வரைத்தன்றி' என்பதற்கு உரிதாக என் வரைத்தன்றி என்பது நல்லது ; உரித்தல்லாததுபோல் மூழ்கி என்பது தோன்ற நின்றது.

(உச–உரு) உளைய, மேன்மேலும் உளைய ; காமநோயுடையாராயின் அருமையறிந்து உசாவுவர்; அதற்கயலார் அதனியல்பறியாது உசாவுதலின், மேன்மேல் உளைதற்கு இடனாயிற்று.

(உரு–ருக) துன்பத்தில் துணையாயிருக்கும் மடல் இன்பத்தில் இடம் பெறுதற்கில்லை என்னுங் கருத்தால், 'இன்பத்துள் இடம்படா தொழிக' என்றாள். இப்பொருட்கு 'இவட்பெற' வென்பதை இவளைப் பெறுகை யினாலே என்றுரைத்துக்கொள்க. 'அன்புற்று இரங்கினள்' என்றியைப் பது நல்லது.

## ௨௨

(க–கரு) சான்றவர் என்னும் 'அர்' ஈறு, 'ஈர்' என்று விளியேற்றது (தொல். விளி: உக) ; ஆகலிங்குச் 'சான்றவிர்' எனக் குறுகி நின்றதெனக் கொள்க. அதனைக் காரணமாகக் கொண்டு என்னுங் கருத்தால்; 'அதனை முதலாகக் கொண்டு' என்று நச். உரைத்தார். 'ஊர்ந்து' என்பதனால் இஃது ஏறிய மடற்றிறம் (தொல். அகத்: ருக) ; மேலும் இங்ஙனங் கொள்க.

(உ௰–உரு) ஆண் எழில், ஆகுபெயர் ; 'ஏர்' என்னும் பெயரால் வந்த படை என்க.

(உரு–உக) 'ஆனமை', தணியாமல் மேன்மேற் கனலுதற்கெனிற் சிறக்கும். 'நகை' என்பதற்குப் புன்னகை யென்பதினும் 'மகிழ்ச்சி' யென்றது நல்ல உரை, மகிழ்ச்சியிற் புன்னகையும் அடங்குதலின்.

(ருரு–ருஎ) பொதுவாகக் கூறாமல் அரசனை என்றலால், இப் பகுதி ஒரு கதை நிகழ்ச்சியை உட்கொண்டதென்பது பொருந்தும். பாரதத் திலுள்ள (ஆதிபர்வம், அ௰ - அஎ) யயாதி மன்னன் துறக்கம் பெற்ற வர லாறு நினைவுகூர்தற்குரியது. துறக்கம் 'உயர்நிலை யுலகம்' (மது. ககஎ) எனப் பிறண்டும் வந்தது. தம்மை யடைந்தாரது துன்பத்தை விரையத் தீர்த்தல் சான்றோரியல்பாதலின் (புறம். உகூகூ : அ-௰) இங்ஙனங் கூறினன்.

## உ௫

(க—கஉ) பண்டறியாதீர்போல வென்றாள், மடலேறுதல் பெரும்பாலும் நிகழ்வதில்லாமையின், மடலன்று மா என்றாற்போலப் 'பூவல்ல தார்' என் றான் என்று கொள்வது சிறக்கும்; பூளை, உழிஞை, முதலியன கொண்டு தார் கட்டுதல் வழக்கமில்லாமையால் இவற்றைத் தனிப்பூவெனக் கருதி னார்க்கு, அன்று, மாலைதான் என்றானென்க. பீலித்தார், தார்ப்பீலியெனப் பட்டது. மயில் வந்தமையால் மலையோடு புனங் கூறினர். பீலியோடு நூலில் ஆவிரமலரைக் கட்டிய கண்ணி, மணியோடு அடர்பொன்னைக் கட்டியது போன்றிருந்தமையின், மணி கட்டி அடர்பொன் அவிர் வய்க்கும் ஆவிரங் கண்ணி என்றானெனக் கொள்வது இயல்பாயிருக்கும். பூளை உழிஞை பீலி ஆவிரம் என்பவை கட்டிய மாலை என்பது பொருள். இது மடன்மாவுக்குச் சூட்டப்படுவது. 'வடிய வடிந்த வனப்பு' என்பதற்கு ஒழுகும்படி வழிந்த அழகு எனின், எளிதாயிருக்கும். புற வனப்பினால் என் நெஞ்சமாகிய அரண் இடிய, அந்நேரத்தே அவ்வழியிடையே மென்மை என்னும் பெண் மையியல்பினள் ஒருத்தி உட்புகுந்து என்னைக் கைக்கொள்ளும் என்றுரைப் பது இனிது. 'சாயல் ஒருத்தி' என்றமையின், இங்குப் பெண்மை என்னும் அகவியல்பு தேறப்படும்.

(கரு—கசு) 'என்னுனும்,' ஏதானும் எனினும் ஆம்.

(கஎ—உ0) உரையில், இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்கமாட்டுவராயி னும், கண்ணோட்டமாயினுஞ் செய்தலிலர் என்றிருப்பின் சிறக்கும். தலைவி யின் உறவினர்பால் ஏற்பாடுசெய்யுமுகத்தால் அவர் அதனைத் தீர்க்கமாட்டுவ ரென்க.

(உ௫—உஅ) உயிர்போதலாகிய வருத்தந் தீரும்போது உயிர்ப்புண்டாத லின், நச். அதற்கு 'வருத்தந் தீர்தலுளதாம்' என்றார்.

(௩0—௩௪) அறனும் என்னும் உம்மையாற் புகழும் உரைக்கப்பட்டது. மார், அசைநிலை.

## உ௬

(க—சு) புரிபு; வேறுபட்டு; வேட்டவை: மனம்போன போக்கு. 'அரிதிற் றோன்றிய மக்கள் யாக்கையின் நோக்கத்துக்கு வேறுபட்டுத் தாம் மனம் விரும்பியவை செய்து, தாஞ் செய்தாற்போல மற்றவர்களையுஞ் செய்யுமாறு காட்டி, இங்ஙனமெல்லாம் முற்பிறப்பில், அறம் பொருள் இன் பம் என்று சொல்லப்படும் அம்மூன்றில் அறம் என்னும் ஒன்றன் பக்கம் சேராதவர்கள் இப்பிறப்பிற் செய்யுந் தொழில்களை நூல் விதித்தது, இங் ஙனம் மடலூர்ந்து பாடி வரற்கு' என்று இருந்தவாறே உரைப்பது நன்று. மடலூர்ந்து பாடிவரல், அத்தகையார் செய்யுந் தொழில்களுள் ஒன்று என்ற

படி. 'மழை விழை தட்க்கை' என்பதிற்போல, 'வேட்டனள்' ஒத்தன ளென்னும்பொருட்டு எனின், எளிதாயிருக்கும். 'அம்ம', கேட்பிக்கும் பொருட்டாதல், "அம்ம கேட்பிக்கும்" (தொல். இடை: உஅ) என்பதனால் அறியப்படும்.

(கஎ—உ0) கல்வி வல்லமையில் தலையான திறம் 'வல்லார்முற் சொல் லுத'லாதலின், தான் கற்றான் என்பதற்கு அதனைக் கூறினான்.

## உரு

(க—கஉ) 'கண்ணினும் முகத்தினும் நகுபவள்' என்பது பெண்மை யின் சிறந்த நாகரிகத்தைக் காட்டிற்று. நகும், நக்க அப்பொழுதே அழும் என்பது கலக்கமென்னும் மெய்ப்பாட்டுக்கு நல்ல இலக்கியம்.

(கக—உரு) 'என்னைச் சிதை செய்தான் இவனெனவும், அவனால் யான் உற்றது இதுவெனவும் எய்த உரைக்கும் உரன் அகத்துண்டாயின்' என இருந்தவாறே உரைப்பது நன்று. இது பெயரும் பெற்றியும் முறையே கூறியவாறுமாம். (தொல். பொருளி: சஉ - உரை)

(உச—உஅ) பிறிதொன்று நாடுவேன் எனவே இயைத்துப் பிறிதொன் றாகிய கடற்சுழியை நாடுவேன் என உரைப்பின் இயல்பாயிருக்கும். கொன்றைமலர் அதன் தெய்வத்தன்மையால் மாண்மலர் எனச் சிறப்பிக்கப் பட்டது; ஓங்கார வியல்பினை அது நன்கு விளக்கும்; திருமந்திரமென் னுந் திருமுறையில் அது பெரு வரவினதாய் அருளிச்செய்யப்படுதலும் நினைவுகூர்க. கங்குலை நள்ளிருண் மாந்தர் கடிகொண்ட கங்குல் என் றான், அம் மாந்தரையும் அறியாமல் தலைவன் உள் நுழைந்தனன் என்பதற்கும், அம் மாந்தர் செய்தலாகிய வளைத்துப் பிடிக்குந் தொழிலைத் தலைவி தான் செய்ததாகக் கூறுதற்குமென்று ஒரு நயங்கொள்க. தொடுத்தேன் என் னுஞ் செய்யுட் சொல்லுக்கு நச். வளைத்துப் பிடித்துக்கொண்டேன் என் றுரைத்ததிலும் இந் நயங் காண்பது பொருந்தும்.

(சரு—சசு) 'சிதைத்தானை' என வந்தும், மீண்டும் 'நலஞ் சிதைத் தான்' என வந்தது, தலைவி கலங்கிய நிலையினளாதலின்; இங்ஙனமெல் லாம் அவ்வந் நிலையின் இயற்கைக்கேற்பச் செய்யுள் செய்தலே நல்லிசைப் புலவர் திறமாம். இவ்வாசிரியர் திறத்தை இப்பாட்டின் ஈற்றிலும் நச். தவிராது குறித்து வைத்தமை பெரிதுங் கருத்திருத்தற்பாலது.

(சஎ—ருய) மாந்தளிர், மாலை வெயிலுக்கு வந்தது; ஆகுபெயர்.

(ருரு—ருஅ) 'வலிதின் தூங்கி' என்றியைக்க.

(சுய-சுசு) நிலவொளி கருதி 'எல்லிரா' எனப்பட்டது. மணி, தலைவன்; அதனுட் பரந்த நீர், தலைவி. 'கலம் சிதை காழ்' என்க;

கலத்தில் தேய்த்துச் சிதைக்குங் கொட்டை என்பது பொருள். 'இல்லம்', தேற்றாமரம். "இல்லின், படுகாழ்ப் படுத்துத் தேய்வையுதீஇ" என்றார் பிறரும் (பெரும் க. ௬௫ : உகடு-௬).

இதுமுதல் ஆறு பாட்டுக்கள் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறத்துக்கு இலக்கியங்களென்க.

௨௯

(க-௬) பையென்ற: ஒளி மெல்லென்ற; மணியொளியினும் மிகுதியாக ஒளிவிட்டுத் திகழும் பொன் என்றற்கு, 'மணி பொரு பொன்' என்றார். தமிழ்நாட்டினளாதலாலும், பிரிவின் வருத்தத்தாலும் மேனி கருகிற்று. இவ்வாற்றால், தலைவியின் நிறம் இன்னதென்று தேற்றுதற்கு உரையில் நீல மணியென்று நீல் நிறங் கூறினர். 'வெறியா............அாற்று இஃதொத்தி' என்னுந் தொடர், சிதைந்த நெஞ்சத்தவளியற்கையை நன்கு காட்டும்.

(௨௨-௬௰) கதழ்தல், சீறுதலெனினும் ஆம். ஆம்: ஆச்சாமரம்.

(௬௧-௪௧) 'செவ்வழியாழ் இசை': செவ்வழிப்பண் இசைக்கும் யாழ் போல, இசைக்கின்ற வண்டின் இசை. காலனை இப்பாட்டிற் கலக்கத்துக்கு மட்டும் உவமையாகக் கொள்க.

(௪௭-௪௭) கணவனையே விரும்பி உயிர் நீத்தமையின் இவ்வுலகத்திலும் நிலைத்த புகழுண்டாதலின், 'யாண்டும்' என்றார்.

(௪௮-௫௧) 'பீரலர்.........கண்' என்பதில், தலைவி, தன் தலைவன் மேற் குறை கூறாமல் வல்லமையாய்ப் பேச்சு நிகழ்த்துந் திறங் கண்டு மகிழ்தற்குரியது.

௩௭

(கள-உக) கொளுவுதல் இங்கே ஏவிவிடுதல்; 'மதி திரிந்த என் அல்லல்' எனத் தெளிவாய் வருதலின், தலைவியின் கலங்கிய நிலை விளங்கிற்று.

(உள-௬௧) 'ஆய் பூ' என்பதற்கு 'எம்மனோராற் கொழுதி விளையாடப்படும் பூ' என்னுங் கருத்தில் இங்கு உரை கூறி மகிழ்க. "அடும்பின் தார் மணியன்ன வெண்பூக் கொழுதி ஒண்டொடி மகளிர் வண்டலயரும்" என்பது குறுந்தொகை (உ௪௯).

(௬௨-௬௫) ஓடியுழி முயங்கியுழி என்பன விகாரம்.

(௬௭-௪௪) 'உயவுத் தேர்': காம வருத்தமென்னுந் தேர். 'வளியே, நின் எதிரே போம் பல கதிர்' என்றுரைப்பது சிறப்பு. 'வளியே காட்டீமோ' என்க. திங்களொளி செல்லாத இடமெல்லாம் ஞாயிற்றின் ஒளி

செல்கின்றதென்னும் நச். உரை சிறந்தது. அவரது இயற்கைப் பொருளறிவு இதனால் தெளியப்படும். 'மண்ணகமெல்லாம் நின்னை ஒருங்கு சுடுவேன்' எனி உரைப்பது நல்லது.

(௫க—௫௪) 'எல்லை எல்லியாக என்று' எனக் கொள்க. மீறிய காமக் கூட்டத்துக்குப் பொழுது வரையறையின்மையின் இங்ஙனங் கூறினாள். 'அல்லல் களைவாரிலேன்' என்பதனோடும் மேல்வரும் 'ஓஒ கடலே' என்பதைக்கூட்டி நச். மெய்ப்பாடு தோன்ற உரைத்த திறங் கண்டு மகிழ்க.

(௬௩—௬௬) 'எற்றம்', துணிவுப் பொருட்டாதல் தொல். உரி: ௩௩-ம் நூற்பாவால் அறியப்படும். 'ஆற்று', முதனிலைத் தொழிற்பெயரென்றார் பரிமேலழகர் (குறள், ௪௯௮).

(௬௮—௭௩) 'கெடலரிய காதல' ரென்றே கூட்டுக. இழத்தலில்லாத காதல ரென்பது உரை; திரும்ப வரக்கூடியவர் என்பது கருத்து. அழகிய கண்ணாவது கண்ணோட்டமாதலின், 'அங்கண்' எனப்பட்டது. உவமைக்கு இன்புறுக.

௨௮

(௧—௧௦) வேறுகும்: உண்மையன்றாகும். மாயக் கனவினும் நிலையில்லை யென்க. 'பண்பெல்லாந் துய்த்து' என்றமையால், துய்த்தல் உடம்பையன்று;பெண்மையியல்புக ளென்னும் பண்புகளை. அழுஉம், நகூஉம் என்பவைபோல 'மருளும்' என்பதும் முற்றாகக் கொள்வது சிறக்கும். உயிரினுஞ் சிறந்ததாகலின் நாண் சிறந்ததெனப்பட்டது. (தொல். கள: ௨௨) பிரிந்து விரும்புவா ரென்பதற்கு 'வேறுகி வீழ்வார்' என்றார். அத்தகையாரிடத்திற் றோன்றும் இந் நிலையில்லாத் தடுமாற்றம் ஞாலத்துள் வாழும் அனைவர்க்கும் வருமென்றுரைப்பது சிறப்பு. உலக வின்பங்களுட் காம வின்பத்தின் தலைமையும் ஆனால் அதன் நிலையாமையும் இப்பகுதியில் நன்கு விளக்கப்பட்டன.

(௧௮—௨௨) தலைவன் பிரிவாற்றாமையால் தலைவி கண்ணீர் கலங்க வருந்துகின்றாளென்பது இப்பகுதியின் கருத்து. ஆனால் அதனை ஆசிரியர் எவ்வளவு கவர்ச்சியாகத் தலைவியின் கற்பு மாட்சிமையுந் தோன்ற அழகாய்க் கூறுகின்றாரென்பது அறிந்து மகிழ்தற்குரியது. இதுபோல்வனவற்றால், இன்பந் தோன்றாவிடத்தும் இன்பந் தோன்றுமாறு செய்யும் இலக்கிய ஆசிரியர்களின் மாட்சிமை நன்கு தெளியப்படும்.

(௨௩—௩௫) காதலவன் செய்த பண்பு, நோய் தந்தது என்க. பண்பு அவன் காட்டிய காதல் முதலாயின. 'கடும்பகல் ஞாயிறு' வந்தமையால், நெய்தற்குப் பெரும்பொழுது முதுவேனிலும், சிறுபொழுது எற்பாடுமாதல் கண்டுகொள்ளப்படும்.

(௩௩—௪௪) 'துஞ்சாது துழாவும்' என்பது நன்று.

(சஙு—ருய) அங்கு என்றது, அவனிடமென்றற்கு.

(ருக—ருச) ஏமராவாறு நினைப்பினும் என்றியைத்தார் நச்.; இருந்த வாறியைப்பதே சிறப்பு. 'நீக்கிய ஊரீர்,' நீக்கும்பொருட்டுப் பேசும் ஊரீர் என்பது நன்று. அங்ஙனம் பேசுவார் அவள் தலைவனை இகழ்ந்து பேசுதலின் 'நீர் எனைத்தானும் எள்ளினும்' என்றாளாகக் கொள்க.

(ருரு—ருஅ) 'இறை இறை' என்றது, உடம்பின்கண். "கார் தலைக் கொண்டு பொழியினும் தீர்வது போலாது என் மெய்க் கனலு நோய்" என மேல் வருவதும் (கசசு : சச—ரு) நினைவுகூர்க.

(ருகூ—சுகூ) 'என்பவட்கு, நிறைந்த வருத்தத்தில் அறம் உதவுவது போல வந்து உதவினார்; கண்டு சேர மாய்ந்தது என் ஆயிழை உற்ற துயர்' என்று இருந்தவாறே எளிதாகக் கூறுக. நச். முன்பின் மாற்றியதில் உவமையுண்மையுஞ் சிதைந்தது. நிறைந்த வருத்தத்தில் உதவி செய்த லாவது நல்ல நேரத்தில் உதவுதல்.

உகூ

(க—கஎ) அரைசினுங் காமங் கொடிது என்றற்கு, 'அரைசினும் அன் பின்றாங் காமம்' எனப்பட்டதென்பது நல்லது. நிறை மல்க: பெருகி நிறைகையினாலே. கண்ணீர் வாய்ப்பக்கம் வடிந்து மார்பில் உதிர்ந்தமை தோன்றக் 'கூரெயிறுடிக் குவிமுலைமேல் வார்தர' என்றாரென்க. ஏனைய வும் இருந்தவாறே உரைக்க. எற்றி வரைந்தானை, துணிந்து நீங்கினவனை என்பது எளிது. வேட்கையின் கடுமைக்கு வறட்சியும், அதன் மிகுதிக்கு வெள்ளமும் உவமை. வானம் காய்கின்றதென்னும் வழக்கு நோக்கி மேகத் துக்கு வறட்சி கொள்க.

(கஅ—உச) முன்பே நாணும் உள்ளமும் இழந்த இவள் இப்போது பிரி வாற்றாமையால் நலனும் இழந்தாளென்றற்கு, 'நலனும்' என்றார். 'தக்க வீர்' என்றது, இகழ்ச்சி. 'மிக்கவென் நாண்,' சிறந்தவென் நாண் என்க. ஆங்கே: அவனிடத்தே; ஆங்கு, படர்க்கையில் அடங்குதல், தொல். கிளவி: உஅ சேனாவரையருரையான் அறியப்படும். 'உக்கண்......நினைந்து' என்பது கண்டாரை நோக்கித் தலைவி கூறுங் கூற்றாகக் கொள்க. செக் கரம், ஆம் சாரியை; அல்லது அழகிய புள்ளி யென்றியைப்பினும் ஆம். நக் கது; மகிழ்ந்தது. 'இவ்வுடம்பில் உயிர் நிற்றற்கு ஓர் ஊற்றாம்படி இவ் அலவனோடு யான் என் தலைவன் நிகழ்ச்சிகளைப் பன்மாண் நினைந்து நக்கது அவ்விடத்தே காண்' என இடங்காட்டினாளாகக் கொள்வது நல்லது. நச். உரைகள் வலிந்துரைகளாகத் தோன்றுகின்றன. 'இழந்திலேன், அவ னிடத்து உள' என்பது இப்பகுதியின் அழகு.

(உரு—ஙக) புரை தீர்ந்தான் என்பதற்கு இங்கே குற்றந் தீர்ந்தான் என்றுரைப்பது சிறக்கும்.

(கூஉ—கூஎ) என் நோய் பாடுவேன் எனவும், யானுற்ற எவ்வம் நினக் குரைப்பின் எனவுமே இயைத்துரைக்க.

(சுகூ—நூo) இதன்கண்ணும் எல்லாம் இயல்பாகவே உரைத்துக்கொள்க. 'அருப்பம்': அருமை; ஆகுபெயராய் அரிய அரணை உணர்த்திற்று. 'வேட்டுப் புழை அருப்பம்' (முல்லைப், உசு) என்பதும் இது. நூல்களில் இது பெருவரவினது.

(நூக—நூரு) பண்பென்றது அவள் அஞ்ஞான்றிருந்த நிலையை. 'ஆயிழை பண்பு அல்லல் தீர்ந்தன்று' என்று அப் பண்பின்மேல் ஏற்றிக் கூறினர், ஆயிழை அந்நிலையமா யிருந்தமையின்.

நூo

(க—கஎ) ஐந்திணையில் நடைபெறவேண்டிய நற்காமம் பெருந்திணை யானமை தோன்ற 'வேறொருபாற் றானதோ' என்றார். 'இனி மன்னும்' என்பதற்கு இவள்பால் இன்னும் இவை பொருந்திக் காணப்படுகின்றன என்றுரைத்துப் பின்வருவன கொள்க. நேர்ப்பார்வையாயில்லாமல் மயங்கிய பார்வையாயிருக்கின்றமை தோன்ற 'விலங்காக நோக்கி' என்றார்; தன்னை மறந்த நிலையில் இருத்தலின் இவள் நிலை இங்ஙனமாயிற்று. நிழலென்றும் வெயிலென்றும் பாராமலிருத்தலின் 'வெயிலுற' என்றார். நகூஉம் அழூஉம் என்பது போலவே 'உருகும்' என்பதுந் தலைவியின் செயலாகவே கொள்க. 'நகுதலும் நகூஉம்', 'அழுதலும் அழூஉம்' என்பவை "அன்ன மரபின் இரண்டொடும்" (தொல். வேற்றுமை மயங்: உக) என்பதனாற் கொள்ளப்படும். தோழியோர், பன்மை; தோழியோரே என்பது உரை. கேளாமோ என்பது வரையிற் கண்டார் கூற்று. இனித் தலைவி கூற்று. 'இங்கே யார் பித்துற்றுரைக் கண்டீரோ' என்பதற்கு, 'இவர் யாவர் ஏமுற்றார் கண்டீர்' என்றாள். இங்கே யாரும் பித்துறவில்லை என்பது கருத்து. 'ஓஒ அமையும்; தவறிலீர்' என்பதற்கு நச். உரைத்தவாறே கொள்க. நகையில், இன்பத்தில்; காமவின்பங்களுள் என்னும் பொருட்டு. நீத்தக்கடை பூ வாடியற்று என்க. ஆதலின் என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து என்பது. இங்ஙனமாக இப்பகுதிக்கு இருந்தவாறே உரைத்துக்கொள்வது தெளிவாயிருக்கும்.

(உகூ—உரு) "கொலையொக்குங் கொண்டு கண்மாறல்" (நான்மணி. அ) என்பவாகலின், மயங்கிப் பின் நீத்த தலைவனைக் 'கொலைவன்' என்றாள்.

(உகூ—உக) 'கதிர்பற்றி நோக்குவன், ஞாயிறே, கேள்வன் யாங்குளனாயினும் அவன் இருக்குமிடமேனுங் காட்டு; அதுதானுங் காட்டாயேல், நீ வானத்து என்னதான் செய்கின்றனை!' என்றுரைப்பின் இயல்பாயிருக்கும்.

(கூகூ—கூரு) பல் கதிர் பகலொழியச் (சில் கதிர்) சாம்பிப் பட்டீமோ என்பது எளிது.

(௩௬—௪௭) கலக்கத்தாற் கூற்றுவனையும் இடையே விளித்துக் கூறினாள். நாடோறுந் தவறாமல் எழுதலின் 'மறாஅ அரைச' எனப்பட்டது. அறாஅ, முற்று. ஆயினும் இந் நோய் தணிக எனக் கூறினாளாக உரைப்பது நல்லது.

(௪௮—௫௨) பையென வென்னுங் குறிப்பால் நச். கனவிற் காணின் என்றார். "பையெனக் காண்கு விழிப்ப" (கலி. ௧௪௨ : ௩௫) என்றது, இங்கு நினைவுகூர்தற்குரியது. 'ஐயங் கொண்டு', 'பூசலிடுவேன்' என்பவற்றின் உரைத்திறம் அறிந்துகொள்க.

(௫௩—௫௬) 'மடாஅ நறவு': தேன்; கள்போல் மாந்தராற் பெருக உண்ணப்படாமையின் என்பது. காதல் உயிரோடு தொடர்புற்ற தென்றற்கு, உயிரோடு கூடிற்று என்றாள்.

(௬௨—௭௧) 'அன்ன வான் சேவல்' என்பதில் வான், அழகெனக் கொள்க, பேடையின் கவர்ச்சிகள் கூறினாற்போலச் சேவலின் கவர்ச்சியுங் கூறிற் சிறக்குமாதலின்; தலைவிக்கு நாணும் அழகும் முதலான கவர்ச்சிகள் கூறித் தலைவற்கும் 'நல்லெழின் மார்பன்' என, மேல், அவன் எழிலுங் கூறுதல் இக்கருத்துக்கு ஒத்திருத்தலுங் காண்க. 'காதலனவனை' என இயைத்து ஒருசொல் தன்மையாகக் கொள்வது நன்று. 'நகை' இரண்டனுள் முன்னது இகழ்ச்சி; பின்னது மகிழ்ச்சி.

### ௱௫

(௧—௭) 'ஞாலத்துத் தொழில்' எனவுந், 'தொல்லியல் தொழில்' எனவுங் கொள்க. 'வல்லவன் கூறிய வினை தலைவைத்தான்போல்' என்பது பழமொழி. இங்கு இடத்துக்கேற்ப நச். காமன் இட்ட ஆணையை எனக் கூறக் கருதினார்.

(௮—௧௪) அழுதல், அல்லல், கலங்குதல், துன்பு, துயர் எனத் துன்பத்தின் பல்வேறு நிலைகளை உணர்த்தும் பல்வேறு குறியீடுகள் இங்கு வந்தன.

(௧௨—௧௫) ஆடவர், மகளிர்க்கு நல்கல் என்பது, தங் கூட்டத்தான் அம் மகளிர் நலத்தையே என்னும் நச். உரை அழகிது.

### ௱௨

(௮—௧௧) 'கேளிர்கள் நெஞ்சழுங்க' எனப் பிரிக்க.

(௧௫—௩௫) காமன் படையெடுத்து நெருக்கத்தே வந்து முற்றிவிட்டமையால் வருந்துந் தலைவியின் துன்பத்திற்கு இவ்வுவமங் கொள்ளப்படும். உரையில் 'உழிஞையான்' என்றது, பிற்காலத்தார் நொச்சியான் என்பவனை.

இப்பாட்டில் அரிய அறவுரைகள் வந்தமையும், அறவுரைகட்கு அறவுரைகளே உவமையாக வந்தமையும் அறிந்துகொள்ளற்பாலன.

ந.ந.

(க—கூ) கடுத்தெழுந்த; உறுத்தெழுந்த ; காம்புத்தீ; மூங்கிலிற் பற்றிய தீ ; இங்கு, இத் தீ வழியிடையிற் பற்றியதெனக் கொள்க. மேல், 'கரி காய்ந்த கவலை' என்பதும் அது. 'மலை பாந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழல்' என்பதற்கு, மலையிற் பாந்து அவ்விடத்தைக் கவ்விக் கொண்டு வாச்சியம்போல் இசைத்த, ஒலித்தலையுடைய அழல் என்பது உரை. கீழே, வழியின் காம்புத் தீயும் மேலே மலையின் முழங்கழலும் மறுகுதலால், அவை, தம்முள் மலைதலைக் கொண்டென அழலுகின்ற சுரம் என இருந்தவாறே உரைப்பின் சிறக்கும். மறுகல் ; குழம்புதல்; அஃதாவது மயங்குதல். 'மலைதல்', பொருதல்.

(எ—கக) 'சடைக் காந்தானது மிடற்றணிபோன்ற நின் நிறம்' என்பது நல்லது. அடுத்த தாழிசையிலும் 'ஊர்தியானது ஒளி பொருந்திய மிடற்றணியை நக்கன்ன நின் உரு' என்று கொள்க. மூன்றாந் தாழிசையிற் 'கண்ணியானது அழகிய மிடற்றணி ஒழுகிறாற்போன்ற நின் கதுப்பு' என்றுரைப்பது நல்லது. தலைவியின் நிறமும் அவள் கூந்தலின் நிறமும் நீல் நிறமாதலின், மிடற்றணியுவமை சிறந்தது. மூன்னுந் தலைவியின் நிறங் கருதி (கலி. கசரு : ச) நச். நீலமணியை உரைத்தமை இங்கே நினைவுகூர் தற்குரியது. தலைவியைப் பிரிந்த கொடுமை தோன்ற 'அறம் துறந்து' என்றார். வினை அறத்தையும் இன்பத்தையும் அளித்தலின், பொருள், 'விழுப்பொருள்' 'ஒண்பொருள்' எனப்பட்டது.

(உ0—உரு) சண்பக மலரின் நிறம் செந்நிறமாதலின், ஆதிரையான் அணிபெற மலர்ந்த சண்பகம் என்றார்.

நெய்தலிற் பாலைக்குரிய காலமுங் கருப்பொருள்களுங் கூறினமையால், உரையிறுதியில், நச். 'இளவேனிற் பருவத்தில் வருவதாகக் குறித்து வற்புறுத்தித் தலைவன் பிரிந்தனன்' எனக் கூறினார். முதல் கரு உரி என்னும் இம் மூன்றுள்ளும் உரிப்பொருள் சிறந்ததாதலின் ஆசிரியன்மார் அது கருதியே பாட்டுகட்குத் திணைவகுப்பாரென்றற்கு, நச். 'இரக்கமாகிய உரிப்பொருள் சிறத்தலின்........நெய்தலிற் கோத்தா' ரென்றார்.

நெய்தற்கலி-உரைவிளக்கம்

முற்றும்.

கலித்தொகை கருய - செய்யுள்கட்குர்

தமிழமலை இளவழகன் எழுதிய

உரைவிளக்கம் நிறைவெய்தியது.